# அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் அருளிச் செயல்கள்



Dr. ராஜலக்ஷ்மி ராமானுஜம்

முதல் பதிப்பு ஜனவரி 2004
1000 பிரதிகள்



This book is published with the financial assistance of Tirumalai Tirupati Devasthanams under their scheme of "Aid to publish religious books"

விலை : Rs. 60.00

கிடைக்குமிடம்
டாக்டர் ராஜலக்ஷ்மி ராமானுஜம்
2/6, வி. எஸ். முதலி தெரு,
சைதாப்பேட்டை,
சென்னை 600 015
தொலைபேசி: 2381 22 92

அச்சிட்டோர்:
R.N.R. Printers,
Thandavarayan Street,
Triplicane,
Chennai 600 005.
Phone: 2844 1856

# அணிந்துரை

திருமாமகள் கேள்வனான எம்பெருமானாலே மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் திவ்யசூரிகள் என்றும், அவர்கள் எம்பெருமானிடம் ஈடுபட்டு அருளிச்செய்த பாசுரங்கள் திவ்வியப்பிரபந்தம் என்றும், அப்பாசுரங்களில் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திருத்தலங்கள் திவ்ய தேசங்கள் என்றும் வழங்கப்பெறுகின்றன. இப்படிப்பட்ட திவ்யத்ரயத்தாலே ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயமே பொலிவு பெற்று விளங்குகின்றது.

ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்பிரபந்தங்களின் சிறப்பு அதற்கு ஏற்பட்டுள்ள வியாக்கியானங்களால் மேலும் மேலும் வளர்ந்தது. பிள்ளான், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர், அழகியமணவாளப்பெருமாள் நாயனார், வேதாந்த தேசிகர், மணவாளமாமுனிகள் ஆகிய ஆசார்யர்கள் பலர் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்குத் தேனும் கன்னலும் அமுதுமான வியாக்கியானங்களை அருளிச்செய்துள்ளனர். இவ்வாசார்யர்களுக்குள்ளே நாயனாருக்குத் தனிச் சிறப்பு உண்டு. ஒன்றிரண்டு திவ்வியப்பிரபந்தங்களுக்கே நாயனார் வியாக்கியானம் அருளிச்செய்துள்ளார் எனினும், மிக மிக விரிவான வியாக்கியானம் அருளிச்செய்துள்ள பெருமை அவர் ஒருவருக்கே உரியது. திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களுக்கும் திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்துள்ள வியாக்கியானம் ஆறாயிரப்படி ஆகும். ஆனால் நாயனாரோ, திருப்பாவை முப்பது பாசுரங்களுக்கு மட்டுமே ஆறாயிரப்படி வியாக்கியானம் அருளிச்செய்துள்ளார் என்பதைப் பார்க்கும்போது அவருடைய வியாக்கியானம் எவ்வளவு விரிவானது என்று உணரலாம். மேலும் திவ்வியப்பிரபந்த வியாக்கியானங்களைத் தவிர ரகசியக் கிரந்தங்களும் நாயனார் அருளிச்செய்துள்ளார். அவற்றிலும், தம்முடைய சொற்களால் அன்றிக்கே, முன்னோர்களுடைய சொற்களைக் கொண்டே அந்நூல்களை அருளிச்செய்துள்ளமை வாசாமகோசரம்.

திவ்வியப்பிரபந்தத்திற்கு உரைகள் அருளிச்செய்துள்ள ஆசார்யர்கள் பிறரைப் பற்றி ஏற்கனவே ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்று அவை புத்தக வடிவிலும் வெளிவந்துள்ளன. ஆனால் அழகியமணவாளப்பெருமாள் நாயனார் அருளிச்செய்துள்ள நூல்களைப் பற்றிய முழுமையான ஆய்வு இதுநாள் வரை மேற்கொள்ளப்படாமலே இருந்து வந்தது. அக்குறையும் இப்போது தீர்ந்துவிட்டது. நாயனாருடைய நூல்களை நன்கு கற்றவர்களால் மட்டுமே அந்நூல்களை ஆய்வு செய்ய முடியும். திருமதி ராஜலக்ஷ்மி ராமானுஜம் அவர்கள் சிறு வயதிலேயே நாலாயிர திவ்வியப்பிரபந்தங்கள், ஆசார்ய

ஹ்ருதயம் முதலிய ரகசியக்ரந்தங்கள் ஆகியவற்றைத் தமது தந்தையாரிடம் பயின்று மனப்பாடமாக அறிந்திருந்தபடியால், அவரே இவ்வாய்வுக்குத் தகுதியானவர் என்று முடிவு செய்தேன். அவரும் மிகத் திறம்பட ஆய்வு செய்து மிக நல்லதோர் ஆய்வேட்டினை நமக்கு வழங்கியுள்ளார்.

நாயனாரின் நூல்கள் என்ற இரண்டாம் இயலில், நாயனார் அருளிச்செய்த நூல்கள் எவையெவை என்றும், பெரியதிருமடல் வியாக்கியானம் நாயனாருடையது அல்ல என்றும் அவர் தகுந்த காரணங்களுடன் சுட்டிக் காட்டியிருப்பது அவருடைய ஆய்வுத் திறனுக்குச் சான்று பகர்கின்றது. நாயனாருடைய திவ்வியப்பிரபந்த வியாக்கியானங்கள் என்ற மூன்றாம் இயலில், பல்வேறு தலைப்புகளில் நாயனாருடைய உரை உத்திகளை எடுத்துக் காட்டியுள்ளமையும், அவற்றிற்குச் சான்றாக நாயனார் அருளிச் செய்துள்ள 1. திருப்பாவை வியாக்கியானம் 2. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம் 3. அமலனாதிபிரான் வியாக்கியானம் ஆகிய மூன்று நூல்களிலிருந்தும் ஒவ்வோர் எடுத்துக் காட்டுகளைக் காட்டி விளக்கியுள்ளமையும் மிக மிகச் சுவையாக அமைந்துள்ளன. நாயனாருடைய ரகசிய நூல்கள் என்ற நான்காம் இயலில், பல்வேறு பட்டியல்களை ஒப்பீடு முறையில் அமைத்தள்ளது கருத்தைக் கவர்கின்றது. நாயனாரின் தனிச் சிறப்புகள் என்ற ஐந்தாம் இயலில் நாயனாருடையவும் வேதாந்த தேசிகருடையவும் கருத்துகளை ஒப்பிட்டுக் காட்டியுள்ளமை சிந்தனைக்கு விருந்து படைக்கின்றது. பின்னிணைப்புகள் ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு மிகவும் பயன் தரத்தக்கதாக அமைந்துள்ளன.

பிறநூல்களை ஆய்வு செய்வதை விட நாயனாருடைய நூல்களை ஆய்வு செய்வது மிகவும் கடினமானதாகும். அவ்வாய்வைத் திறம்படி மேற்கொண்டதோடல்லாமல், மிகவும் தெளிவான ஆற்றொழுக்குப் போன்ற நடையில் நூலை வழங்கியுள்ளது பாராட்டத்தக்கதாகும். திருமதி டாக்டர் ராஜலக்ஷ்மி ராமானுஜம் அவர்கள் இதுபோல் மேலும் பல சிறந்த நூல்களை எழுதி வைணவ உலகிற்குத் தொண்டாற்றவேண்டும் என்று, கீதாசார்யன் திருவடிகளில் பிரார்த்தித்துக் கொள்கிறேன்.

**எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன்**
பேராசிரியர்,
வைணவத்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்

31-12-2003
சென்னை.

# முன்னுரை

வைணவமதமானது மிகமிகத் தொன்மை வாய்ந்த மதமாகும். சங்க இலக்கியங்களான பரிபாடல் முதலிய நூல்களில் வைணவக் கோட்பாடுகள் மலிந்துள்ளன. வேதத்தில் உரைக்கப் பட்டுள்ள பரம்பொருளான விஷ்ணுவையே பரம்பொருளாகக் கொண்டது வைணவமதம். இப்பரம்பெருளைப் பற்றிய வேதாந்தக் கருத்துகளை உள்ளடக்கி, ஆழ்வார்கள் அருளிச் செய்த தமிழ்ப் பாடல்கள் 'திராவிட வேதம்' என்றும் 'திவ்வியப்பிரபந்தம்' என்றும் போற்றப் பெறுகின்றன. ஆழ்வார்களுக்குப் பின்னர் தோன்றிய ஆசாரியர்கள் பலரும் ஆழ்வார்களுடைய பாடல்களில் மிகவும் ஈடுபட்டு, அவற்றை விளக்கி விரிவான உரைகளை அருளிச் செய்துள்ளனர். ஆழ்வார்கள் காலத்திற்குப் பிறகு மறைந்து விட்டிருந்த திவ்வியப் பிரபந்தங்களை அரும்பாடுபட்டு மீட்டு, தொகுத்தவர் நாதமுனிகள் எனும் ஆசாரியராவார். இவருடைய காலம் தொடங்கி இராமானுசர் காலம் வரையில் திவ்வியப் பிரபந்தங்களின் விளக்கங்கள் வாய்மொழியாகவே வழங்கப்பட்டு வந்தன. திவ்வியப் பிரபந்தங்களுக்கு முதன்முதலில் உரைகளை ஏடுபடுத்தச் செய்தவர் இராமானுசரேயாவார். இராமானுசருடைய கட்டளைப்படி, திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி என்னும் உரையை அருளினார். அதைத் தொடர்ந்து, பின்னர், திருவாய்மொழிக்கு நஞ்சீயர் அருளிச்செய்த ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்த இருபத்து நாலாயிரப்படி, நம்பிள்ளை அருளியதைப் பட்டோலை கொண்டு வடக்குத் திருவீதிப்பிள்ளை ஏடுபடுத்திய ஈடுமுப்பத்தாறாயிரப்படி, வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் அருளிய பன்னீராயிரப்படி ஆகிய உரைகள் தோன்றின. நஞ்சீயர் திருவாய்மொழியைத் தவிர வேறு சில திவ்வியப்பிரபந்தங்களுக்கும் முதன்முதலில் உரை அருளியுள்ளார். பெரியவாச்சான் பிள்ளை நாலாயிர திவ்வியப்பிரபந்தங்கள் அனைத்திற்கும் உரை அருளியுள்ளார். வாதிகேசரி அழகியமணவாளப் பெருமாள் நாயனார் திருவாய்மொழி உரையைத் தவிர, திருவிருத்தத்திற்கும் ஓர் உரை அருளிச் செய்துள்ளார். அழகியமணவாளப் பெருமாள் நாயனார் திருப்பாவை முதலிய திவ்வியப்பிரபந்தங்களுக்கு உரை அருளியுள்ளார். நாயனார், திவ்வியப்பிரபந்த கருத்துகளை விளக்கி, ஆசார்யஹ்ருதயம், அருளிச்செயல்ரகசியம் ஆகிய இரு ரகசிய நூல்களையும் அருளிச் செய்துள்ளார். இவ்வாறு ஆசாரியர்கள் பலர்

திவ்வியப் பிரபந்தங்களுக்கு விளக்க உரைகள் எழுதி வைணவத்திற்குப் பெருந்தொண்டு புரிந்துள்ளனர்.

திருவாய்மொழிக்கு அமைந்துள்ள உரைகள் அனைத்தும் முன்னரே விரிவான ஆய்வுகளுக்கு உட்படுத்தப் பட்டுள்ளன. பிள்ளான், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் ஆகியோருடைய நூல்கள் ஏற்கனவே ஆய்வு செய்யப்பட்டுள்ளன. அழகியமணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்துள்ள நூல்கள் மட்டுமே இதுகாறும் விரிவான ஆய்வுக்கு உட்படுத்தப் படாமையால், அவைகளைப் பற்றிய ஆய்வு மேற்கொள்ளப் பட்டால் மட்டுமே வைணவ உரைகளின் ஆய்வானது முழுமை பெறும். எனவே நாயனார் அருளிச் செய்த நூல்கள் இவ்வாய்வேட்டில் விரிவான ஆய்வுக்கு உட்படுத்தப்பெறுகின்றன.

## ஆய்வின் நோக்கம்

திருவாய்மொழிக்கு எழுந்த உரைகளான ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி, பன்னீராயிரப்படி முதலிய நூல்கள் திருவாய்மொழிக்கு விளக்க உரைகளாக அமைந்துள்ளன. ஆனால் நாயனார் அருளிச் செய்துள்ள ஆசார்யஹ்ருதயம் எனும் நூல் பெயருக்கு ஏற்ப, நம்மாழ்வாருடைய திருவுள்ளக் கருத்துகளைத் தெளிவாக விளக்கும் வகையில் தனிநூலாக அமைந்துள்ளது. மேலும் நாயனார் இந்நூலில், தமிழ்மொழியின் பழைமை, சிறப்பு, நம்மாழ்வாரின் பெருமைகள், திருவாய்மொழியின் தனிச்சிறப்பு, திருவாய்மொழியின் உள்ளுறைபொருள், சிறப்புப் பொருள் முதலியவற்றை மிகவும் சாரமாகச் சூத்திர வடிவில் அருளிச் செய்துள்ளார். திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களில் உள்ள சொற்களைக் கொண்டே அச்சூத்திரங்களை அமைத்துள்ளது இந்நூலுக்கு மேலும் சிறப்பை அளிக்கின்றது. அதேபோல் திவ்விப்பிரபந்தங்களிலுள்ள சொற்களைக் கொண்டே திருமந்திரம், துவயம், சரமச்லோகம் ஆகிய மும்மந்திரங்களின் பொருள்களை விளக்குகின்ற அருளிச் செயல் ரகசியம் எனும் நூலும் தனித்தன்மை பெற்று விளங்குகின்றது. நாயனார் அருளிச் செய்துள்ள திவ்வியப்பிரபந்த உரைகளும் மற்ற உரைகளை விட மிக விரிவாகவும், தத்துவக் கருத்துகளை மிக அதிக அளவில் எடுத்துக் காட்டும் வகையிலும் அமைந்துள்ளன. இத்துணை சிறப்பு வாய்ந்த நாயனாருடைய நூல்கள் முழுவதையும் பற்றிய ஆய்வு இதுகாறும் மேற்கொள்ளப் படவில்லை என்பதனைக் கருத்தில் கொண்டு, ‘அழகியமணவாளப் பெருமாள் நாயனாரின் அருளிச் செயல்கள்’ என்ற தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு ஐந்து இயல்களாகப் பகுக்கப் பெற்றுள்ளது. "தோற்றுவாய்" என்ற முதல் இயலில் ஸ்ரீவைஷ்ணவமதம், தத்துவத்திரயம், ஆழ்வார்களும் அருளிச் செயல்கள் அவதரித்தமை, ஆசாரியர்கள் வைணவத்திற்கு ஆற்றிய பணி, ஆசாரியர்களுடைய வரிசையில் நாயனார் பெறும் இடம், நாயனாரின் தோற்றம், ஆசார்யஹ்ருதயம் அவதரித்த வரலாறு, நூற்சிறப்பு முதலியவை இடம் பெறுகின்றன.

"நாயனாரின் திவ்வியப்பிரபந்த உரைகள்" என்ற இரண்டாம் இயலில் நாயனார் அருளிச்செய்த திவ்வியப்பிரபந்த உரைகள் ஆய்வு முறையில் நோக்கப் பெறுகின்றன. திருப்பாவை, கண்ணிநுண்சிறுத்தாம்பு, அமலனாதிபிரான் முதலிய பிரபந்தங்களுக்கு நாயனார் உரை அருளிச்செய்துள்ளார். இவைகளைத் தவிர, பெரியதிருமடலுக்கு நாயனார் உரை அருளிச்செய்துள்ளதாக அச்சிடப்பெற்றுள்ள நூல் ஒன்று ஆய்வுக்குட்படுத்தப்பெற்று, அந்நூல் நாயனார் அருளிச் செய்தது அல்ல என்று நிறுவப்பெறுகின்றது. தொடர்ந்து, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, அமலனாதிபிரான் ஆகிய திவ்வியப்பிரபந்தங்களுக்கு நாயனார் அருளிச் செய்துள்ள உரைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பெறுகின்றன. பிற உரைகளில் இல்லாத சிறப்புகள் நாயனார் உரைகளில் நிறைந்துள்ளமை எடுத்துக் காட்டப் பெறுகின்றது. திவ்வியப்பிரபந்த உரைகளில், வடமொழி சுலோகங்களை மேற்கோள்களாகக் காட்டும் உத்தி அனைத்து உரைகளிலுமே இடம்பெற்றுள்ளதொன்று என்றாலும், நாயனரால் உரையில் பல இடங்களில் அச்சுலோகங்களுக்கு விரிவான விளக்கமும் தந்துள்ளமை எடுத்துக் காட்டப் பெறுகின்றது. அதேபோல், மேற்கோள்களாக எடுக்கப் பெறும் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களுக்கும் விரிவான விளக்கங்கள் நாயனார் உரையில் இடம்பெற்றுள்ளமையும் எடுத்துக்காட்டப் பெறுகின்றது. சொல் நயம் பாராட்டி உரை வரைதல், அடைமொழிகளுக்குச் சிறப்பு விளக்கம் தருதல், அவதாரிகைகளில் தொடர்பு கூறுதல், வினா–விடை அமைப்பில் உரை வரைதல், பாசுரங்களைக் கொண்டே கருத்துகளை வலியுறுத்துதல், நீண்ட உரைத்தொடர்களை அமைத்து விளக்கம் தருதல், உணர்ச்சிநயம் தோன்ற உரைக்கும் சிறப்பு, சுவையான விளக்கமளிக்கும் பாங்கு, தத்துவக் கருத்துகளை மிக அதிகமாகக் கூறுதல், இதிகாச நிகழ்ச்சிகளை உதாரணம் காட்டுதல், மரபுவழக்குகள், செறிவுத்தொடர், உவமைகள், ஐதிஹ்யங்கள் முதலியவற்றைக் கூறி விளக்கமளித்தல் போன்ற பல உத்திகளைக்

இவ்வாய்வை மேற்கொள்ளுவதற்கு அனுமதியளித்த சென்னைப் பல்கலைக் கழகத்தின் நிர்வாகத்தினருக்கு எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

வைணவத்துறையில் இவ்வாய்வை மேற்கொள்வதற்கு இசைவுதந்து, அவ்வப்போது ஆலோசனைகளை வழங்கி ஊக்குவித்த வைணவத்துறை முன்னாள் தலைமைப் பேராசிரியர் டாக்டர் ஆ. நரசிம்மாசாரி அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வுக்கு ஆலோசனைகள் பல வழங்கியும், தேவைப்பட்ட நூல்கனளத் தந்தும் உதவி புரிந்த வைணவத்துறைத் தலைமைப் பேராசிரியர் டாக்டர் வி.கே.எஸ்.என். ராகவன் அவர்களுக்கு நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேடு முழுவதையும் வரியடைவே ஊன்றிப்படித்து, பொருத்தமான ஆலோசனைகளை வழங்கி, அறியாதன அறிவித்த ஸ்ரீ உ.வே. திருமலை அனந்தாண்பிள்ளை கிருஷ்ணமாசார்ய ஸ்வாமிகளுக்கு யான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

இவ்வாய்வேட்டை எழுதுவதற்குப் பலவகைகளில் உறுதுணையாக இருந்து ஆலோசனைகள் பல வழங்கி உதவிகள் பல புரிந்த வைணவத்துறை (பகுதிநேர) விரிவுரையாளர் திருமதி டாக்டர் பூமா வேங்கடகிருஷ்ணன் அவர்களுக்கு எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வேட்டை நூல் வடிவில் வெளியிடுவதற்குரிய நிதியினை வழங்கி உதவிபுரிந்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருக்கு எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அறியாக்காலத்திலிருந்தே சம்பிரதாய விஷயங்களைத் தெரியப்படுத்தி வளர்த்த எனது பெற்றோர்களுக்கும், இவ்வாய்வுப்பணியை நான் மேற்கொள்வதற்குப் பலவகைகளிலும் என்னை ஊக்குவித்த என் கணவருக்கும் நான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலினை நன்முறையில் அச்சிட்டுத் தந்த ஆர்.என்.ஆர். அச்சகத்திற்கு என்னுடைய நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

டாக்டர் ராஜலக்ஷ்மி ராமானுஜம்

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

ஸ்ரீவைஷ்ணவம் என்பது விஷ்ணுவைப் பரம்பொருளாகவும், முழுமுதற் கடவுளாகவும் கொண்ட சமயத்திற்குப் பெயராகும். 'திருமங்கை தன்னோடும் திகழ்கின்ற திருமால்' என்கிறபடியே திருமகளுடன் கூடிய நாராயணனையே கடவுளாகக் கொண்ட இச்சமயம் 'திருமால் நெறி' எனவும் அழைக்கப்படுகிறது.

## தத்வத்ரயம்

தத்துவம் (மெய்ப்பொருள்), ஹிதம் (நன்மை), புருஷார்த்தம் (பேறு) இம்மூன்றையும் தெளிவுறுத்துவதே ஒரு சமயம் அல்லது சித்தாந்தமாகும். ஸ்ரீவைஷ்ணவமானது சித்து, அசித்து, ஈச்வரன் என்ற மூன்று தத்துவங்களை அடிப்படையாகக் கொண்ட தத்வத்ரய தரிசனமாகும்.

## சித்து

சித்து (அறிவுள்ள ஜீவன்) என்பது ஞானமாய் விளங்குகின்ற ஆத்மாவாகும். இவ்வாத்மா உடல், ஐம்பொறிகள், மனம், பிராணன், அறிவு ஆகியவற்றினின்று வேறுபட்டது. அணுவாகவும், ஞான ஆனந்த மயமாகவும், அழிவற்றதாகவும், புலன்களால் அறியப்படாததாகவும் ஸ்வயம் பிரகாசமாகவும், எம்பெருமானுக்கே அடிமைப்பட்டதாகவும் அமைந்தது. இவற்றுள் எம்பெருமானுக்கு அடிமைப் பட்டிருத்தலே ஆத்மாவின் உண்மையான தன்மை என்பதே வைணவ மதத்தின் முக்கியமான கருத்தாக உள்ளது.

## மூவகை சேதநர்கள்

சித்து என்னும் சேதநர்கள் மூவகைப்படுவர். 1. பத்தர் – இவர்கள் தங்கள் வினையின் காரணமாக சம்சாரத்தில் உழல்பவர்கள். 2. முக்தர் – எம்பெருமான் திருவருளால் பாவங்கள் நீங்கப் பெற்று, சம்சாரத்தினின்று விடுபட்டு வீடுபேற்றை அடைந்தவர்கள். 3. நித்யர் – இவர்கள் பரமபதத்தில் எம்பெருமானுடன் எப்பொழுதும் இணை பிரியாதிருந்து எம்பெருமானுக்கு உகந்த கைங்கரியங்களைச் செய்து கொண்டிருக்கும் திருவனந்தாழ்வான், கருடாழ்வான், சேனைமுதலியார் போன்றவர்கள்.

## அசித்து

அசித்து என்பது அறிவற்றதாய் உருவ மாறுபாடுகளுக்கு உட்பட்டதாய் விளங்கும் பொருள்கள். இந்த அசித்தும் மூவகைப்படும். 1. சுத்தசத்வம் –

சத்வ குணத்திற்கு ஆதாரமாய் ஞான ஆனந்த மயமாய்த் திகழும் நித்ய விபூதியான பரமபதம். 2. மிச்ரதத்வம் – ரஜஸ், தமஸ் குணங்களோடு கலந்த சத்வ குணம் உடைய லீலா விபூதியான இவ்வுலகு. 3. சத்வசூன்யம் – இம்மூன்றில் ஏதுமின்றி நொடி, நாழிகை, நாள், மாதம், ஆண்டு என்னும் பகுதிகளைக் கொண்ட காலம்.

## *ஈச்வரன்*

சித்தையும் அசித்தையும் நியமிக்கும் இறைவனான நாராயணனே ஈச்வரனாவான். எண்ணிறந்த கல்யாண குணங்களையும், திவ்யமங்கள விக்கிரகத்தையும் உடையவன். சித் அசித் இரண்டையும் தனக்கு சரீரமாகக் கொண்டு அவற்றைத் தானிட்ட வழக்காய் இயக்குகின்ற, தனக்கு மேல் வேறொரு பொருள் இல்லாத பரம்பொருள். இதுவே விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் முக்கியமான கோட்பாடாகும்.

## இதம்

இறைவனாகிற பேற்றை அடைவதற்குரிய நல்ல நெறிகளே உபாயம் எனப்படும். கீதையில் கண்ணன் தன்னை அடையும் வழிகளாகக் கர்ம, ஞான, பக்தி முதலிய வழிகளைக் காட்டினாலும் கடைசியில் எல்லா தர்மங்களையும் விட்டுத் தன் திருவடிகளையே பற்றும்படி கூறினான். அதுவே வைணவ மதத்தின் மிகச் சிறந்த உபாயமாகக் கருதப்படுகிறது. நம்மாழ்வாரும் "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றருளியுள்ளார்.

## புருஷார்த்தம்

செல்வம், ஆத்மாநுபவம், எம்பெருமானை அடைதல் ஆகியவை ஆத்மா அடையத்தக்க பேறுகளாகக் கூறப்பட்டாலும் திருமாலுக்கு அடிமை செய்வதையே சிறந்த பேறாக அறுதியிட்டுக் கூறுகிறது வைணவமதம்.

## *பிரமாணங்கள்*

ஸ்ரீவைஷ்ணவம் என்பது வடமொழி வேதங்களையும் தென்மொழித் திவ்வியப் பிரபந்தத்தையும் பிரமாணங்களாகக் கொண்டது. அதனால் உபயவேதாந்தம் எனப்படுகிறது. வடமொழியில் உள்ள உபநிஷத்துக்கள், பிரம்மசூத்திரம், பகவத் கீதை ஆகிய மூன்றும் பிரஸ்தானத்திரயம் என அழைக்கப்படுகின்றன. ஸ்ரீராமாநுஜர் இவைகளுக்கு விரிவுரை(பாஷ்யம்) செய்து விசிஷ்டாத்வைதத்தை நிலைநாட்டினார். வடமொழி வேதங்களில் புரியாதவற்றை விளக்கத் தமிழ் மறையான திவ்யப்ரபந்தத்தைத் துணையாகக்

கொண்டார் என்பதை "பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ரவாக்யங்கள் ஒருங்கவிடுவர்" என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் குறிப்பிட்டுள்ளார்.[1] வேதாந்த விழுப் பொருளான விஷ்ணுவே பரம்பொருள் என்பதை ஸ்மிருதி, இதிஹாஸ புராணங்கள் நிலைநாட்டுகின்றன. ஸ்மிருதியால் வேதத்தின் முற்பகுதிப் பொருள்களும், இதிஹாஸ புராணங்களினால் வேதத்தின் பிற்பகுதிப் பொருள்களும் அறுதியிடப் பெறுகின்றன. வேதத்தின் முற்பகுதி எம்பெருமானை அடைவதற்குரிய பூஜை முறைகளைப் பேசுவதால் கர்மகாண்டம் எனவும், பிற்பகுதி பிரம்மத்தைப் பற்றிப் பேசுவதால் பிரம்ம காண்டம் எனவும் வழங்கப்படுகிறது. கர்மகாண்டத்தை விளக்க ஜைமினியின் பூர்வமீமாம்ஸையும், பிரம்ம காண்டத்தை விளக்க வியாசரின் ப்ரம்ம சூத்திரமும் தோன்றின. தமிழ் மறையானது ஆழ்வார்கள் பன்னிருவர் அருளிச் செய்த பிரபந்தங்களைக் கொண்ட தொகுப்பான நாலாயிர திவ்யப்ரபந்தம் ஆகும்.

## ரஹஸ்யத்ரயம்

இவ்வாறு வைஷ்ணவத்தின் தத்துவச் சிறப்புக்களைத் தெரிந்து கொண்ட பின் அதிலுள்ள மந்திர ரஹஸ்யங்களைத் தெரிந்து கொள்வது மிக அவசியம். "முமுக்ஷுவுக்கு அறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்று" என்று பிள்ளை லோகாசாரியரும் மோக்ஷத்தை விரும்புவன் மிக முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியவைகளாக மூன்று ரஹஸ்யங்களைக் குறிப்பிட்டுள்ளார். இவை ரஹஸ்யத்ரயம் எனப்படும். அவையாவன:

1. திருமந்திரம் – எம்பெருமான் பத்ரிகாச்ரமத்தில் தானே நரநாராயணனாய் இருந்து வெளியிட்டது "ஓம் நமோ நாராயணாய நம:" எனும் திருமந்திரமாகும்.

2. துவயம் – எம்பெருமான் பிராட்டிக்கு அருளியது. "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:" எனும் இரு பகுதிகளைக் கொண்டது.

3. சரமச்லோகம் : குருக்ஷேத்திரப் போரின் தொடக்கத்தில் ஸ்ரீகிருஷ்ணன் அருச்சுனனுக்கு "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:" என்று உபதேசித்தது.

இம்மூன்று மந்திரங்களும் எம்பெருமானுக்கும் ஜீவாத்மாவுக்கும் உள்ள உறவையும், சேதநன் எம்பெருமானை அடைந்து பெறவேண்டிய பேற்றையும் அடையும் வழியையும் தெரிவிக்கின்றன.

## அர்த்த பஞ்சகம்

ரஹஸ்யத்ரயத்தை அறிந்த ஸ்ரீவைஷ்ணவன் எல்லா சாத்திரங்களும் சொல்லும் அர்த்த பஞ்சகம் என்னும் ஐம்பொருள்களையும் அறிதல் வேண்டும். அவையாவன:

1. பரஸ்வரூபம் – அடையத்தக்க இறைவன்.
2. ஜீவஸ்வரூபம் – இறைவனை அடைகின்ற ஆத்மா.
3. உபாயஸ்வரூபம் – இறைவனை அடையும் நெறி.
4. பல ஸ்வரூபம் – அவ்வுபாயத்தால் அடையும் பேறு.
5. விரோதி ஸ்வரூபம் – இறைவனை அடையவிடாமல் தடுக்கும் பகை என்பனவாகும்.

## ஆழ்வார்கள் அவதரிக்கக் காரணம்

ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமான் நித்ய முக்தர்களோடு கூடி பரிபூர்ண அனுபவம் பெறும்பொழுதும் அதனால் சிறிதும் மகிழாது, இந்த நித்ய முக்தர்களைப் போல தன்னை அனுபவித்துக் கைங்கரியம் செய்து வாழ்வதற்குத் தகுதி பெற்றிருந்தும் அதை இழந்து கிடக்கிற சம்சாரிகளை நினைத்து வருந்தி, கரண களேபரங்களை (சரீரங்களையும், இந்திரியங் களையும்) இழந்து சிறகொடிந்த பறவை போல ஸூக்ஷ்ம நிலையிலே இருக்கும் ஆத்மாக்களுக்குக் கரண களேபரங்களைக் கொடுத்து, அதைக் கொண்டு தன்னை அடைந்து உய்வதற்கு உறுப்பாக சக்திகளையும் கொடுத்தான். அவர்கள் அறநெறி நின்று நற்பயன் பெற முக்குணத்தவர்க்கும் பயன்படுமாறு சாத்திரங்களைப் படைத்தான். அதை யாரும் உணராமல் போகவே என்றேனும் கட்கண்ணால் காண முடியாத எம்பெருமான் துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண் காணவந்து இந்நிலவுலகினில் அவதரித்துத் தானே சாத்திரார்த்தங்களை அனுட்டித்தும் காட்டினான். இப்படி அவதாரங்களில் "எனக்கு அடிமையாவார் உண்டோ" என்று இதுவே காரியமாகத் தேடித் திரிந்தும் பயன் கிடைக்காத அளவில், மிருகங்களைப் பிடிப்பவர்கள் அதே இனத்தைச் சேர்ந்ததான மிருகங்களைப் பார்வையாக வைத்துப் பிடிப்பது போன்று, மானிட இனத்தவர்களைக் கொண்டே இவர்களைத் திருத்தத் திருவுள்ளம் கொண்டான். அதற்காக "மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து"[1] என்கிறபடியே ஸம்ஸாரத்திலே உழன்று போருகின்ற சிலருக்குத் தன்னுடைய அருளைப் பொழிந்தான். இவ்வாறு எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்களே ஆழ்வார்களாவர்.

## ஆழ்வார்கள்.

எம்பெருமானிடத்தில் பக்தியில் ஆழ்ந்தவர்கள் ஆதலால் ஆழ்வார்கள் எனப்பட்டனர். அவர்கள் வேதத்தின் ஆழ்பொருளைச் சாறாகப் பிழிந்து இனிய தமிழிலே அழகிய பாசுரங்களாக வடித்தனர். "சந்தங்களாயிரமும் அறியக் கற்று வல்லாரானால் வைஷ்ணவத்வ சித்தி" என்று ஆழ்வார்களுடைய பாசுரங்களைக் கற்று, அதன் பொருளுணர்ந்து நடந்தால்தான், ஒருவனுக்கு வைஷ்ணவத்வம் சித்திக்கும் என்று நாயனார் கூறியுள்ளார்.

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐயனருள் மாறன் சேரலர்கோன் - துய்ய பட்டநாதன்
நாதனன்பர்தாள் தூளி நற்பாணன் நற்கலியன்
ஈதிவர் தோற்றத்தடைவாமிங்கு.

என்று ஆழ்வார்கள் பதின்மருடைய அவதார அடைவை மணவாளமாமுனிகள் அருளிச்செய்துள்ளார். இவர்களுடன் மதுரகவிகளையும் ஆண்டாளையும் சேர்த்து ஆழ்வார்கள் பன்னிருவர் என்பர். இவர்கள் இயற்றிய இருபத்து நான்கு பிரபந்தங்களின் தொகுப்பே நாலாயிரதிவ்யப்ரபந்தமாகும். இவை தமிழ் மறைகள் என்று போற்றப் பெறுகின்றன.

## அருளிச்செயல்கள் அவதரித்தமை

ஆழ்வார்கள் எம்பெருமானைக் கவிபாடவேண்டுமென்று நினைத்துப் பாடல்களைப் பாடியவர்களல்லர். எம்பெருமானுடைய அருளைப் பெற்று, அதனால் பக்தி மேலிட்டு, எம்பெருமானை அனுபவிக்கத் தொடங்கினர். அவ்வனுபவம் உள்ளடங்காமல் அழகிய தமிழ்ப்பாசுரங்களாக வெளிப்பட்டன. இதை நாயனார் அழகுற விளக்கியுள்ளார்.

"நீர்பால் நெய்யமுதாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே பரபக்த்யாதிமய ஜ்ஞாநாம்ருதாப்தி நிமிகிற வாய்கரை மிடைந்து மொழிபட்டு அவாவிலந்தாதி என்று பேர் பெற்றது."

நீர் பாலாய், பால் நெய்யாய், நெய் அமுதமாய், அதனால் நிரம்பின ஏரி ஒன்றை ஆழ்வாருக்கு உவமையாகக் கூறுகிறார். "மயர்வற மதிநலம் அருளினன்" என்கிற எம்பெருமானுடைய திருவருள் – கர்மத்தாலும் ஞானத்தாலும் உண்டான பக்தியின் நிலையிலேயாய், அது பரபக்தி ரூபமாய், பரபக்தியானது பரஞானமாய், பர ஞானமானது பரமபக்தியாய் விளைந்தது. நிரம்பின ஏரி தரித்திருக்க மாட்டாமல் நெளிந்து உடைவதைப்போல, பரபக்தி முதலியவைகளால் நிரம்பின ஞானமாகிற அமுதக் கடலான ஆழ்வாராகிற

ஏரியும், தாம் தரித்திருக்கும் பொருட்டு, வெள்ளமிட வேண்டும் என விரும்பி, நெளிகிற வாய்கரையாலே, "மொழிபட்டோடும் கவியமுதம்" என்கிறபடியே சொற்கள் உருவமாகப் பெருக்கெடுத்துப் பாடல்களாக வெளிவர அருளிச் செயல் அவதரித்தது என்கிறார். ஆழ்வார்களையும், அவர்களுடைய அருளிச் செயல்களையும் உயர்வாகக் கருத வேண்டும் என்ற கருத்தை

**ஆழ்வார்களையும் அருளிச் செயல்களையும்**
**தாழ்வா நினைப்பவர் தாம் நரகில் வீழ்வார்கள்**
**என்று நினைத்து நெஞ்சே எப்பொழுதும் நீஅவர் பால்**
**சென்றணுகக் கூசித்திரி.**

என்று மணவாளமாமுனிகள் கூறியுள்ளார்.

## *ஆசாரியர்கள்*

வேதாந்த விழுப் பொருளின் மேலிருந்த விளக்கான எம்பெருமானுடைய பெருமைகளை விளக்க வந்த ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்களுக்கு தம்முடைய ஞானத்தின் மூலம் விரிவுரைகள் வழங்கியவர் ஆசார்யர்கள் ஆவர். மணவாள மாமுனிகள்

**முந்துறவே பிள்ளான் முதலானோர் செய்தருளும்**
**அந்த வியாக்கியைகள் அன்றாகில் -அந்தோ**
**திருவாய்மொழிப் பொருளைத் தேர்ந்துரைக்க வல்ல**
**குருஆர்? இக்காலம் நெஞ்சே கூறு**

என்றருளிச் செய்துள்ளார். ஆசார்யர்களுடைய உரை இல்லையெனில் ஆழ்வார் பாசுரங்களிலுள்ள வேதாந்தக் கருத்துக்களும், ஆழ்பொருள்களும் நம் போல்வார்க்கு விளங்காமலே போயிருக்கக் கூடும். இவ்வகையில் "இதத்தாயாக" இருந்து வைணவத்தை வளர்ப்பதற்கு ஆசார்யர்கள் ஆற்றிய பணி மிகச் சிறந்த தொன்றாகும்.

## *குருபரம்பரை*

குருபரம்பரையானது எம்பெருமான், பெரிய பிராட்டியார், சேனை முதலியார், நம்மாழ்வார், நாதமுனிகள், உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, உடையவர், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்கு திருவீதிப் பிள்ளை, பிள்ளை லோகாசார்யர், திருவாய்மொழிப் பிள்ளை, மணவாள மாமுனிகள், முதலான ஆசார்யர்களைக் கொண்டது.

## நாதமுனிகள்

ஆழ்வார்கள் காலத்திற்குப் பிறகு மறைந்த திவ்யப்ரபந்தங்கள் அனைத்தையும் அரும்பாடுபட்டுத் தொகுத்தவர் இவரேயாவார். நம்மாழ்வார் அருளால் தாம் பெற்ற பிரபந்தங்களையும் அவற்றின் பொருள்களையும் மற்றவர்களுக்கு உபதேசித்து வந்தார். இவரிடமிருந்து இவருடைய சீடரான உய்யக்கொண்டாரும், அவரிடமிருந்து மணக்கால் நம்பியும் இவ்வரிய அர்த்தங்களைப் பெற்றனர்.

## ஆளவந்தார்

நாதமுனிகளின் திருப்பேரரான ஆளவந்தார் சிறு வயதிலேயே சிறந்த அறிஞராய்த் திகழ்ந்தவர். ஆக்கியாழ்வான் என்ற புலவனை வென்று சோழ அரண்மனையில் வாழ்ந்து கொண்டிருந்தபொழுது மணக்கால் நம்பியால் திருத்திப் பணிகொள்ளப்பட்டார். அவரிடமிருந்து பூருவாசாரியர்கள் உரைத்த அர்த்தங்களை உபதேசமாகப் பெற்றார். திவ்விய பிரப்ந்தப் பாசுரங்களுக்கு ஆளவந்தார் அளித்த விளக்கங்கள் பல பாசுர உரைகளில் காணப்படுகின்றன.

## எம்பெருமானார்

வைணவ சமய ஆசார்யர்களில் நடுநாயகமாய் அமைந்தவர் எம்பெருமானார்.

**எம்பெருமானார் தரிசனம் என்றே இதற்கு**
**நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்-அம்புவியோர்**
**இந்தத் தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த**
**அந்தச் செயல் அறிகைக்கா**

என்று மணவாள மாமுனிகள் எம்பெருமானாருடைய பெருமையை அருளிச் செய்துள்ளார். ஓராண் வழியாக இருந்த உபதேச மார்க்கத்தின் வரம்பறுத்து ஆசையுடையோர்க்கெல்லாம் கூறுமாறு பணித்தவர் இவரேயாவார். திவ்யப் பிரபந்தங்களில் கொண்ட ஈடுபாடு காரணமாக அதன் பொருளை பின்புள்ளோரும் அறிந்து பயனுற வேண்டும் என்ற காரணத்தினால் உரைகளை எழுத்து வடிவில் வருவதற்கு முதன்முதலில் வகை செய்தவரும் இவரேயாவார்.

"சொல்லார் தமிழ் ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி யாவும் தெரிந்தவரான" இராமாநுசர் திவ்யப்பிரபந்தங்களுக்குத் தாம்

உரை எழுதினால் அதுவே முடிவான உரையாக நின்று வேறு உரைகள் தோன்ற வழியில்லாமல் போய்விடும் என்பதனால் தம்முடைய சீடரான திருக்குருகைப்பிரான் பிள்ளானை திருவாய்மொழிக்கு உரையிடுமாறு பணித்தார்.

ஆழ்வார் பாசுரங்களுக்கு இராமானுசர் அருளியுள்ள நயமான விளக்கங்கள் பிற ஆசார்யர்கள் அருளிச் செய்துள்ள உரைகளில் காணப்படுகின்றன. இராமானுசர் அருளிய ஸ்ரீபாஷ்யம், கீதா பாஷ்யம் முதலான வடமொழி நூல்களில் ஸம்பிரதாய ரஹஸ்யார்த்தங்கள் ஆங்காங்கு மறைமுகமாக அருளிச் செய்யப்பட்டிருந்தாலும் அவற்றை நன்கு விளக்கக் கூடிய நூல் ஒன்றும் அவர் அருளிச் செய்யவில்லை.

## பட்டர்

கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரான பட்டர் திவ்யப்ரபந்தங்களுக்கு நயமான உரை வழங்குவதில் வல்லவராக விளங்கினார். பிரபந்தங்களுக்குத் தனியாக உரைகள் ஏதும் எழுதாவிடினும், பாசுரங்களுக்கு இவரருளியுள்ள விளக்கங்கள் மிகவும் சிறந்து விளங்குகின்றன. முமுக்ஷுவுக்கு அறிய வேண்டும் ரகசியங்களான திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய மூன்று ரகசியங்களும் சொல் வடிவில் சுருங்கியிருந்தாலும் ஆழ்ந்த அரிய பெரிய பொருள்களை உடையதாதலால், எம்பெருமானார்க்கு முன்பிருந்த ஆசாரியர்கள் இதன் சீரிய பொருளை தம் அடிபணிந்தவர்களுக்கு ஏகாந்தமாகவே உபதேசித்துப் போந்தார்கள். ஆனால் இதை ஒரு விரிவான நூலாக்கிப் பின்புள்ளாருக்கும் உபயோகப்படுமாறு முதன்முதலில் செய்தவர் பட்டரேயாவார். பட்டர் அருளிச் செய்த "அஷ்டச்லோகி" என்ற நூலே ரஹஸ்யத்ரய விவரணமான நூல்களுள் முதன்முதலில் அருளிச் செய்யப்பட்டதாகும். எட்டு சுலோகங்கள் கொண்ட இந்நூலில் முதல் நான்கு சுலோகங்கள் திருமந்திரத்தின் அர்த்தத்தையும், அடுத்த இரண்டு சுலோகங்கள் துவயத்தின் அர்த்தத்தையும், கடைசி இரண்டு சுலோகங்கள் சரமசுலோகத்தின் பொருளையும் தெரிவிக்கின்றன.

## நஞ்சீயர்

வேதாந்தி என்ற பெயருடன் மேல் நாட்டில் சிறந்த வித்வானாக விளங்கிய நஞ்சீயர், பட்டரால் திருத்திப் பணி கொள்ளப்பட்டவர். வடமொழியில் புலமை மிகுந்த நஞ்சீயர் திவ்யப்பிரபந்தப் பாசுரங்களில் மிகவும் ஈடுபாடு கொண்டு நயமான விளக்கங்களை அருளியுள்ளார். இவர் திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி உரையை அருளியுள்ளார். ஒன்பதினாயிரப்படி உரை,

பிள்ளானுடைய ஆறாயிரப்படி உரையை விட விரிவாக அமைந்துள்ளது. இவருடைய உரை பின்னர் எழுந்த உரைகள் அனைத்திற்கும் முன்னோடியாக அமைந்துள்ளது.

## நம்பிள்ளை

நஞ்சீயருடைய சீடரான நம்பிள்ளை திருவாய்மொழிக்கு முப்பத்தாறாயிரப்படி உரையினைத் தந்தருளியவர். திருவாய்மொழிக்கு அமைந்த உரைகளில் மிகுந்த சிறப்பு உடையது ஈடுமுப்பத்தாறாயிரப்படி உரையாகும். வைணவர்கள் இந்நூலையே பெரும்பாலும் காலக்ஷேப கிரந்தமாகக் கொண்டுள்ளனர். திருவாய்மொழியைத் தவிர கண்ணிநுண்சிறுத்தாம்பு, திருவிருத்தம் ஆகிய திவ்யப்பிரபந்தங்களுக்கும் இவர் உரை அருளிச்செய்துள்ளார்.

## பெரியவாச்சான்பிள்ளை

நம்பிள்ளையின் சீடரான பெரியவாச்சான் பிள்ளை நாலாயிரதிவ்யப்பிரபந்தப் பாசுரங்கள் அனைத்திற்கும் உரைஅருளிச்துள்ளார். இவர் பரந்த ரகசியம், மாணிக்கமாலை எனும் ரகசியநூல்களை அருளிச்செய்துள்ளதாகக் கூறுவர். (அந்நூல்கள் பெரியவாச்சான்பிள்ளையால் அருளிச்செய்யப்பட்டவை அல்ல என்றும், அவை பெரியவாச்சான்பிள்ளையின் திருக்குமாரரான நாயனார் ஆச்சான் பிள்ளையால் அருளிச்செய்யப்பட்டவையே என்றும் கூறப்படுகிறது.)

## வடக்குத் திருவீதிப்பிள்ளை

நம்பிள்ளையின் சீடரான வடக்குத் திருவீதிப்பிள்ளை நம்பிள்ளையின் காலக்ஷேப கோஷ்டியிலே கேட்ட விளக்கங்களை அப்படியே ஏடுபடுத்தினார். அதுவே ஈடுமுப்பத்தாறாயிரப்படியாகும். மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் 'வள்ளல்' என்ற சொல்லால் இவரைச் சிறப்பிக்கின்றார். ஈட்டை ஏடுபடுத்திய பெரிய உபகாரத்துடன் இவர் செய்த மற்றொரு மிகப் பெரிய உபகாரம் பிள்ளையுலகாசிரியர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்ற இரு மைந்தர்களை வைணவ உலகுக்குத் தந்ததேயாகும்.

## பிள்ளை உலகாசியர்

வடக்குத் திருவீதிப் பிள்ளையின் குமாரரான இவர், அஷ்டாதச ரஹஸ்யம் என்ற ரகசிய நூலை அருளியுள்ளார். அதில் முமுக்ஷுப்படி, யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, தனிப்ரவணம், தனிதுவயம், தனிசரமம் முதலிய

நூல்களில் ரஹஸ்யத்ரயங்களுடைய பொருளை விரிவான முறையில் வெளியிட்டுள்ளார். ரஹஸ்யத்ரயத்தின் பொருளை பின்புள்ளோரும் அறியுமாறு விரிவான முறையில் நூல் வடிவில் வெளிப்படுத்தியவர் இவரே எனலாம். பொய்யில்லாத மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலையில் ஏழு பாடல்களில் பிள்ளைலோகாசாரியர் அருளிய ஸ்ரீவசனபூஷணம் என்ற நூலைக் கொண்டாடுகிறார்.

## அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்

இவர் வடக்குத்திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரும், பிள்ளை உலகாசிரியரின் திருத்தம்பியாருமாவர். திவ்யபிரபந்தங்களுக்கு உரைகளும், ரகசிய நூல்களும் அருளியவர் இவர் ஒருவரே எனலாம். இவருடைய உரைகளில் தத்துவக் கருத்துக்கள் அதிக அளவில் காணப்படுகின்றன. திருவாய்மொழியின் பொருளைக் கூறும் ஆசார்ய ஹ்ருதயம் என்ற ரகசிய நூலையும், ரஹஸ்யத்ரயத்தின் பொருளை விளக்கும் அருளிச் செயல் ரஹஸ்யம் என்ற நூலையும் அருளியுள்ளார். திருப்பாவை, அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு முதலியவற்றுக்கு உரைகளும் அருளியுள்ளார். இவரது நூல்களைப் பற்றிய ஆய்வு பின்வரும் இயல்களில் மேற்கொள்ளப்படுகிறது.

# நாயனாரின் வரலாறு

ஈட்டைப் பட்டோலை கொண்ட வடக்குத்திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடைய வரலாறு யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம் என்ற நூலில் காணப்படுகிறது.

ஆழ்வாருடைய அவதாரம் என்று சொல்லலாம்படியான பெருமை பெற்ற நம்பிள்ளை ஒருநாள் தன்னுடைய திருமாளிகையிலே எழுந்தருளியிருக்கும் பொழுது அவருடைய சீடரான வடக்குத் திருவீதிப்பிள்ளையின் தாயாரான அம்மி நம்பிள்ளையை வணங்கி நின்றாள். நம்பிள்ளையும் நலம் விசாரிக்க, அம்மி, "என் மகனுக்குத் திருமணம் செய்து வைத்தேன். அவன் இல்லற வாழ்க்கையில் ஈடுபடவில்லை. குலம் தழைக்க ஒரு சந்ததி வேணும்" என்று வருத்தத்துடன் கூறினாள். நம்பிள்ளையும் சிரித்தருளி, "நீர் பெண்ணை நம்மிடத்தில் அழைத்து வாரும்" என்று கூறினார். அவரும் அப்படியே அழைத்து வர நம்பிள்ளை, "நம்மைப் போல் இருப்பானொரு பிள்ளையைப் பெறக் கடவாய்" என்று ஆசீர்வாதம் பண்ணினார். தம்சீடரான வடக்குத் திருவீதிப் பிள்ளையை அழைத்து, "நாம் சொன்னதற்காக இல்வாழ்வில்

ஈடுபடுமாறு கூறினார். பன்னிரண்டாம் மாதத்திலே ஐப்பசியில் திருவோண நட்சத்திரத்திலே பிள்ளை பிறக்க, அப்பிள்ளைக்கு "லோகாசார்யர் பிள்ளை" என்று நம்பிள்ளையின் திருநாமத்தை இட்டனர். குழந்தைக்கு ஒரு வயது நிறைந்தவுடன் பெருமாளை சேவிக்க நம்பிள்ளை முதலான பெரியவர்களுடன் கோயிலுக்குச் சென்றனர். நம்பெருமாளும் உகந்து, தீர்த்தம், சடகோபன், சந்தனம், திருமாலை பிரசாதங்களும், பட்டுச் சிற்றாடையும் பிரசாதித்தருளி அர்ச்சக முகேந "உம்மைப் போல ஒரு பிள்ளை கொடுத்தீரே, இனி நம்மைப் போல ஒரு பிள்ளை கொடும்" என்று நம்பிள்ளையை நியமிக்க, அப்படியே நம்பிள்ளையின் அருளால், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவவதாரஞ் செய்தருளினார் என்று கூறப்பட்டுள்ளது. இவர் இந்நிலவுலகில் வாழ்ந்திருந்த காலம் பதின்மூன்றாம் நூற்றாண்டாகும்.

பிள்ளை உலகாசிரியரும் அழகியமணவாளப் பெருமாள் நாயனாரும் "இணைத் தொட்டிலிட்டு வளர்ந்த இளையபெருமாளையும் பெருமாளையும் போலேயும், நம்பி மூத்த பிரானையும் கிருஷ்ணனையும் போலேயும்" இணைந்து வாழ்ந்திருந்தனர்.

## நாயனாருடைய நூல்கள்

நாயனார் திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, அமலனாதிபிரான் முதலிய பிரபந்தங்களுக்கு உரையருளிச் செய்துள்ளார். ஆசார்யஹ்ருதயம், அருளிச்செயல் ரஹஸ்யம் முதலிய ரகசியநூல்களை இயற்றியுள்ளார். திவ்விய பிரபந்தங்களுக்கு உரையருளிய ஆசிரியர்கள் அனைவரும் திருவாய்மொழிக்கு உரையெழுதி மேலும் சில பிரபந்தங்களுக்கு உரையருளியுள்ளனர். ஆனால் நாயனார் திருவாய்மொழிக்கு உரையிடாமல், அதன் உட்கருத்துகளை விளக்கும் வகையில் ரகசிய நூல்களை அருளிச் செய்துள்ளார்.

## ஆசார்யஹ்ருதயம் அவதரித்த வரலாறு

ப்ரபந்ந குலத்தலைவரான நம்மாழ்வாரருளிச் செய்த தமிழ் மறைகளான திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்ற நான்கினுள் சாமவேதசாரமான திருவாய் மொழியின் அர்த்த விசேடங்களை வெளியிட ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, இருபத்து நாலாயிரப்படி, ஈடுமுப்பத்தாறாயிரப் படி, பன்னீராயிரப்படி முதலான ஐந்து விளக்கவுரைகள் அவதரித்தன. ஆயினும் ஆழ்வாருடைய பெருமையையும், திருவாய்மொழியின் பெருமையையும், அதில் அருளிச் செய்யப்பட்ட உள்ளுறை பொருள்களையும்,

சிறப்புப் பொருள்களையும், திருவாய்மொழியின் சாரமான பொருள்களையும் அவ்வியாக்கியானங்கள் மூலம் முழுவதும் அறிந்து கொள்ள முடியாமையால், அவற்றைத் தெரிவிக்கத் திருவுள்ளம் கொண்டு எவரும் எளிதில் நினைவில் கொள்ளலாம்படி சூர்ணிகை வடிவில் "ஆசார்ய ஹ்ருதயம்" என்ற நூலை நாயனார் அருளிச் செய்துள்ளார்.

"இப்படி எழுந்தருளியிருக்கும் பிள்ளை லோகாசாரியர், பரம ரஹஸ்யமுமாய்த் திவ்ய சாஸ்திரமுமான ஸ்ரீவசனபூஷணத்தை ஸர்வரும் அதிகரித்து ஈடேறும்படி அருளிச் செய்து உலகத்தை வாழ்வித்தருள, அதனைக் கண்டு பாகவத உச்ச்ராயம் பொறுக்க மாட்டாத பொறாமை கொண்ட சிலர், நம்பெருமாள் பக்கலிலே சென்று, "ஸ்வாமி, பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீவசனபூஷணம் என்றொரு ரஹஸ்ய கிரந்தமிட்டு நம் தரிசனத்தை வீணடித்து விட்டார்" என்று கோள் சொல்ல, பெருமாளும் அதனைக் கேட்டுச் சீறிப் பிள்ளை லோகாசார்யரை அழைத்து விட, அவ்வளவிலே அவர் நீராட எழுந்தருளியிருக்க, நீராடி எழுந்தருளுகிற அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இவ்விசேஷம் கேட்டுப் பெருமாள் சந்நிதியில் சென்றவாறே பெருமாளும், அர்ச்சகமுகேந, "நாயனாரே நாம் அவதாரம் பண்ணினது தர்மத்தை நிலைநாட்டும் பொருட்டன்றோ?"என்று வினவியருள, அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும், ஸ்ரீவசனபூஷண ஸ்த்தாபநார்த்தமாகச் செய்தருளின ஆசார்யஹ்ருதயமாகிற ப்ரபந்தத்தை, பெருமாள் ச்ரோதாவாய், தாம் வக்தாவாக ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை சொன்னாற்போலே, இவர் ஆசார்யஹ்ருதயத்தை விண்ணப்பஞ் செய்து தலைக் கட்டினவாறே"பெருமாள் மிகவும் திருவுள்ளம் உகந்தருளி "இதுவும் நாம் சொன்னது ஒன்றன்றோ என்று கோள் சொன்னவர்களை வாரியடித்துத் தள்ளி விட்டருளி நாயனாருக்குத் தன் சர்வஜ்ஞ பரிச்சதங்களோட பிரம்மரதம் பிரஸாதித்து உபலாளித்து திருமாளிகையே போக விட்டருளினார். இவ்வைபவம் கேட்டுப் பிள்ளை லோகாசாரியரும் நாயனாரை 'வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருகவென்று' அதி சந்தோஷத்தோடே தழுவிக் கொண்டார்" என்று ஆசார்யஹ்ருதயம் வந்த வரலாற்றினை யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம் என்ற நூல் கூறுகிறது.

## நூல் வந்த வழி

"அநந்தரம் நாயனாரும் ஆசார்யஹ்ருதயத்தை அருளிச் செய்து தோதவத்தித் தூய்மறையோரான பெற்றார்க்குப் பிரசாதித்து, இப்படி முப்பத்தாறாயிரப்படியின் அர்த்தத்தை ஸ்ரீவசனபூஷண ஆசார்ய ஹ்ருதய

ப்ரபந்தங்களாலே தாத்பர்யமாகக் கூட்டி அருளிச் செய்கையாலே ஈட்டுத் தனியனிலே இவர்கள் தனியனையுமநு ஸந்திக்கிறது. அவரும் ஆசார்ய ஹ்ருதயம் பெற்றார்க்குப் பிரசாதித்தார். அவரும் திருநாராயணபுரத்து ஆய்க்குப் பிரசாதித்தார்" என்று யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம் ஆசார்யஹ்ருதயம் வந்த வழியினைக் கூறுகிறது. திருநாராயணபுரத்து ஆய் என்பவரிடமிருந்து இந்நூலைப் பெற்ற மணவாளமாமுனிகள் இதற்குத் தேனும் பாலும் கன்னலும் அமுதுமொத்த உரையிட்டு எங்கும் பரவச் செய்து யாவரும் பயனுறச் செய்தார்.

## இந்நூலின் பெருமை

"இந்நூல் ஒப்புயவற்றது, அருமறைதுணிந்த பொருள் முடிவை இன்சொல் அமுதொழுகுகின்ற தமிழினில் விளம்பியருளிய சடகோபருக்கு ஒப்பு ஒருவர் உலகில் உளராயின், இந்நூலுக்கும் ஒப்பு உலகில் உண்டு. இது உயர்வு நவிற்சி அன்று. வடவேங்கடம் தென்குமரியாயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து இது போன்ற ஒரு நூல் இதுகாறும் தோன்றியதில்லை. இதனுடைய அருமை பெருமைகள் சொல்லிடங்கா" என்று இந்நூல் சிறப்பித்துக் கூறப்படுகின்றது.

## இறுதிக்காலம்

"பிள்ளை லோகாசார்யரும் நாயனாரும் அதிவிரக்தராய் வாழ்ந்தருளுகின்ற காலத்திலே, நாயனார் சிறிது காலம் எழுந்தருளி பரமபதத்தை அடைந்தருள, பிள்ளைலோகாசார்யரும் மிகவும் வருந்தி நாயனார் திருமுடியைத் தம் மடியிலே வைத்துக் கொண்டு,

> மாமுடும்பை மன்னு மளவாள அண்ணலொடு
> சேமமுடன் வைகுந்தஞ் சென்றக்கால் - மாமென்று
> தொட்டுரைத்த சொல்லும் துயந்தன்னில் ஆழ்பொருளும்
> எட்டெழுத்தும் இங்குரைப்பார் ஆர்

என்று பல்வகையாலும் புலம்பி, நாயனார்க்கு சரம கைங்கர்யஞ் செய்து திருவத்யயநமும் நடத்தியருளினார்" என்று யதீந்த்ர ப்ரவண ப்ரபாவத்தில் இவரது இறுதிக்காலம் பற்றிக் கூறப்பட்டுள்ளது.[2] இதிலிருந்து இவர் ரஹஸ்யத்ரயத்தின் பொருள்களை விவரிப்பதில் வல்லவராயிருந்தார் என்பது புலப்படுகிறது. நாயனாருடைய வரலாறு வேறு எந்த நூலிலும் கூறப்படவில்லை ஆதலால் அவருடைய வாழ்க்கை பற்றி நாம் இவ்வளவே அறிந்துகொள்ள முடிகிறது.

# நாயனார் அருளிய திவ்யப்பிரபந்த உரைகள்

திருமகள் கேள்வனாகிய எம்பெருமானாலே மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் ஆழ்வார்கள் ஆவர். அவர்கள் அருளிச் செய்துள்ள திவ்யப்ரபந்தங் களுக்கு ஆசாரியர்கள் பலர் தங்களுடைய ஞானத்தினால் அவற்றின் ஆழ் பொருளைக் கண்டு தத்துவச் செறிவு மிக்க உரைகளை அருளி, அவற்றைப் பேணி வளர்த்துள்ளனர். நாதமுனிகள் காலம் தொடங்கி வாய்மொழியாக வழங்கப்பட்டு வந்த விளக்கங்கள் ''ஏரார் எதிராசரின்னருளால்'' எழுத்து வடிவில் உரைகளாக உருவெடுத்தன. முதன் முதலில் தமிழ் வேதமாகிய திருவாய்மொழிக்கு ஐந்து உரைகள் தோன்றின. ''வியாக்யானச் சக்ரவர்த்தி'' என்று வைணவ உலகம் போற்றும் பெரியவாச்சான்பிள்ளை நாலாயிரம் பாசுரங்களுக்கும் உரை அருளியுள்ளார். அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஒரு சில பிரபந்தங்களுக்கு மட்டும் உரை அருளிச் செய்துள்ளார். இவருடைய உரைகள் மற்ற உரைகளை விட மிக விரிவாகவும், விளக்கமாகவும் அமைந்துள்ளன. அவ்வுரைகளைப் பற்றிய ஆய்வு இவ்வியலில் இடம் பெறுகின்றது.

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் எந்தெந்த திவ்யப்ரபந்தங்களுக்கு உரை அருளியுள்ளார் என்பது மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ள உபதேச ரத்தினமாலைக்குப் பிள்ளை லோகம் ஜீயர் அருளிச் செய்துள்ள உரையில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

> ''நஞ்சீயர் செய்த வியாக்கியைகள் நாலிரண்டுக்கு
> எஞ்சாமை யாவைக்கு மில்லையே - தஞ்சீரால்
> வையகுருவின் தம்பி மன்னு மணவாள முனி
> செய்யுமவை தாமும் சில''

என்பது மணவாளமாமுனிகள் அருளிச் செய்துள்ள பாசுரமாகும். இதற்கு உரையருளிச் செய்துள்ள பிள்ளைலோகம் ஜீயர் ''வையகுருவின் தம்பி .......... செய்யுமவை தாமும் சில'' என்கிற பகுதிக்குப் பொருள் கூறும் பொழுது பிள்ளையுலகாசிரியருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருப்பாவை, கண்ணிநுண்சிறுத்தாம்பு முதலிய பிரபந்தங் களுக்கு வியாக்யானம் அருளிச் செய்துள்ளதாகக் குறிப்பிட்டுவிட்டு, ''இன்னமும் இவற்றை யொழிய உண்டாகிலுங் கண்டு கொள்வது'' என்றருளியுள்ளார்.

யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம் என்னும் நூலில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருப்பாவை முதலான சில பிரபந்தங்களுக்கு வியாக்யானம் செய்தருளி யுள்ளார் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது.[1]

பெரிய திருமுடியடைவு என்னும் நூலில், அழகியமணவாளப்பெருமாள் நாயனார் திருப்பாவை ஆறாயிரப்படி வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்யானம், திருவந்தாதிகளுக்கு வியாக்யானம் ஆறாயிரம் ஆகியவற்றை அருளிச் செய்துள்ளார் என்று குறிப்பிடப்பெற்றுள்ளது.

இவற்றில் திருப்பாவை வியாக்யானமும், கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்யானமும் மட்டுமே கிடைக்கின்றன. மற்றவை கிடைக்கவில்லை.

இவை தவிர அமலனாதிபிரானுக்கும் பெரிய திருமடலுக்கும் நாயனார் வியாக்யானம் அருளியுள்ளதாகச் சிலர் பதிப்பித்துள்ளனர்.

## 1.1 திருப்பாவை

பெரியாழ்வார் பெண்பிள்ளையான ஆண்டாள் அருளிச் செய்த திவ்யப்ரபந்தமே "திருப்பாவை" என்பதாகும். ஆண்டாள் இளமை தொடங்கி எம்பெருமான் பக்கலிலே பக்திப் பெருவேட்கை கொண்டு "மானிடவர்க் சென்று பேச்சுப்படில் வாழகில்லேன்"[1] என்று அந்த எம்பெருமானையே மணக்கக் கருதி அவனுடைய பிரிவுக்கு ஆற்றாமல், கண்ணனது பிரிவுக்கு ஆற்றாத ஆயர்மங்கையர் போலத் தானும் நோன்பு நோற்று உயிர் தரிக்கக் கருதினாள். ஸ்ரீவில்லிபுத்தூரைத் திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்களை ஆய்ப்பெண்டிராகவும், தன்னை அவர்களுள் ஒருத்தியாகவும், ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள வடபத்ரசாயி எம்பெருமானுடைய சன்னிதியை ஸ்ரீ நந்தகோபர் திருமாளிகையாகவும், அதில் எழுந்தருளியுள்ள எம்பெருமானைக் கண்ணனாகவும் பாவித்து அவ்வாய்ச்சிகளைப்போல் தான் அனுகரித்துத் தரித்தபடியைக் கூறுவதே திருப்பாவை என்கிற இத்திவ்யப் பிரபந்தம். எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதே நாம் அடைய வேண்டிய பேறு என்பதே திருப்பாவையின் உள்ளுறை பொருளாகும். "வேதமனைத்துக்கும் வித்தாகும்'' இப்பிரபந்தம் முப்பது பாடல்களைக் கொண்டது. இப்பிரபந்தத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை மூவாயிரப்படி எனும் வியாக்கியானத்தையும், அழகியமணவாளப்பெருமாள்நாயனார் ஆறாயிரப்படி எனும் வியாக்கியானத்தையும், ஆய் ஜநந்யாசாரியர் ஸ்வாமி ஈராயிரப்படி, நாலாயிரப்படி எனும் இரு வியாக்கியானங்களையும் அருளிச்செய்துள்ளனர். இவற்றுள் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்த ஆறாயிரப்படி என்னும் உரையே மிக விரிவானதாகும்.

## 1. 2. கண்ணிநுண்சிறுத்தாம்பு

பிரபந்த குலத்துக்குத் தலைவரான நம்மாழ்வார் "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய் தந்தையரும் அவரே"[2] என்று எம்பெருமானையே எல்லாமாகப் பற்றியவர். அவருடைய சீடரான மதுரகவிகள் "தேவுமற்றறியேன்"[1] என்றும், "அன்னையாயத்தனாய் என்னையாண்டிடும் தன்மையான் சடகோபன்"[2] என்றும் ஆழ்வாரையே தமக்கெல்லாமாகக் கொண்டவர். நம்மாழ்வாரின் அருளிச்செயல்களை இன்னிசையுடன் பாடித்திரிவதையே தமக்கு உகப்பாகக் கொண்ட மதுரகவிகள் தம்முடைய ஆசார்யனைத் துதித்து அருளிச் செய்த திவ்யப்ரபந்தமே "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்பதாகும். "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்று இந்நூல் தொடங்குவதனால் 'முதற் குறிப்பு' என்னும் இலக்கணத்தால் இந்நூலுக்கு இப்பெயர் அமைந்துள்ளது.

வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்
சீர்த்த மதுரகவி செய்கலையை - ஆர்த்த புகழ்
ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே
சேர்வித்தார் தாற்பரியந் தேர்ந்து.

என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடியே திருமந்திரத்தின் பரம ஸாரார்த்தமான (உட்பொருளான) ஆசார்ய நிஷ்டையை அறிவிப்பது இத்திவ்யப் பிரபந்தமாகும். இதன் பொருளின் சீர்மையை உணர்ந்தே எம்பெருமானுடைய தோத்திரமாகிய திவ்யப்ரபந்தங்களிடையே ஆழ்வாருடைய தோத்திரமாகிய இப்பிரபந்தத்தையும் முன்னோர் சேர்த்திட்டனர். இப்பிரபந்தத்திற்கு நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, அழகியமணவாளப்பெருமாள்நாயனார் முதலிய ஆசாரியர்கள் உரையிட்டருளியுள்ளனர். இவற்றில் ஆசார்யர்கள் பிறருடைய உரைகளைக் காட்டிலும் நாயனாருடைய உரை மிகமிக விரிவாக அமைந்துள்ளது.

## 1. 3. அமலனாதிபிரான்

எம்பெருமானுடைய நிலைகள் ஐந்து என வேதங்களும், உபநிடதங்களும் கூறுகின்றன. பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளிலும், "பின்னானார் வணங்கும் சோதி"யாய் எல்லோரும் காண்பதற்கும், கண்டு பற்றுவதற்கும் ஏற்றநிலை அர்ச்சாவதாரமாகும். எம்பெருமானுடைய ஸௌலப்ய குணம் இருட்டறையில் விளக்குப் போலே பிரகாசிப்பது அர்ச்சாவதாரத்திலேயாகும். அவ்வாறு எம்பெருமான்

அர்ச்சாரூபமாக எழுந்தருளியுள்ள திவ்யதேசங்களில் முதன்மையாகப் போற்றப் படுவது "தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கத் திருப்பதி"யாகும். 'பதின்மர் பரவும் பெருமாள்' என்று கொண்டாடப்பெறும் அத்திருவரங்கனைக் குறித்துத் திருப்பாணாழ்வார் பாடிய திவ்யப்ரபந்தமே அமலனாதிபிரான் என்பதாகும். எம்பெருமான் ஆழ்வாருக்குத் தன் திவ்ய மங்கள விக்கிரஹத்தைக் காட்ட, ஆழ்வாரும் 'அமலனாதிபிரான்' என்று தொடங்கி அரங்கனின் வடிவழகைத் திருவடி முதல் திருக்கண்கள் வரை எட்டுப் பாசுரங்களால் அனுபவித்து ஒன்பதாம் பாசுரத்தில் திருமேனியை வருணித்துப் பத்தாம் பாசுரத்தில் "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று முடித்துப் பெரிய பெருமாளோடு கலந்து விடுகிறார். இப்பிரபந்தத்திற்கு பெரியவாச்சான்பிள்ளை, அழகியமணவாளப் பெருமாள் நாயனார், வேதாந்ததேசிகர் முதலிய பூருவாசாரியர்கள் உரையிட்டருளியுள்ளனர்.

ஸ்ரீ வைஷ்ணவ க்ரந்த முத்ராபக சபையினர் 'அமலனாதிபிரான்' என்னும் திவ்யப்ரபந்தத்திற்கு இரண்டு வியாக்யானங்கள் சேர்ந்த ஒரு நூலை அச்சிட்டுள்ளனர். அதில் ஒன்று பெரியவாச்சான்பிள்ளையுடையது என்றும் ஒன்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடையது என்றும் குறிப்பிட்டுள்ளனர். இவ்வாறு அமலனாதிபிரானுக்கு நாயனார் வியாக்யானம் அருளியுள்ளதாக உபதேசரத்தினமாலையின் பிள்ளைலோகம் சீயர் உரையிலோ, யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்திலோ, பெரியதிருமுடியடைவிலோ கூறப்படவில்லை. ஆயினும் பிள்ளைலோகம் சீயர் "இவற்றை யொழிய உண்டாகிலுங் கண்டு கொள்வது" என்று அருளியுள்ளபடியாலும், இந்த வியாக்யானத்தின் நடை, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆகியவற்றுக்கு நாயனார் அருளியுள்ள உரைகளின் நடையை ஒத்துள்ளதாலும், இந்த வியாக்யானம் நாயனாருடையதாகவே அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

## 1. 4. *பெரிய திருமடல் வியாக்கியானம்*

ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம் வெளியீடாக 'பெரிய திருமடல் வியாக்யானங்கள்' என்றொரு நூல் வெளியிடப்பட்டுள்ளது. திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்துள்ள பெரிய திருமடலுக்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்துள்ள வியாக்யானமும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்துள்ளதாக ஒரு வியாக்யானமும் அந்நூலில் அச்சிடப் பட்டுள்ளன. பதிப்பாசிரியர் அந்நூலின் முகவுரையில் "நாயனார்

வியாக்யானமாகத் தெலுங்கு லிபியில் க்ரந்த முத்ராபக சபைப் பதிப்பில் வெளியிடப்பட்டிருக்கும் வியாக்யானம் ஓர் பழைய பதிப்பில் நம்பிள்ளை வியாக்யானமாக அச்சிடப்பட்டுள்ளது. இவ்வியாக்யானத்தில் "பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்" என்று சில இடங்களில் வருகையால், இது நம்பிள்ளை வியாக்யானமாக இருக்கத் தருதியில்லை என்று விளங்கும். வாக்ய சைலியைக் கொண்டு பார்க்கும் பொழுது திருப்பாவை ஆறாயிரப்படியை ஒத்திருக்கையாலே நாயனார் வியாக்யானமே இது என்று அறுதியிடத் தட்டில்லை" என்று குறிப்பிட்டுள்ளார்.

நம்பிள்ளை அருளிச் செய்துள்ளதாக ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ள அந்த வியாக்யானத்தை நாயனார் வியாக்கியானமாகக் கருதியதற்கு இங்கு இரண்டு காரணங்கள் கூறப்பட்டுள்ளன. முதலாவதாக இவ்வியாக்கியானத்தில் "பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்" என்று சில இடங்களில்[1] வருவதால், நம்பிள்ளை தம்முடைய வியாக்கியானத்திலேயே "பிள்ளையருளிச் செய்வர்" என்று தம்மைப் பற்றிக் குறிப்பிட்டிருக்க முடியாது என்பதால் இது நம்பிள்ளையுடைய வியாக்யானமாக இருக்க முடியாது என்று கூறப்பட்டுள்ளது. இக் கருத்து ஏற்கத் தக்கதல்ல.

தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறி தன்னை வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை பட்டோலை கொண்டமையால் அவ்வுரைகளில் "பிள்ளை அருளிச் செய்வர்" என்ற தொடர் வருவதில் வியப்பொன்றுமில்லை. நம்பிள்ளை அருளிய கண்ணி நுண்சிறுத்தாம்பு வியாக்யானம், திருவிருத்த வியாக்யானம், ஈடு முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானம் முதலிய வியாக்யானங்களில் பல இடங்களில் இதே போன்ற தொடர்கள் வந்துள்ளன.

1. "கூரத்தாழ்வான் மகன் பிறந்த பின்பு இடைச்சுவர் தள்ளி இரண்டு விபூதியு மொன்றாய்த்துக் காணென்று பணித்தாரென்று பிள்ளை அருளிச் செய்வர்."[2]

2. "............................... பிள்ளை அருளிச் செய்யும்படி."[3]

3. "............................... பிள்ளை அருளிச் செய்வர்."[4]

1. பெரியதிருமடல் வியாக்கியானம் பக். 35, 163, 176, 229
2. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம் ப. 220
3. திருவிருத்த வியாக்யானம் ப.
4. மேலது ப.

மேற்கூறிய இடங்களில் நம்பிள்ளை வியாக்கியானத்திலேயே 'பிள்ளை அருளிச் செய்வர்' என்ற தொடர் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. திருவாய்மொழிக்கு நம்பிள்ளை அருளியுள்ள ஈடுமுப்பத்தாறாயிரப்படி உரையிலும் 'பிள்ளை அருளிச் செய்தார்', 'நம்பிள்ளை அருளிச் செய்வர்' என்ற தொடர்கள் பல இடங்களில் உள்ளன.[1] எனவே இக்காரணத்தைக் கொண்டு இப்பெரியதிருமடல் உரை நம்பிள்ளையின் வியாக்யானமாக இருக்க முடியாது என்று கூறுவது பொருத்தம் உடையதாகாது.

மேலும் இப்பெரிய திருமடல் வியாக்யானத்தில் 'பிள்ளை அருளிச் செய்வர்' என்று குறிப்பிடப்படுகின்ற இடங்கள் அனைத்திலும் "............... இது பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்வர்" என்றே உள்ளன. ஆக, பட்டர் அருளிச் செய்த சிறப்புப் பொருளை அவருடைய காலக்ஷேப கோஷ்டியிலிருந்து கொண்டு நம்பிள்ளை கேட்ட அர்த்தங்களே அங்கு குறிப்பிடப்படுகின்றன. பட்டர் அருளிச் செய்த அர்த்தங்களைத் தாம் நேரில் கேட்டதாக நம்பிள்ளை கூறியபோது, அதை நம்பிள்ளையிடம் கேட்ட மாணாக்கர் (வடக்குத் திருவீதிப்பிள்ளை) அப்படியே உரையில் இடம் பெறச் செய்துள்ளார் என்று கொள்வது மிகவும் பொருத்தமுடையது.

இப் பெரிய திருமடல் வியாக்யானத்தில் "தன்னுடைய தாள் மேல் கிடாத்தி" என்ற இடத்தில்.

> "இது பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளை அருளிச் செய்தார். என்போல்வாரையிறே மடியிலே எடுத்துக் கொள்ள வடுப்பது. ஆச்ரிதர்க்குப் பரமப்ராப்யமான திருவடிகளிலே ஆஸுர ப்ரக்ருதியானவனை ஏறிட்டுக் கொள்வதே என்கிறாள்."[2]

என்றுள்ள இதே கருத்துகள், நம்பிள்ளையின் மற்றொரு மாணாக்கரான பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்துள்ள பெரிய திருமொழி உரையிலும்,

> "தன்னுடைய தாள் மேல் கிடாத்தி என்கிறவிடத்துக்கு 'பட்டரருளிச் செய்ய நான் கேட்டேன்' என்று பிள்ளையருளிச் செய்வர்; ப்ரதிகூலனான ஹிரண்யனை விட்டு, ஆசையை யுடைய என்னையன்றோ அம்மடியிலே ஏறிட்டுக் கொள்ள வடுப்பது என்று தம்மைப் பார்த்தருளிச் செய்தாராக".[3]

என்று அருளிச்செய்துள்ளமை இக்கருத்திற்கு வலிமை சேர்க்கிறது.

---

1. திருவாய்மொழி ஈடு 1-1-1, 1-4-7
2. பெரியதிருமடல் வியாக்யானம் ப. 176
3. பெரியதிருமொழி வியாக்கியானம் 4-10-8

பட்டர் கூறிய சிறப்புப் பொருளை நேரில் கேட்ட நம்பிள்ளை அருளிச் செய்ய, அவற்றை அவருடைய மாணாக்கர்களான பெரியவாச்சான்பிள்ளையும், வடக்குத் திருவீதிப் பிள்ளையும் முறையே தத்தமது பெரிய திருமொழி உரையிலும், பெரிய திருமடல் உரையிலும் இடம் பெறச் செய்திருக்கலாம். எனவே இப்பெரிய திருமடல் உரையானது திருவிருத்தம், கண்ணிநுண்சிறுத்தாம்பு, திருவாய்மொழி ஆகியவற்றின் உரைகளைப் போன்று நம்பிள்ளை அருளிச் செய்ய வடக்குத் திருவீதிப்பிள்ளையால் ஏடுபடுத்தப்பெற்றிருக்கலாம். எனவே ஈடு முப்பத்தாறாயிரப்படியைப் போலவே இதுவும் நம்பிள்ளை உரை என்றே வழங்கப்பட்டிருக்கலாம்.

இரண்டாவதாக இவ்வியாக்யானத்தின் நடை நாயனாருடைய திருப்பாவை ஆறாயிரப்படி நடையை ஒத்துள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. அழகியமணவாளப் பெருமாள் நாயனாருடைய வியாக்யானங்களில் பாசுர மேற்கோள்களை மிக அதிக அளவில் கையாளுதல், ஸ்ரீராமாயண சுலோகங்கள், பட்டருடைய சுலோகங்கள் முதலியவற்றிலிருந்து மேற்கோள் காட்டுதல், பாசுர வியாக்யானங்களில் தத்துவக் கருத்துக்களை மிகுதியாகக் கூறுதல் முதலிய உத்திகள் கையாளப்பட்டிருக்கும்.

பெரிய திருமடலுக்கு நாயனார் அருளிச் செய்ததாகக் கூறப்படும் இவ்வுரையில் மேற்குறிப்பிட்ட உத்திகள் எவையும் மிகுதியாகக் காணப்படாமையினால் இந்த வியாக்யானத்தை நாயனார் அருளிய வியாக்யானமாகக் கருத இடமில்லை என்று அறுதியிட்டுக் கூறலாம்.

திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, அமலனாதிபிரான் ஆகியவற்றுக்கு நாயனார் அருளிச் செய்துள்ள உரைகளை இனி ஆய்வு செய்வோம்.

## 2. பெரியவாச்சான் பிள்ளையும் அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும்:

நாலாயிரம் திவ்யப்ரபந்தங்களுக்கும் முழுமையாக உரை அருளிச் செய்த பெருமை பெரியவாச்சான் பிள்ளை ஒருவரையே சாரும். அவ்வாறு அவர் அனைத்து திவ்யப்ரபந்தங்களுக்கும் உரை அருளியுள்ள பொழுது, அவற்றில் சில திவ்யப்ரபந்தங்களுக்கு நாயனார் மீண்டும் ஓர் உரை எழுதக் காரணம் என்ன என்ற கேள்வி எழலாம். பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்துள்ள உரைகளைப் பொன்னே போல் போற்றி, அவைகளுக்கு மேலும் சில விரிவான விளக்கங்களைக் கூற வேண்டும் என்ற கருத்திலேயே நாயனார் தம்

உரைகளை அருளிச் செய்திருக்க வேண்டும். நாயனாருடைய உரைகளில் பலவிடங்களில் பெரியவாச்சான் பிள்ளையின் உரைப் பகுதிகள் அப்படியே இடம் பெற்றுள்ளமையும், சில இடங்களில் பெரியவாச்சான் பிள்ளையின் உரைப்பகுதிகளை விரிவாக விளக்கும் வகையில் அமைந்துள்ளமையும் இக் கருத்திற்கு வலிமை சேர்க்கின்றன.

இவ்வகையில், நாயனாருடைய உரையின் தன்மைகளைக் கீழ்க்கண்டவாறு காணலாம்.

1. பெரியவாச்சான்பிள்ளையின் உரையினைப் போன்றே அமைந்திருத்தல்
2. பெரியவாச்சான் பிள்ளையின் உரைகளை மேலும் விளக்குதல்.
3. பெரிய வாச்சான் பிள்ளையின் உரைகளுக்கு நயமான விளக்கமருளுதல்.
4. பெரிய வாச்சான் பிள்ளையின் உரையில் இடம் பெறாமல் நாயனார் உரையில் மட்டும் இடம் பெற்றுள்ள விளக்கங்கள்.
5. பெரிய வாச்சான் பிள்ளையின் உரையில் இடம் பெற்றுள்ள நயமான விளக்கங்கள் நாயனார் உரையில் இடம் பெறாமல் இருத்தல்.

## 2.1 *பெரிய வாச்சான் பிள்ளையின் உரையினைப்போன்றே அமைந்திருத்தல்*

நாயனாருடைய உரைகளில் பெரியவாச்சான் பிள்ளையின் உரைப் பகுதிகள் சிறிதும் மாற்றமில்லாமல் அப்படியே பல இடங்களில் காணப்படுகின்றன. பெரிய வாச்சான் பிள்ளையும், நாயனாரின் தகப்பனாரான வடக்குத் திருவீதிப் பிள்ளையும் பரமசாரியரான நம்பிள்ளையிடம் ஒரு சாலை மாணாக்கர்களாக இருந்தமையால், வடக்குத் திருவீதிப்பிள்ளையிடம் பயின்ற அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் பெரியவாச்சான் பிள்ளையின் உரைப்பகுதிகளை அப்படியே பயன் கொண்டதில் வியப்பு ஏதுமில்லை. உதாரணமாக திருப்பாவைக்கு நாயனார் அருளிச் செய்துள்ள ஆறாயிரப்படி உரைக்குத் தனியாக அவதாரிகை எதுவும் தாம் எழுதவில்லை. பெரியவாச்சான் பிள்ளையின் மூவாயிரப்படி உரையின் அவதாரிகையை அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளார் என்று கூறப்படுகிறது. அதேபோல அமலனாதிபிரானுக்கு நாயனார் அருளியுள்ள வியாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளையின் அவதாரிகையில் இடம் பெற்றுள்ள உரைப்பகுதிகள் அனைத்தும் அப்படியே

இடம் பெற்றுள்ளன. ஒரு சில உரைப்பகுதிகள் மட்டும் நாயனார் உரையில் அதிகமாக உள்ளன. மேலும் திருப்பாவையில் ஆறாவது பாசுரத்திற்கு பெரியவாச்சான்பிள்ளை அருளிய அவதாரிகையை அப்படியே வைத்துக் கொண்டு அதற்கு மேலும் சில விளக்கங்களை நாயனார் அருளிச் செய்துள்ளார்.

பாசுர உரைகளிலும், பெரியவாச்சான் பிள்ளையின் உரைத் தொடர்கள் அப்படியே சிறிதும் மாற்றமின்றி நாயனார் உரையில் காணப்படுகின்றன.

2.1.1. "மார்கழித் திங்கள்"[1] என்ற சொற்றொடருக்குப் பொருத்தமாக ஸ்ரீ ராமாயண சுலோகம் ஒன்றை எடுத்து விவரிக்குமிடத்தில் பெரியவாச்சான்பிள்ளையினுடைய மூவாயிரப்படி உரையிலுள்ள தொடர்கள் அப்படியே நாயனாருடைய ஆறாயிரப்படி உரையிலும் அமைந்துள்ளன. "போதுவீர் போதுமினோ"[2] என்ற சொற்றொடரின் ஆறாயிரப்படி உரைத் தொடர்கள் பின்வருமாறு அமைந்துள்ளன.

> "அது அப்ராப்த விஷயமாகையாலே அதிகாரி ஸம்பத்தி உண்டாக்கிக் கொண்டு இழிய வேணும்; இது வகுத்த விஷயமாகையாலே இச்சைக்கு மேற்பட வேண்டுவதில்லை. நெடுங் காலம் இழந்ததும் இவன் பக்கல் இச்சையில்லாமை. ஆகையாலே, இவனிச்சையே வேண்டுவது; சக்தியும் ப்ராப்தியும் அத்தலையில் பூர்ணமாகையாலே. இனி இவன் சேதநனான வாசிக்கு இச்சையேயிறே வேண்டுவது. இது இல்லையாகில் இவனுக்கு இது புருஷார்த்தமாக மாட்டாதிறே. க்ஷுத்ர விஷயாநுபவத்திற்குத் தனி தேட்டமானாற்போலே, அபரிச்சின்னமான விஷயத்துக்குத் துணை தேட்டமாகையாலே ஸஹகாரிகளைச் சேர்க்கிறார்கள். (போதுமினோ) ப்ரதிகூலரையுமகப்பட "தேந மைத்ரீபவிது" என்று ஸஹகாரிகளாம்படி திருத்த நினைக்குமவர்கள் அபிமுகரைப் பெற்றால் விடுவர்களோ?"

மேலே எடுத்துக்காட்டப்பட்ட ஆறாயிரப்படி உரைப்பகுதியானது பெரியவாச்சான்பிள்ளையின் மூவாயிரப்படி வியாக்கியானத்திலும் அப்படியே இடம்பெற்றுள்ளது. இதே போல் திருப்பாவை ஆறாயிரப்படியில் பல இடங்கள் உள்ளன.

---

1. திருப்பாவை 1

2. திருப்பாவை 1

2.1.2. அமலனாதிபிரான் வியாக்கியானத்திலும் இது போல் பல இடங்கள் உள்ளன.

"அபஹத பாப்மத்வாதி குணங்கள் ஆத்மாவுக்கு முண்டாயிருக்கச் செய்தேயும் ஹேயஸம்பந்தார்ஹமாய் பகவத் ப்ரஸாதத்தாலே யுண்டாக வேண்டி இருக்கும். இவன் அங்ஙனன்றிக்கேயிருக்கும். (அமலன்) சுத்தனென்றபடி. இவன் சுத்தனாகையாவது தானொருத்தன் சுத்தனாகையன்று. தன்னோடு சம்பந்தித் தாரையும் சுத்தராக்கவல்ல அடியுடைமை. துயரறு சுடரடியிறே."[1]

என்று நாயனார் உரையிலுள்ள வரிகள், பெரியவாச்சான்பிள்ளை உரையில் உள்ளவையே.

2.1.3 பெரியவாச்சான்பிள்ளை தமது கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்யானத்தின் பிரவேசத்தில் சத்ருக்னனை மதுரகவிகளுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார். "கச்சதா மாதுல குலம்" என்கிற ஸ்ரீ ராமாயண சுலோகத்தை மேற்கோளாகக் காட்டி, மிக விரிவாக வியாக்கியானித்துள்ளார்.[2] அதை அப்படியே உட்கொண்டு அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும்,

"மாதுல குலத்துக்குப் போன ஸ்ரீ பரதாழ்வனைப் பின் சென்ற ஸ்ரீ சத்ருக்னாழ் வானைப்போலே இவரும் நித்ய சத்ருக்நரிறே"[3]

என்று அருளிச் செய்துள்ளார்.

## 2.2. பெரியவாச்சான் பிள்ளையின் உரையினை மேலும் விளக்குதல்:

நாயனாருடைய உரைகள் பெரும்பாலும் பெரியவாச்சான்பிள்ளையின் உரையையொட்டி இருந்தாலும், சில இடங்களில் பெரியவாச்சான் பிள்ளையின் உரையினை விளக்குவதாக அமைந்துள்ளது.

2.2.1. ஆண்டாள் கண்ணனிடத்தில் "எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமேயாவோம்" என்று ஒழிக்க ஒழியாத உறவு வேண்டும் என்று வேண்டுகிறாள். "உற்றோமே யாவோம்" என்பதற்கு பெரியவாச்சான்பிள்ளை,

---

1. அமலனாதிபிரான் நாயனார் வியாக்கியானம் ப.
2. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்யான அவதாரிகை ப.17
3. கண்ணிநுண்சிறுத்தாம்பு நாயனார் வியாக்யானம் ப.

"ஓர் உறவைக் குறித்து அதுவாக வேணுமென்னாதொழிந்தது எல்லாவுறவும் நீயேயாக வேணுமென்கைக்காக"[1]

என்று உரையிட்டுள்ளார். இங்குப் பெரியவாச்சான்பிள்ளை 'எல்லாவுறவும்' என்று கூறியுள்ளதை நாயனார் தமது உரையில் மிக விரிவாக விளக்குகிறார்.

"நீ காட்டுக்குப் போக மூச்சடங்கும் உறவு உண்டாக வேணும்; அசலூரில் வளரப் போகப் பூண்டு புலம்புமுறவுண்டாக வேணும்; நீ அபிமத வஸ்துக்களை விஞ்சி விநியோகங் கொண்டால் 'பொறாதொழியில் செய்வதென்' என்று வயிறு பிடித்துக் கொள்ளும் உறவு வேணும்; நீ 'நில்லுங்கோள்' என்றால் நீர் பிரிந்த ஐந்துக்களைப் போலே துடிக்கும் உறவு உண்டாக வேணும்; நீ பாம்பின் வாயிலே விழுந்தாயென்றால் பிணம்படும்படியான பாந்தவம் வேணும்; கழிந்த பிழைகளுக்குக் காப்பிடுமுறவு வேண்டும்; எங்கள் வீட்டிலேயிட்ட ஆஸநத்தை ஊன்றிப் பார்க்குமுறவு வேணும்; விட்டணைக்கத் தேடில் வெளுக்குமுறவு வேணும்"[2]

என்று முறையே தயரதன், தேவகி, யசோதை, இளையபெருமாள், ஆயர்கள், ஆய்ச்சிகள், விதுரர், நப்பின்னைப்பிராட்டி, இவர்களைக் கருத்தில் கொண்டு அப்படிப்பட்ட உறவுகள் வேண்டுமென்று ஆண்டாள் கருதுவதாக நாயனார் உரையிடுகிறார்.

2.2.3. "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்" என்ற பகுதிக்குப் பெரியவாச்சான்பிள்ளை "சேஷத்வத்தின் எல்லையிலே என்னை வைத்தான்" என்றுரையிட்டுள்ளார்.[3] திருப்பாணாழ்வார் லோகசாரங்க மஹாமுனியின் தோளில் வீற்றிருந்தன்றோ இப்படி அருளிச் செய்கிறார். அப்படி இருக்கும் பொழுது சேஷத்வத்தின் (அடிமைத்தன்மையின்) எல்லையில் நிற்பதாகக் கூறுவது எங்ஙனம் பொருந்தும் என்ற கேள்வி எழும். இதற்கு நாயனார் தம்முடைய உரையில் விடைதருகிறார்.

"தம்மை வஹித்தவளவில் சேஷபூதரானபடியென்னென்னில்; திருத்துழாய் திருவபிஷேகத்தில் யிருந்ததென்னா சேஷத்வம் குலையாதே"[4]

1. திருப்பாவை மூவாயிரப்படி வியாக்யானம் ப. 510
2. திருப்பாவை ஆறாயிரப்படி வியாக்யானம் ப. 521
3. அமலனாதிபிரான் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் ப. 22
4. அமலனாதிபிரான் நாயனார் வியாக்கியானம் ப. 22

அதாவது, திருத்துழாயானது எம்பெருமானது திருமுடியிலிருந்தாலும், அது அவனுக்கு அடிமைப்பட்டதேயாகும். அதேபோல் திருப்பாணாழ்வாரும் லோகசாரங்க மஹாமுனியின் தோளில் வீற்றிருந்தாலும் அவருடைய அடியவரேயாவார். லோகசாரங்க முனிவர் வேண்டிக் கொண்டபடியினால், அவருடைய சொல்லுக்குக் கீழ்ப்பட்டே ஆழ்வார் அவர் திருத்தோளில் ஏறினார். எனவே இது அடிமைத் தனத்தின் எல்லையே என்பது நாயனார் தரும் அழகிய விளக்கம்.

2.2.2. "நன்மையால் மிக்க நான்மையாளர்கள்" என்பதற்கு "அவர்களாகிறார் ஸ்ரீ ஜநகராஜன் திருமகளாதல், கூரத்தாழ்வானாதல்" என்று பெரியவாச்சான்பிள்ளை சுருக்கமாக உரையிட்டுள்ளார்.[1] நாயனார் இந்த இடத்தை நன்கு விளக்கியுள்ளார்.

> "நன்மையால் மிகுகையாவது. தனக்குத் தீமை செய்தவர்களுக்கும் நன்மை செய்கை. இப்படியிருக்கிறவர்களாகிறார் பிராட்டி, கூரத்தாழ்வான் போல்வார்கள்"

என்று உரையிட்டுள்ளார். பிராட்டியைத் துன்புறுத்திய ஏகாக்ஷி, ஏககர்ணி முதலான ராக்ஷஸிகளை நலிய வேணும் என்ற திருவடியை மறுத்து "நாட்டில் குற்றம் செய்யாமல் இருப்பாருண்டோ? இவர்கள் ராவணனுடைய ஆணையினாலன்றோ இப்படிச் செய்தது" என்று கூறி அவர்களை ரக்ஷித்தாள் பிராட்டி என்று விரிவாக விளக்கி யுள்ளார். தம்முடைய கண்ணை இழப்பதற்குக் காரணமான நாலூரானும் நான் புக்க லோகம் புகவேணுமென்று கூரத்தாழ்வான் விரும்பியதையும் எடுத்துக் காட்டி யுள்ளார்.[2]

## 2.3. *பெரியவாச்சான் பிள்ளையின் உரைகளுக்கு நயமான விளக்கமருளுதல்:*

நாயனாருடைய உரைகள் சில இடங்களில் பெரியவாச்சான் பிள்ளையின் உரைப் பகுதிகளுக்கு நயமான விளக்கம் கொடுப்பதாக அமைந்துள்ளன.

2.3.1. "உம்பியும் நீ யுமுறங்கேல்" என்ற இடத்தில் பெரியவாச்சான்பிள்ளை "உனக்குப் பவ்யனான தம்பியும், அவனுக்குப் பவ்யனான நீயும் உறங்காதொழிய வேண்டும்." என்று உரையிட்டுள்ளார்.[3]

1. கண்ணிநுண்சிறுத்தாம்பு பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் ப. 117
2. கண்ணிநுண்சிறுத்தாம்பு நாயனார் வியாக்கியானம் ப. 121
3. திருப்பாவை மூவாயிரப்படி. ப. 300

ஆறாயிரப்படியில், ஆய்ச்சியர்கள் எம்பெருமானின் படுக்கையான ஆதிசேஷனின் அம்சமான பலராமனை எழுப்பி,

"படுக்கையிலே சாய்ந்தார் உறங்குமத்தனை போக்கி, படுக்கையான உனக்கு உறக்கமுண்டோ? அவன்படுக்கையான நீ எழுந்து எங்கள்படுக்கையை யுமுணர்த்தி எங்களுக்குத்தாராய்"[1]

என்று கூறுவதாக நாயனார் நயமான உரை அருளியுள்ளார்.

2.3.2. "ஆலமாமரத்தினிலைமேல்" என்கிற பாசுரத்தின் அவதாரிகையில் பெரியவாச்சான் பிள்ளை.

"ஊரழி பூசல் போல திருமேனியின் நிறமானது எல்லாவற்றையுங் கூடக் கொண்டு வந்து என்னெஞ்சைக் கொள்ளை கொண்டது"[2]

என்று கூறுகிறார். நாயனார் இங்கு,

"தனிப்பூச் சூடுவாரைப் போலே அவயவ ஸௌந்தர்யத்தைத் தனித்தனியே அநுபவித்த ஆழ்வாருக்கு, கலம்பக நன்மாலை சூடுவாரைப் போலே இந்த அவயவங்களும் ஆபரணங்களுமாகச் சேர்ந்த நம்முடைய சமுதாய சோபையை அனுபவிப்பிக்க வேணுமென்று திருமேனி தன் அழகைக் காட்டி அவர் நெஞ்சை இழுத்துக் கொண்டது"[3]

என்று ஒரு நயமான விளக்கம் கொடுத்துள்ளார்.

2.3.3. "மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே" என்ற இடத்தில் பெரியவாச்சான் பிள்ளை, "ஆழ்வாருடைய திருவடிகளையே ப்ராப்யமும், ப்ராபகமுமாகப் பற்றினேன். இது மெய்ம்மையே" என்று உரையிட்டுள்ளார்.[4] நாயனார் இந்த இடத்தில் இதே பொருளை அருளிச் செய்து, இது மெய்ம்மையைத் தவிர வேறில்லை என்பதை வலியுறுத்த, "ஸ்ரீ சடகோபனைத் தலையில் கொண்டிருந்தும் பொய் சொல்லுவாருண்டோ?" என்று நயமாக உரையிட்டுள்ளார்.[5] எம்பெருமானுடைய திருவடி நிலைகளை ஸ்ரீ சடகோபன் என்று கூறும் மரபினையும், ஸ்ரீசடகோபனைத் தலையில் தரித்திருக்கும்போது

1. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 305
2. அமலனாதிபிரான் வியாக். ப. 99
3. அமலனாதிபிரான் நாயனார் வியாக்கியானம் ப. 98
4. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக். ப.86
5. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம் ப. 94

எவரும் பொய் சொல்ல மாட்டார்கள் என்ற மரபினையும் நாயனார் எடுத்துக் காட்டி நயவுரை வழங்கியுள்ளார்.

## 2.4 நாயனார் உரையில் மட்டும் இடம் பெற்றுள்ள விளக்கங்கள்

பெரியவாச்சான் பிள்ளையின் உரையில் காணப்படாத சில விளக்கங்கள் நாயனாருடைய உரையில் காணப்படுகின்றன.

**2.4.1.** "கோட்டுக்கால் கட்டில் மேல்" என்ற பகுதிக்குப் பொருளுரைக்கும்போது கோடு என்பது யானையினுடைய தந்தங்களைக் குறிப்பதாகப் பொருள் கொண்டு, கம்ஸனால் ஏவப்பட்ட யானையான குவலயாபீடத்தின் தந்தங்களை முறித்து அதைக் கொண்டு நப்பின்னைப் பிராட்டிக்காகச் சமைத்த கட்டில் என்று பெரியவாச்சான்பிள்ளை உரையிட்டுள்ளார்.[1] இதை அடியொற்றி நாயனாரும் தமது உரையில் அப்பொருளைக் காட்டியுள்ளார். ஆனால் அத்துடன் நின்றுவிடாமல் வேறொரு சுவையான பொருளையும் காட்டுகிறார். "கோடு" என்பது எருதுகளின் கொம்புகளையும் குறிக்குமாதலின், நப்பின்னைப் பிராட்டியை மணம் புணர்வதற்காகப் பொருது அழித்த ஏழு எருதுகளின் கொம்புகளைக் கொண்டே நப்பின்னைக்காகச் சமைத்த கட்டில் என்ற பொருளையும் கொள்ளும் வகையில் "கோட்டியாடிற்றும் இவளுக்குக்கு; கொடுத்ததும் இவளுக்கு" என்று உரையிட்டுள்ளார். "கோட்டிடை யாடினை கூத்து அடலாயர்தம் கொம்பினுக்கே"[3] என்ற பாசுரத்தைக் கருத்தில் கொண்டு நாயானார் இவ்வாறு நயவுரை வழங்கியுள்ளார்.

**2.4.2.** "மாயனார்" என்பதற்கு "கிடந்ததோர் கிடக்கை கண்டும் என்கிறபடியே இன்று நாமுஞ் சென்றனுபவிக்கப் பார்த்தாலும் ஒருக்கடித்தன்ன வொண்ணாதே மல்லாந்தென்ன வொண்ணாதேயிருக்கிற ஆச்சர்யத்தைச் சொல்லிற்றாகவுமாம்" என்று பெரிய பெருமாளுடைய கிடையழகை நாயனார் வருணிக்கிறார்.[4] இவ் விளக்கம் பெரியவாச்சான்பிள்ளையின் உரையில் காணப்படாததொன்றாகும்.

**2.4.3.** "என்னையாண்டிடும் தன்மையான்" என்பதற்கு நம்மாழ்வார் திருவாய்மொழி யருளிச் செய்கிறபோது என்னைப் பட்டோலை எழுதச் சொல்லி

---

1. திருப்பாவை மூவாயிரப்படி ப. 332
2. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 339
3. திருவிருத்தம் - 21
4. அமலனாதிபிரான் வியாக்யானம் ப. 86

அருளிச் செய்தார். உசிதமான கைங்கர்யத்தைக் கொண்டார்"[1] என்று மதுரகவிகள் திருவாய் மொழியைப் பட்டோலை கொண்ட வரலாற்றைக் கூறுகிறார் நாயனார். இந்த விளக்கம் பெரியவாச்சான் பிள்ளையின் உரையில் காணப்படவில்லை.

## 2.5. நாயனார் உரையில் இடம் பெறாத விளக்கங்கள்:

நாயனாருடைய உரைகள் பெரும்பாலும் மிக விரிவாகவும், பெரியவாச்சான் பிள்ளையின் உரையை ஒட்டியே அமைந்துமிருந்தாலும், சில இடங்களில் பெரியவாச்சான் பிள்ளையின் உரையில் இடம் பெற்றுள்ள சில நயமான விளக்கங்கள் நாயனாருடைய உரையில் காணப்படவில்லை.

2.5.1. "மாலே மணிவண்ணா" என்ற பாசுரத்தில் கோபிமார்கள் நோன்புக்கு வேண்டிய உபகரணங்களைக் கண்ணனிடம் பிரார்த்திக்கிறார்கள். அவர்கள் வேண்டியபடியே எல்லாவற்றையும் கண்ணன் கொடுத்தான் என்று உரையிடுகின்ற பெரியவாச்சான்பிள்ளை,

> "விதாநத்துக்குத் திருவவதரித்த அன்று பணத்தையிட்டுக் கவித்துக் கொண்டு போந்த திருவனந்தாழ்வானைக் தொடாதொழிவானென்? என்னில், எல்லோரையும் போகச் சொன்னாலும் தன்னை யொழிய ஓரடியிடமாட்டாதவனாகையாலே, அத்தவாளத்தைக் கொடுத்தான்"[2]

என்று எம்பெருமானை விட்டுத் திருவனந்தாழ்வான் பிரியமாட்டாதவன் ஆகையாலே விதாநத்திற்குத் திருவனந்தாழ்வானைக் கொடுக்காமல் அத்தவாளத்தையே கொடுத்ததாக உரையிட்டுள்ளார்.[3]

ஆனால் நாயனாருடைய உரையில் இவ்விளக்கம் இடம் பெறவில்லை. விதாநத்திற்குத் திருவனந்தாழ்வானையே கொடுத்ததாகக் காணப்படுகிறது.

2.5.2. "என்னுள் புகுந்தான்" என்ற பகுதிக்குப் பெரியவாச்சான் பிள்ளை "வாலி புக்க விடத்தே மலையிட்டடைத்து, மஹாராஜர் இருந்து குறும்பு செலுத்தினாற் போலேயாக வொண்ணாதென்று என் ஸ்வரூபஜ்ஞாநம் குலையாதபடி என்னெஞ்சிலே வந்து புகுந்தான்" என்று உரையிட்டுள்ளார்.[4] ஆனால் நாயனார் உரையில் இந்த விளக்கம் இடம் பெறவில்லை.

1. கண்ணிநுண். வியாக். ப. 127
2. திருப்பாவை மூவாயிரப்படி ப. 448
3. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 464
4. அமலனாதிபிரான் வியாக்கியானம் ப. 65

**2.5.3.** "குருகூர் நம்பிபா" என்ற பகுதிக்குப் பெரியவாச்சான்பிள்ளை

> "ஆழ்வார் திருவாயாலே அருளிச் செய்தது என்றாய்த்துத் திருவாய்மொழி தன்னையுமாதரிப்பது, அதிலே குருகூர்ச் சடகோபன் என்றருளிச் செய்தாரிறே. அவ்வழியிலேயாயிற்றுத் திருவாய்மொழியில் ஆதரம் ஆழ்வார் பிரதிபாத்யராகையாலே 'குருகூர்நம்பி பா' என்று கண்ணிநுண் சிறுத்தாம்பைச் சொல்லவுமாம்"[1]

என்று இரண்டு பொருள்களைக் கூட்டியுள்ளார். ஆனால் நாயனார் உரையில் "குருகூர்நம்பி பா" என்பதற்குத் திருவாய்மொழி என்ற பொருள் மட்டுமே காட்டப் பட்டுள்ளது. கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பொருள் காட்டப்படவில்லை.[2]

## 3.1. ஸ்ரீராமாயணம், ஸ்ரீ விஷ்ணுபுராணம் முதலியவற்றிலிருந்து மேற்கோள் காட்டி சுலோகங்களுக்கு விளக்கமருளுதல்:

அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் பாசுரங்களுக்கு உரையிடும் பொழுது ஸ்ரீராமாயணம், ஸ்ரீவிஷ்ணுபுராணம், ஸ்ரீரங்கராஜஸ்தவம் முதலியவற்றிலிருந்து மேற்கோள்கள் காட்டி அவற்றிற்கு முழுமையான விளக்கங்களும் அருளியுள்ளார்.

**3.1.1.** "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற" என்ற இடத்தில் 'தண்ணீர் போலேயிருக்கிற சக்ரவர்த்தி திருமகனுக்கும் சினமுண்டோ?' என்று ஒரு வினாவை எழுப்பி அதற்கு விடையாக "ததோ ராமோ மஹாதேஜா:" என்கிற ஸ்ரீராமாயண சுலோகத்தை எடுத்து அந்த சுலோகம் முழுவதற்கும் வியாக்யானம் அருளிச் செய்கிறார்.[3]

"சக்ரவர்த்தி திருமகன் தன் திருமேனியிலே அம்புபட்டபோது ஆறியிருந்தார். திருவடிமேல் அம்பு பட்டபோது சீறினாரிறே. அடியார்களுடைய விரோதியைப் போக்கித் தன் சினம் தீர்ந்தானாக நினைத்திருக்கை" என்று அங்கு அருளியுள்ளார்.

**3.1.2.** திருவுதரபந்தத்தின் மேன்மையை விளக்குவதற்காகப் பராசரபட்டர் அருளிய ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலிருந்து "த்ரிவித சிதசித்ப்ருந்தம்" என்கிற

---

1. கண்ணிநுண். வியாக் ப. 88
2. கண்ணிநுண். வியாக். ப. 95
3. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 299

சுலோகத்தை மேற்கோளாக எடுத்து, சுலோகம் முழுவதையும் விளக்கியுள்ளார்.

> "பத்த, முத்த, நித்ய ரூபமான சேதநர்க்கும், அசேதநவர்க்கத்துக்கும் ஆச்ரயமான மேன்மையும், ஆச்ரிதர்க்குக் கட்டவு மடிக்கவுமாம்படி எளியோனான ஸௌலப்ய நீர்மையை உடையோமான ஏற்றத்தாலே பட்டங் கட்டியன்றோ நாமிருப்பது"[1]

என்று பட்டருடைய ஸ்ரீஸூக்தியை எடுத்து விளக்குகிறார்! யசோதைப் பிராட்டி கட்டக் கட்டுண்ட தழும்புக்குப் பட்டம் கட்டியது போலிருந்தது திருவுதரபந்தம் என்கிறார்.

3.1.3. கண்ணன் கட்டுண்ட நிலையைக் குறிப்பிடும் பொழுது "யதிசக்நோஷி" என்கிற ஸ்ரீ விஷ்ணு புராண சுலோகத்தை மேற்கோளாகக் காட்டி,

"துறுதுறுக்கைத் தனமுள்ளவனே! உன்னால் முடியுமாகில் நான் கட்டிய கட்டை அவிழ்த்துக் கொண்டு போ" என்று யசோதை கூறுவதாக விளக்கமும் தருகிறார்.[2]

## 3.2. சுலோகங்களை மேற்கோள்காட்டாமல் அதன் பொருளை மட்டும் கூறுதல்

நாயனார் தம்முடைய உரையில் சில இடங்களில் வடமொழி சுலோகங்களை மேற்கோளாக எடுக்காமல் அவற்றின் பொருள்களை மட்டும் கருத்தில் கொண்டு விளக்கம் அருளியுள்ளார்.

3.2.1 மார்கழி நோன்புக்கு வேண்டிய உபகரணங்களைப் பிரார்த்திக்கும் ஆய்ப் பெண்களை நோக்கி, "நோன்பு நோற்கக் காரணம் என்ன? எந்த ஆதாரத்தைக் கொண்டு இந்த நோன்பை நோற்கிறீர்கள்? என்று கண்ணன் வினவ, அதற்கு அவர்கள் மேலையார் செய்தவற்றையே நாங்களும் பின்பற்றுகிறோம் என்று கூறினர். இங்கு "மேலையார் செய்வனகள்" என்பதற்கு,

> "யாதொன்றை யாதொன்றை ச்ரேஷ்டர் ஆசரித்தார்கள், யாதொரு அளவு செய்தார்கள்; அவ்வளவு லோகமநுவர்த்திக்கும்"[3]

---

1. அமலனாதிபிரான் வியாக். ப. 51
2. கண்ணிநுண். வியாக். ப. 89
3. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 452

என்று, "யத்யதாசரதி ச்ரேஷ்ட:"[1] என்ற பகவத்கீதை சுலோகத்தைத் திருவுள்ளத்தில் கொண்டு உரை அருளிச் செய்துள்ளார். இங்கு சுலோகம் எடுத்துக் கூறப்பெறாமல் அதன் பொருள் மட்டும் கூறப்பெற்றுள்ளது.

3.2.2. "பரியனாகி வந்த அவுணன்" என்பதற்கு, "தாநஹம் த்விஷத: க்ரூரான்"[2] என்ற பகவத்கீதை சுலோகத்தைக் கருத்தில் கொண்டு "ஆஸுரிம் யோநிமாபந்நனாய்" என்று உரையிட்டுள்ளார்.[3]

3.2.3. "மேவினேனவன் பொன்னடி" என்ற இடத்தில் "ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா"[4] என்ற ஸ்ரீராமாயண சுலோகத்தைத் திருவுள்ளத்தில் கொண்டு "அநந்ய தைவத்வத்தையுடைய பிராட்டி பெருமாளுக்கு எடுத்துக் கை நீட்டப் பெரிய பெருமாள்பாடு புகுமோபோலே" என்று பொருளை மட்டும் காட்டியுள்ளார்.[5]

## 3.3. ஒரே இடத்தில் மிக அதிகமான பாசுர மேற்கோள்கள் காட்டுதல்:

பாசுரத்திலுள்ள ஒரு சொல்லை விவரிக்கும் பொழுது அதே பொருளைத் தருகின்ற பல பாசுரங்களை ஒரு சேர எடுத்து மேற்கோளாகக் காட்டுகிறார்.

3.3.1. "ஓங்கி உலகளந்த"[6] என்ற பகுதிக்கு "என்னிது மாயம் என்னப்பனறிந்திலன்"[7], "அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்"[8], "பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று"[9], "கொண்டானையல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார்"[10], "நீள்வான் குறளுருவாய்"[11], "தக்கணைக்கு மிக்கானை"[12] என்று பல பாசுரங்களிலிருந்து உலகமளந்த சரித்திரத்தை மேற்கோளாகக் காட்டுகிறார்.

3.3.2. "உவந்த உள்ளத்தனாய்"[13] என்கிற பாசுரத்தில், "உலகமளந் தண்டமுற நிவந்த நீண்முடியன் – கடியார் பொழிலரங்கத் தம்மான்" என்று இந்த லோகங்களை யடையத் தன் திருவடிகளாலே அளந்து கொண்டவர் பெரியபெருமாள் என்று திருப்பாணாழ்வார் அருளிச் செய்துள்ளார். ஆனால் நம்மாழ்வார் பாசுரங்களில் திருவேங்கடமுடையானன்றோ உலகமளந்ததாக உள்ளது என்று ஒரு வினாவை எழுப்பி அதற்கு ஆழ்வார் பாசுரங்களிலிருந்து

1. பகவத்கீதை
2. பகவத்கீதை
3. அமல. வ்யாக். ப. 91
4. ராமாயணம்
6. கண்ணி. வ்யாக். ப. 94
6. திருப்பாவை 3
7. பெரியாழ். திரு. 1-8-8
8. திருவாய். 10-3-6
9. நாச். திரு. 11-5
10. முதல் திருவ. 79
11. பெரிய. திரு.11.7.2
12. மேலது
13. அமல. 2

மேற்கோள் காட்டி அத் திருவேங்கடமுடையானும் இங்குக் கண் வளர்ந்தருளுகிற பெரியபெருமாளே என்று கூறுகிறார்.

"அன்று ஞாலமளந்த பிரான் – சென்று சேர் திருவேங்கடம்"[1] என்றன்றோ நம்மாழ்வார் வார்த்தை; திருவேங்கடமுடையான் திருவடி காண வேணுமென்று வழிபாடு செய்த ஸூரிகளும் "எந்நாளே நாம் மண்ணளந்த இணைத் தாமரைகள் காண்பதற்கு"[2] என்றன்றோ பிரார்த்தித்தார்கள். "அடிக்கீழ்மர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்"[3] என்று தன் திருக்கையாலே "உலகமளந்த பொன்னடியை"[4] காட்டிக் கொடு நிற்கிறவனுமாய், "தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடம்"[5] என்கிறபடியே "அண்டமுற நிவந்த நீண் முடியனுமாய்"[6] நிற்கின்றான் திருவேங்கட முடையானன்றோ என்று கூறி அந்தத் திருவேங்கடமுடையானாகிறானும் இங்குக் கண் வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளே" என்று நாயனார் உரையிட்டுள்ளார்.

3.3.3. மதுரகவிகள் "அன்னையாயத்தனாய் என்னை ஆண்டிடும் தன்மையான்"[7] என்கிறார். முற்பட பிரியத்தைச் செய்து பிற்பட ஹிதத்தைச் செய்து என்னைக் கைக் கொண்டவர் நம்மாழ்வார் என்கிறார் என்று இங்கு நாயனார் உரையிடுகின்றார். இவ்வாறு முதலில் பிரியத்தையும், பிறகு ஹிதத்தையும் நம்மாழ்வார் செய்தார் என்பதற்கு நாயனார் ஆழ்வாருடைய பாசுரங்களிலிருந்து மேற்கோள் காட்டி விளக்குகிறார். "உம்முயிர் வீடுடையான்"[8], பத்துடையடியவர்க்கெளியவன்"[9], "பரிவதிலீசனைப் பாடி விரிவது மேவலுறுவீர் – நன்னீர் தூய்ப் புரிவதுவும் புகை பூவே"[10] என்று பிரியமான பகவத் விஷயத்தை உபதேசித்து, பின்பு "கழிமின் தொண்டீர்கள் – கழித்து தொழுமின்"[11] என்று ஹிதத்தை உபதேசித்ததாக உரையிட்டுள்ளார்.

## 3.4. பாசுரம் முழுவதும் மேற்கோளாகக் காட்டி அவற்றிற்கு முழுமையான வியாக்கியானமருளுதல்

ஒரு பாசுரத்திற்கு உரையிடும் பொழுது வேறொரு பாசுரத்தை மேற்கோளாக எடுத்து அப்பாசுரத்திற்கு முழுமையான வியாக்யானம் அருளுகின்றமை நாயனாருடைய உரைகளில் மிக அதிகமாகக் காணப்படுகிறது.

---

1. திருவாய். 6-10-6
2. திருவாய். 6-10-6
3. திருவாய். 6.10.11
4. பெரிய. திரு. 5-8-9
5. நான். திரு. 45
6. அமலனாதிபிரான் 2
7. கண்ணி. 4
8. திருவாய். 1-2-1
9. மேலது 1-3-1
10. மேலது 1-6-1
11. மேலது 1-6-8

**3.4.1.** ஆய்ப்பெண்கள் மார்கழி நோன்பு நோற்கத் தொடங்கிய அளவில் மழைக்கதிபதியான வருணன் 'நாமும் எம்பெருமானடி பணியுமவர்கட்கு உதவி செய்து நன்மை பெறுவோம்' என்று கருதி அவர்களிடம் வந்து "நான் உங்கள் திறத்துச் செய்ய வேண்டும் அடிமைத் திறத்தை ஆய்ந்துரைக்க வேண்டும்" என்று பிரார்த்திக்க, ஆய்ச்சியர்கள், "தாழாதே சார்ங்கமுதைத்த சரமழை போல்"[1] பெய்ய வேண்டும் என்கின்றனர். எம்பெருமானடியார் திறத்தில் மற்ற தேவதைகளும் அடிமை செய்வர்கள் என்ற கருத்தை, "திறம்பேன்மின் கண்டீர்"[2] என்னும் நான்முகன் திருவந்தாதிப் பாசுரம் கொண்டு நாயனார் விளக்குகிறார். எம்பெருமானடியார்களிடம் வணங்கி அனுகூலராய்ப் போகும்படி நமனும் தன் தூதுவர்களைக் கூறினான் என்ற பொருளுள்ள இப்பாசுரத்தை முழுவதும் எடுத்து, அதற்கு மிக விரிவான வியாக்கியானமும் அருளிச் செய்துள்ளார்.

**3.4.2.** "உவந்த உள்ளத்தனாய்"[3] என்கிற பாசுரத்திற்கு நாயனார், 'அரங்தத்தரவினணையான் – திருவுலகளந்தருளியதால் வந்த களைப்பும், அரக்கர்களை அழித்ததால் ஏற்பட்ட களைப்பும் தீர அழகிய சோலைகள் சூழ்ந்த திருவரங்கத்திலே தன் திருவடிகளையும் திருத்தோள்களையும் நீட்டிக் கொண்டு சாய்ந்தான்' என்று உரையிட்டு, அதற்கு உதாரணமாக "கொடியார் மாடக் கோளூரகத்தும்"[4] என்கிற பாசுரத்தை முழுமையாக எடுத்து விளக்குகிறார்.

**3.4.3** "பெருமாயன்"[5] என்பதற்கு, "அவன் நினைக்கவொண்ணாத ஆச்சர்ய சேஷ்டிதங்களை உடையவன்; அதாவது அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும் தொழுகையுமான இச்சேஷ்டிதங்கள் என்று கூறி, இதை மேலும் விளக்குவதற்காக "முழுதும் வெண்ணை அளைந்து"[6] என்கிற பாசுரத்தை மேற்கோளாக எடுத்து அப்பாசுரம் முழுவதையும் விரிவாக விளக்குகிறார்.

## 3.4 வினா விடை அமைப்பு

நாயனார், பாசுரங்களின் பொருளைக் கூறும்பொழுது தாமே ஒரு வினாவை எழுப்பி அதற்குரிய விடையும் தந்து விளக்கும் உத்தியையும் கையாண்டுள்ளார்.

---

1. திருப்பாவை
2. நான். திரு. 68
3. அமல. 2
4. திருவாய். 8.3.5
5. கண்ணி. 1
6. பெருமாள் திரு. 7.8

**3.4.1** "புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லாவரக்கனை"[1] என்ற பாசுரத்தில் ஆண்டாள் கிருஷ்ணனுடைய சரித்திரத்துடன் ஸ்ரீராமபிரானுடைய சரித்திரமும் கூறுவதற்குக் காரணம் என்ன? என்று ஒரு கேள்வியை எழுப்பி, தங்களைப் போல் ஒரு பெண்ணான சீதைப்பிராட்டியையுடைய பிரிவுத் துயர் பொறுக்க மாட்டாதவருடைய சரித்திரம் என்பதனால் கூறுகிறார்கள் என்று விடையும் தருகிறார்.

> "தங்களுக்குப் பள்ளமடையான கிருஷ்ண விருத்தாந்தம் சொல்லிற்றாகில், பின்னை ராம விருத்தாந்தமென்னென்னில், தங்களோடு ஒரு கோவையான பிராட்டிபிரிவு பொறுக்க மாட்டாதவருடைய விருத்தாந்தமென்று சொல்கிறார்கள்"

**3.4.2** "துண்ட வெண்பிறையன் துயர் தீர்த்தவன்"[2] என்ற பாசுரத்தில், 'தேவர்களுக்குக் காரியம் செய்யும் எம்பெருமான் உம்முடைய காரியம் செய்வானோ?' என்று ஆழ்வாரைச் சிலர் கேட்பதாக கொண்டு, 'அவன் உபய விபூதி நாயகனாகையாலே எக்காரியமும் செய்வான்' என்று பதிலிறுப்பதாக,

> "வெறும் ப்ரஹ்மருத்ராதிகளுக்கே சேஷியென்றன்றே அவன் முடி கவித்திருக்கிறது, 'பதிம் விச்வஸ்ய' என்றும் சொல்லுகிறபடியே உபயவிபூதி நாதனென்றன்றோ"

என்று உரையிட்டுள்ளார்.

**3.4.3** "அருள் கொண்டாயிரம் இன்தமிழ் பாடினான்"[3] என்ற தொடரை விளக்கும் பொழுது, 'நம்மாழ்வாருடைய திருவாய்மொழி பிரமாணம் ஆனது எவ்வாறு?' என்று ஒரு வினாவை எழுப்பி, 'அது எம்பெருமானுடைய அருளாலே வந்ததாலே' என்று விடையும் அளிக்கிறார்.

> "ஆனால் ஒரு புருஷபுத்தி மூலமாக வந்தவிது பிரமாணமாம்படி என்னென்ன; தாம் சொன்னாராகிலன்றோ அது சொல்ல வேண்டுவது, அவனுடைய அருள் மூலமாகச் சொன்னவ ராகையாலே அது சொல்லப் போகாது"

## 3.5. அடைமொழிகளை விளக்குதல்

ஒன்றுக்கு மேற்பட்ட அடைமொழிகள் வரும்பொழுது அதைத் தனித்தனியே பிரித்து இரண்டு மூன்று பொருள்களைக் கூறி விளக்கியுள்ளார்.

1. திருப்பாவை 13 2. அமலனாதிபிரான் 6 3. கண்ணிநுண். 8

**3.5.1** "சிற்றஞ்சிறுகாலை"[1]யில் ஆய்ப்பெண்கள் வந்து கண்ணனை எழுப்பி நோன்புக்கு வேண்டியவற்றைப் பிரார்த்திக்கிறார்கள். நாயனார், சிற்றஞ்சிறுகாலை என்பதை காலை, சிறுகாலை, சிற்றஞ்சிறுகாலை என்று மூன்று வகையாகக் கொண்டு விளக்குகிறார்.

> "செங்கல் பொடிக்கூறை என்று தாமஸரும் உணரும்படியான அளவு காலையாவது: ஆய்ச்சியர் மத்தினாலோசைபடுத்த என்று இடைச்சிகள் உணர்ந்து ஸ்வக்ருத்யத்திலே அதிகரிக்கும்படியான அளவு – சிறுகாலையாவது: முனிவர்களும் யோகிகளும் உணருங்காலம் சிற்றஞ்சிறுகாலையாவது"

என்று ஒவ்வொன்றையும் பிரித்துத் தனியே பொருளுரைத்துள்ளார்.

**3.5.2** "அஞ்சிறைய வண்டுவாழ் பொழில் சூழ் அரங்கநகர்"[2] என்ற இடத்தில் பொழில் சூழ் அரங்கநகர், வண்டுவாழ் பொழில் சூழ், அரங்கநகர், அஞ்சிறைய வண்டு வாழ் பொழில் சூழ் அரங்கநகர் என்று பிரித்துப் பொருள் கூறுகிறார்.

> (பெரியபெருமாளுக்கு ஆபரணமாய்) "ஊருக்கும் ஆபரணமாயிருக்குஞ் சோலை: சோலைக்கு ஆபரணமாயிருக்கும் வண்டுகள்; வண்டுகளுக்கு ஆபரணமாயிருக்கும் அழகிய சிறகு" என்று பொருளுரைத்துள்ளார்.

**3.5.3** "பிறர் நன்பொருள்"[3] என்பதை, பொருள், நன்பொருள், பிறர் நன்பொருள் என்று பிரித்து, பொருள் – வஸ்து; நன்பொருள்– ஆத்மவஸ்து; பிறர்நன்பொருள் – பகவானுடையதான ஆத்மவஸ்து என்று என்று பொருள் காட்டுகிறார்.

> "பொருள் – வஸ்து; "ஸத்யஞ்ச" என்றும், "உள்ளது" என்றும் சொல்லும்படி உண்டாயே போருமது: நன்பொருள் – விலக்ஷண த்ரவ்யம். பிறர் நன் பொருள் – இங்குப் பிறரென்பது ஸர்வேச்வரனை: பிறரென்பது–அந்யரையிறே. சேதநாசேதந விஸஜாதீயனான ஸர்வேச்வரனாய்த்து அந்யனாகிறான்"

என்று விளக்கமருளியுள்ளார்.

---

1. திருப்பாவை 29
2. அமலனாதிபிரான் 6
3. கண்ணிநுண். 5

## 3.6 உணர்ச்சி நயம் தோன்ற உரைத்தல்

பாசுரங்களில் வரும் சொல்லையோ, தொடரையோ விளக்கும் பொழுது அதன் நேரான பொருளை மட்டும் கூறாமல் ஆழ்வார்களின் உள்ளக் கிடக்கையை உணர்ந்து உணர்ச்சி நயம் தோன்ற விளக்குதல்.

ஆய்ப்பெண்களை நோக்கி கண்ணன் நீங்கள் இதுவரை வேண்டி வந்த பறையைப் பெற்றுக் கொள்ளுங்கோள் என்ன, அதற்கு அவர்கள், "இற்றைப் பறை கொள்வானன்று காண் கோவிந்தா எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றன்னோடு உற்றோமே ஆவோம்"[1] என்றனர். இங்கு ஆய்ப்பெண்கள் கண்ணனை "கோவிந்தா" என்று விளித்ததன் கருத்தை விளக்குகின்ற நாயனார்,

> "பூமியை நீரேற்ற வாமனனாக நினைக்கிறாயோ? சப்த ராசியைப் பிரித்தெடுத்த ஹம்ஸரூபியாக நினைக்கிறாயோ? அத்தைப் பிரகாசிப்பித்த ஹயக்ரீவ வேஷமாக நினைக்கிறாயோ? ஆதித்யாந்தர் வர்த்தியாக நினைக்கிறாயோ? அறிவில்லாத பசுக்களுக்கு நிர்வாஹகனாய் வந்து பிறந்து ஆயர் சிறுமியர்க்கு உதவிற்றில்லை என்றால் பரவ்யூஹாதிகளையும் யாதவ வம்சத்தையும் விட்டு, இடைச்சேரியிலே சுலபனான உன்னுடைய க்ருஷியும் விபலமாகாதோ"

என்று உரையிட்டுள்ளார், இங்கு 'கோ' என்ற சொல்லுக்கு பூமி, வாக்கு, சூரியன், பசு போன்ற பல பொருள்களை உட்கொண்டு இவ்விளக்கங்களை அருளிச் செய்துள்ளார்.

**3.6.2.** திருப்பாணாழ்வார் அமலனாதிபிரான் பதிகத்திற்குப் பலம் சொல்லாததற்குக் காரணம் "அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே"[1] என்கிறபடியே எம்பெருமானைத் தரிசிப்பதே பலமாதலால் அது கிடைக்கப் பெற்ற பிறகு வேறொரு பலம் வேண்டாமையாலே என்று விளக்கம் அருளுகிறார் நாயனார்.

> "இந்தக் கண்கள் புறம்பே சிலவற்றைக் காணவேண்டுவது இங்கே சில குறையுண்டாகிலன்றோ, இவர் பக்கல் ஔதார்யம் இல்லையென்று போகவோ? வடிவிற் பசையில்லை யென்று போகவோ? சௌசீல்யமில்லையென்று போகவோ? நெஞ்சிற்குப் பிடித்திருந்தது இல்லை என்று போகவோ? மேன்மையில்லை என்று போகவோ?

---

1. திருப்பாவை 29 2. அமலனாதிபிரான் 10

சௌலப்யம் இல்லையென்று போகவோ? அநுபவத்தில் குறை உண்டென்று போகவோ?"

என்று ஆழ்வார் கருதுவதாக அவருடைய உள்ளத்து உணர்ச்சிகளை விளக்கும் வகையில் உரை அமைத்துள்ளார், இங்கு, கொண்டல் வண்ணன், வெண்ணெயுண்ட வாயன், என்னுயிர் கவர்ந்தான், அண்டர்கோன், அணியரங்கன், என்னமுது என்று பாசுரத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் முறையே கருத்தில் கொண்டு இவ்வாறு உரை அருளியுள்ளார்.

**3.6.3.** நாட்டாரெல்லாரும் எம்பெருமானையே உபாயமும், உபேயமுமாய்ப் பற்றி நிற்க மதுரகவிகள் மட்டும் ஆழ்வாரையே உபாய, உபேயமுமாய்ப் பற்றுவதற்குக் காரணம் கூறி ஆழ்வாருடைய மனநிலையைத் தெரியப்படுத்தும் விதத்தில் உரையிட்டுள்ளார்.

> "தாந்தாம் பற்றின விஷயத்தை விட்டுப் புறம்பு சில போக வேண்டுவது அவ்விஷயம் இஹலோக ஸுக ஜநகமல்லவாயாதல், பரலோக ஸுகத்துக்கு ஸாதநமன்றாயாதல், பற்றினவர்கள் இவ்விஷயத்தை யொழிய வேறே ஒரு ஸ்வாமியுண்டாக நினைத்திருத்தல், காலக்ஷேப விஷயமல்லாமையாலே யாதலன்றோ? அதில் எனக்கு இஹலோக ஸுகஜநகருமாழ்வாரே: பரலோக ஸுகத்துக்கு ஸாதநமும் ஆழ்வாரே: எனக்கு ஸ்வாமியும் ஆழ்வாரே; காலக்ஷேப விஷயமும் ஆழ்வாரே; ஆன பின்பு பகவத் விஷயத்திலே அந்வயிக்க வேண்டுகிறதென்? என்கிறார்"

இங்கு "நாவினால் நவிற்றி இன்பமெய்தினேன்", "மேவினேன் அவன் பொன்னடி", "தேவுமற்றறியேன்", "பாவினின்னிசை" என்று பாசுரத்திலுள்ள ஒவ்வொரு சொல்லையும் விளக்கி உரையிட்டுள்ளார்.[1]

## 3.7. இருபொருள் கூறுதல்

ஒரே சொல்லுக்கு முதலில் ஒரு பொருளைக் கூறி வேறொரு கருத்தையும் "என்றுமாம்" என்று காட்டுகிற உத்தி நாயனாருடைய உரையில் கையாளப்பட்டுள்ளது.

**3.7.1** "கப்பம் தவிர்க்கும் கலியே"[1] என்கிறவிடத்தில் 'கப்பம்' என்பதற்கு நடுக்கம் என்று பொருள் கொண்டு 'நாட்டார் நடுக்கத்தைத் தவிர்க்கக் கடவ நீ எங்களை நடுங்கப் பண்ணாதே கொள்ளாய்' என்று ஆய்ப்பெண்கள்

1. கண்ணிநுண்சிறுத்தாம்பு 2 நாயனார் வ்யாக்கியானம்.
2. திருப்பாவை 20 நாயனார் வியாக்கியானம்.

கூறுவதாக உரையிட்டு, 'கப்பம் என்று – இறையாகவுமாம்' என்று இரண்டாவது பொருளையும் காட்டுகிறார்.

3.7.2 "கரியவாகி"[1] என்ற சொல்லுக்கு 'புண்டரீகம் போலே வெளுத்து இருக்கிற திருக்கண்களுக்குப் பரபாகமாம்படி இரண்டு கருவிழியை யுடைத்தாய்' என்று கரியவிழிகள் என்றொரு பொருளுரைத்துவிட்டு, 'அங்ஙனன்றிக்கே அஞ்ஜநத்தாலே கறுத்திருத்தல்: கண்களைக் கண்டபோதே தாபத்ரயதப்தருடைய ஸகல தாபங்களும் போம்படி குளிர்த்திருக்குமென்னுதல்' என்று மற்றொரு கருத்தையும் தருகிறார்.

3.7.3 "அருள் கொண்டாடுமடியவர்"[2] என்பதற்கு 'அருளைக் கொண்டாடுகிற அடியவர்' என்றொரு பொருளும், 'அன்றிக்கே அருளைத் தங்களுக்கு அவஷ்டம்பமாகக் கொண்டு நடையாடுமவர்கள்' என்று அருளைப் பற்றுக்கோடாகக் கொண்டு திரிகிற அடியவரென்று வேறொரு கருத்தையும் கூறுகிறார்.

## 3.8 நயவுரைகள் வழங்குதல்

பாசுரங்களில் அமைந்துள்ள சொற்களின் நயங்களை நாயனார் அழகிய முறையில் விளக்கி உள்ளார்.

3.8.1 "தூய பெருநீர் யமுனை"[3] என்ற இடத்தில் 'தூய' என்பதற்கு கோதாவரியை விடத் தூய்மையானது யமுனை என்று கூறுகிறார். யமுனைக்கு கூறப்படுகின்ற தூய்மை யாது என்பதை நாயனார் நயம்பட விளக்குகிறார். ராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது, சீதை கோதாவரி நதியிடம் சரண் புகுந்து, தன்னை ராவணன் கவர்ந்து சென்றது பற்றி இராமபிரானிடம் தெரிவிக்கும்படி வேண்டினாள். ஆனால் ராவணனிடத்திலுள்ள அச்சத்தினால் கோதாவரிநதி அவ்வாறு செய்யவில்லை. கண்ணபிரான் பிறந்தவன்றே, அவனுக்குக் கம்ஸனால் ஆபத்து ஏற்படக் கூடாது என்று கருதி வசுதேவர் கண்ணபிரானைத் திருவாய்ப்பாடிக்கு எடுத்துச் சென்றபோது வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்த யமுனை நதியானது முழங்காலளவாக வற்றிக் கொடுத்தது. இராவணனுடைய இருப்பிடத்திற்கு வெகு தூரத்தில் இருந்தும் அவனிடம் உள்ள பயத்தால் இராமனுக்கு உதவி புரியாத கோதாவரி நதியைப் போலல்லாமல், கம்ஸனுடைய மாளிகைக்கு மிக அருகிலேயே ஓடிக் கொண்டு இருந்தும், கம்ஸனிடம் சிறிதும் அச்சம் கொள்ளாமல் உதவி புரிந்தமையால்

1. அமலனாதிபிரான் 8 2. கண்ணிநுண். 8 3. திருப்பாவை 5

யமுனை நதியானது "துய பெரு நீர் யமுனை" என்று நயமாக விளக்கம் தருகிறார்.

**3.8.2** "அமலனாதிபிரான்"[1] என்கிற முதல் பாட்டில் திருப்பாணாழ்வார் "திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன" என்று எம்பெருமானுடைய திருவடிகள் தாமே வந்து தம் திருவுள்ளத்தில் பிரகாசித்தபடியைச் சொன்னார். அடுத்த பாட்டில் "அரைச்சிவந்த ஆடையின் மேல் சென்றதாம் என் சிந்தனையே"[2] என்று திருவடிகளளவன்றிக்கே எம்பெருமானுடைய திருப்பீதாம்பரத்தளவும் தம்முடைய நெஞ்சு சென்றபடியைக் கூறுகிறார்.

> "ஈன்று அணித்தான நாகு தன் கன்றுக்கு வாஸனையில்லாமையாலே முதலில் தானே தன் முலையை அதன் வாயிலே கொடுக்கும்: பின்பு சுவடறிந்தால் கன்று தானே இது காற்கடைக்கொள்ளிலும் மேல்விழுமிறே. அப்படியே திருவடிகள் தானே வந்து போக்யமானபடி சொன்னார் முதற் பாட்டில். இதில் தம்முடைய நெஞ்சு சுவடறிந்து மேல் விழுந்தபடி சொல்கிறார்"

என்று நயமான விளக்கம் தருகிறார்.

**3.8.3.** மதுரகவிகள் நம்மாழ்வாருடைய அருளை "எண்டிசையும் அறிய இயம்புகேன்"[3] என்று கூறுகிறார். 'எண்டிசையும்' என்பது பத்துத் திசைகளையும் குறிக்கும் என்று உரையிட்ட நாயனார், மதுரகவிகள் மேலேற மாட்டாமையாலும் கீழிழியமாட்டாமையாலும் எண்டிசையும் என்று பாசுரமிட்டதாகக் காட்டுகிறார். ஆழ்வாருடைய அருளுண்டாகையாலே கீழிழிய மாட்டாரென்றும், ஆழ்வார் போனாலல்லது போகாதவராகையாலே மேலேற மாட்டார் என்றும், அதற்கு விளக்கம் அளித்துள்ளார்.

## 3.9 அவதாரிகைகளில் தொடர்பு கூறுதல்

ஒவ்வொரு பாசுரத்திற்கும் ஒரு சிறிய முன்னுரை வழங்கும் நாயனார், அப்பாசுரத்திற்கு முன் பாசுரங்கள் பலவற்றில் கூறப்பட்ட கருத்துகளைத் தொகுத்துக் காட்டி, அப்பாசுரத்திற்கும் முன் பாசுரங்களுக்கும் உள்ள தொடர்பை விளக்குகிறார். இவ்வுத்தியானது நாயனார் உரை முழுவதுமே விரவியிருக்கின்றது.

**3.9.1** "மாயனை மன்னு"[4] என்கிற பாசுரத்தின் அவதாரிகையில், எம்பெருமானுடைய எளிமைக் குணத்தையும், கிருஷ்ணாவதாரத்தில் அது

---

1. அமலனாதிபிரான் 1 2. மேலது 2 3. கண்ணி. - 7 4. திருப்பாவை - 5

விஞ்சியிருந்ததையும் விளக்குகிறார். முதற் பாசுரத்திலே 'நாராயணனே நமக்கே பறைதருவான்' என்று எம்பெருமானுடைய உபய விபூதி நாதத்வஞ் சொல்லப்பட்டது என்றும், அடுத்த பாசுரத்தில் சக்ரவர்த்தி திருமகனாய் வந்து அவதரித்து வசிஷ்டர் முதலியவர்களுக்குக் கட்டுப்பட்டு நடந்த எளிமையைச் சொல்லிற்று என்றும் இப்பாசுரத்தில் ஆய்ச்சியருக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி எளியனாய் வந்து அவதரித்த கிருஷ்ணனுடைய பெருமை கூறப்பட்டுள்ளது என்று எம்பெருமானுடைய நிலைகளை முன்புள்ள பாசுரங்களோடு தொடர்பு படுத்தி காட்டுகிறார்.

**3.9.2.** "மந்திபாய்"[1] என்கிற பாசுரத்தின் அவதாரிகையில், முன் பாசுரங்களில் கூறப்பட்டுள்ள கருத்துகளைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துக் காட்டுகிறார். முதற் பாசுரத்தில், உலகுக்கெல்லாம் காரணமான எம்பெருமான் தமக்கருள் புரிந்து, தம்முடைய திருவுள்ளத்தில் எம்பெருமானுடைய திருவடிகள் தாமே வந்து இருந்தபடியை திருப்பாணாழ்வார் அருளிச் செய்தார். ஆழ்வார் வேண்டாமலே இப்படி அருள் புரியக் கூடுமோ என்ற கேள்வி பிறக்க அதற்கு இரண்டாம் பாட்டிலே விடை அருளிச் செய்தார். அதாவது, ஒருவரும் வேண்டாது இருக்கச் செய்தேயும் எல்லோருடைய தலைகளிலேயும் தன் திருவடிகளை வைத்தது போலவே தமக்கும் அருள் செய்ததாக ஆழ்வார் அருளிச் செய்தார். அப்படி உலகமளந்தவன் திருவேங்கடமுடையானன்றோ என்ற கேள்வி பிறக்க அத் திருவேங்கடமுடையானே திருவரங்கநாதனாக எழுந்தருளியுள்ளான் என்பதை மூன்றாம் பாட்டில் அருளிச் செய்தார். அப்படிப்பட்ட திருவரங்க நாதனுடைய திருநாபீகமலமானது பிரமனுக்கு இருப்பிடமாக உள்ளபடியால் உண்டான மேன்மையை அப்பாசுரத்தில் அநுபவித்தார். ஆனால் நான்காவதான இப்பாசுரத்தில் அடியவர்களுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி எளியனாக நிற்கின்ற நிலையை வெளியிடுகின்ற திருவுதர பந்தத்தைத் திருப்பாணாழ்வார் அநுபவிக்கிறார் என்று நாயனார் காட்டுகிறார்.

**3.9.3.** "கண்டு கொண்டென்னை"[2] என்ற பாசுரத்தின் அவதாரிகையில் கீழுள்ள பாசுரங்களில் கூறப்பட்டகருத்துக்களைத் தொகுத்துக் கூறி இப்பாசுரத்துடன் தொடர்புபடுத்துகிறார். தம்முடைய புன்மையைக் கண்டு பெரியவர்களும் தம்மை இகழ்ந்ததையும், தமக்கு நம்மாழ்வாரையொழிய வேறு கதியில்லையில்லையாகையால் அவரே தாயாய்த் தந்தையாய் நின்று தம்மைக் கைக் கொண்டதையும் நான்காம் பாட்டில் கூறினார். இவருடைய புன்மை

1. அமலனாதிபிரான் - 3
2. கண்ணிநுண்சிறுத்தாம்பு - 7

எதுவென்றும், ஆழ்வாரை அடைந்தவிதம் எவ்வாறு என்றும், கேள்வி பிறக்க அதற்கு ஐந்தாம் பாட்டில் விடையருளிச் செய்தார். இப்பொழுது கைக் கொண்ட நம்மாழ்வார் குற்றங்கண்டு இகழில் என் செய்வது? என்று கேள்வி பிறக்க, ஆழ்வார் கைக்கொண்டவன்று தொடங்கி அவருடைய குணங்களையே ஏத்தும்படியருளினார்; ஆதலால் இனி குற்றங்கள் மேலிடாதென்றும், மேலிட்டாலும் பரிபூர்ணரான ஆழ்வார் தம்மைக் கைவிட மாட்டாரென்றும் ஆறாம் பாட்டில் அருளிச் செய்தார். இப்பாட்டில் தம்முடைய பாபங்களைப் பாற்றியருளின நம்மாழ்வார் க்ருபா குணத்தை எண்டிசையும் அறிய இயம்புகேன் என்று மதுரகவிகள் கொண்டாடுவதாக நாயனார் காட்டுகிறார்.

## 3.10. மிக விளக்கமான உரை அருளுதல்

நாயனார் தமது உரையில் பலவிடங்களிலும் பாசுரங்களிலுள்ள சொற்களுக்கு மிக விளக்கமான உரையருளி நன்கு விளங்க வைக்கிறார்.

3.10.1. "மாலே மணிவண்ணா"[1] என்ற பாசுரத்தில் "மால்" என்ற சொல்லுக்கு (கருமை, பெருமை, மையல் என்ற பொருள்களில்) மையல் என்ற பொருளைக் கொண்டு மிக விரிவான உரை அருளிச் செய்கிறார். கிருஷ்ணனுக்குப் பிரதான குணமான "ஆச்ரித வ்யாமோஹம்"(அடியவர்களிடம் அன்பு கொள்ளுதல்) என்ற குணத்தை 'மால்' என்ற சொல்லால் இடைப் பெண்கள் குறிப்பிடுவதாகக் கூறுகிறார். அடியவர்கள் எம்பெருமான் மீது கொண்ட அன்பைவிட எம்பெருமான் அடியவர்கள் மீது கொண்ட மையல் அளவிடமுடியாதது என்று கூறி அதை சில உதாரணங்கள் மூலம் விளக்குகிறார். விபீஷணன் ஸ்ரீராமபிரானிடம் சரணமடையும் போது சீதையைக் கவர்ந்து சென்ற ராவணனின் தம்பியான தன்னை ஸ்ரீராமபிரான் கைக் கொள்ளுவானோ? என ஐயுற்றான். ஆனால் ஸ்ரீராமபிரானோ ராவணனையும் ஏற்றுக் கொள்ள விரும்பும் தனக்கு அவன் தம்பியான விபீஷணனாகிலும் கிடைக்கப் பெறுவானோ என எண்ணினான். நம்மாழ்வார் எம்பெருமானைக் காணில் "வாரிக் கொண்டு விழுங்க"[1] வேண்டும் என்று ஆசைப்பட்டிருந்தார். ஆனால் அவருக்கு முன்னே நெடுநாளாக எம்பெருமான் அவர் விஷயத்தில் இங்ஙனே பாரித்திருந்து ஆழ்வாரை முற்றப் பருகினான். எம்பெருமானுடைய திருவடிகளின் கீழ் தம்மைச் சேர்த்துக் கொண்டருள வேணும் என்று நம்மாழ்வார் எம்பெருமானிடம் பிரார்த்தித்துப் பலகாலும்

1. திருப்பாவை - 26

கதறிக் கொண்டிருந்தார். ஆனால் எம்பெருமான் ஆழ்வாருடைய அர்த்தித்வத்தைத் தான் ஏறிட்டுக் கொண்டு வந்து ஆழ்வாருக்குள்ளே புகுந்து அவரைப் பெற்றதனால் உண்டான மகிழ்ச்சி தோன்ற எழுந்தருளியிருந்தான். 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று எம்பெருமானையே உபாயமும், உபேயமுமாகப் பற்றிய ஆய்ப் பெண்கள், அவன் நமக்குக் கிடைப்பானோ? என நினைத்தனர். ஆனால் யதுகுலத்தில் பிறந்த தனக்கு இப்பெண்கள் கிடைப்பார்களோ என கண்ணன் நினைத்தான். கண்ணன் தேவகி மைந்தனாய் வடமதுரையில் பிறந்து யசோதை மகனாய் ஆய்ப்பாடியில் வளர்ந்தது கம்ஸனுக்காக அன்று. இப் பெண்களைப் பிரியாமல் இருப்பதற்காகவே. இவர்கள் பக்கல் கொண்ட மையலினாலேயே எம்பெருமான் ஒரு பிறவியிலே இருபிறவியைக் கைக் கொண்டான் என்று எம்பெருமானுடைய ஆச்ரித வ்யாமோஹம் என்கிற குணத்தை 'மால்' என்ற ஒரு சொல்லுக்கு விளக்கமாக மிக விரிவாக விளக்குகிறார்.

**3.10.2** "அமலன்"[1] என்பதற்கு சுத்தன் என்று பொருளுரைக்கின்றார். தானொருத்தன் சுத்தனாக இருப்பது மட்டுமன்றியில் தன்னோடு தொடர்பு உடையவர்களையும் சுத்தராக்க வல்லவன் என்கிறார். நம்மாழ்வார் திருவாய்மொழித் துவக்கத்திலேயே "உயர்வற உயர்நலமுடையவன்"[2] என்று எம்பெருமானுடைய கல்யாண குணங்களை அநுபவித்தது போல இவரும் தம் தாழ்ச்சியைப் பாராதே எம்பெருமான் மேல் விழுந்தபடியைக் கண்டு இழிவுக்கு எதிர்த் தட்டாயிருக்கும் அவனுடைய தன்மையை முற்பட அநுபவிக்கிறார். தமது பிறப்பால் உண்டான இழிவை எண்ணிப் பார்த்து இவர் அகல, அதையே பற்றுக் கோடாகக் கொண்டு எம்பெருமான் திருவுள்ளம் புண்பட்டு மேல் விழுந்தவிடத்திலும் அப் பெருமானுக்குக் கேடு எதுவும் இல்லாது நிமலனாயிருக்கிறபடியைக் கண்டு "அமலன்" என்கிறார். அசேதனங்களுக்கு பரிணாமம் (மாறுபாடு அடைதல்) குறையாகும். சேதந வஸ்துக்களுக்கு (ஜீவாத்மாக்களுக்கு) அறியாமை, துன்பம் முதலியன உண்டாதல் குறையாகும். முக்தர்களுக்கு ஜ்ஞானத்தின் விரிவு, சுருக்கம் முதலியன குறையாகும். நித்யர்களுக்கு அடிமைப்பட்டிருக்கை குறை. இக்குறைகள் அனைத்திற்கும் எதிர்த்தட்டாயிருப்பவன் எம்பெருமான் என்று 'அமலன்' என்ற சொல்லுக்கு மிக விரிவாகப் பொருளுரைக்கின்றார்.

**3.10.3.** "அன்பன் தன்னையடைந்தவர்கட்கெல்லாம்"[3] என்ற தொடரில் வரும் 'அன்பன்' என்ற சொல்லுக்கு வாத்சல்ய குணமுடையவன் என்று

1. அமலனாதிபிரான் 1 1. திருவாய்மொழி 9-6-10 3. கண்ணிநுண். 11

உரையிட்டுள்ளார். மற்றவர்களுடைய அன்புக்கு ஈச்வரன் மட்டுமே இலக்காக இருப்பான். அவனோவெனில், உலகனைத்திலும் அன்பை உடையவனா யிருப்பவன். எம்பெருமானிடத்திலும் அன்பு கொண்டு மற்றவற்றிலும் அன்புடையவர்கள் அவனைப் பெற முடியாது. (எனவே எம்பெருமானிடத்தில் மட்டும் அன்புடையவர்களாக இருத்தல் வேண்டும்). ஆனால் எம்பெருமானோவெனில் எல்லாரிடத்திலும் அன்புடையவனாக இருப்பான். 'வாத்ஸல்ய மஹோததே'[1] என்றும், 'வாத்சல்ய ஜலதே'[2] என்றும் வாத்சல்ய குணத்தைக் கடலாக உருவகப்படுத்தியுள்ளனர் முன்னோர்.[1] கடலுக்குள்ளே ரத்தினங்கள் மறைந்து கிடப்பதைப் போலே எம்பெருமானுடைய ஏனைய திருக் கல்யாணகுணங்கள் எல்லாம் தனக்குள்ளே மறைந்து கிடக்கும்படி, எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையெல்லாம், வாத்ஸல்ய குணம் தானே வியாபித்துக் கொண்டிருக்கும். எம்பெருமானுடைய ஸ்வரூபத்துக்கு எப்பொழுதும் நிகரில்லாதாப் போலே இந்த வாத்சல்ய குணமும் நிகரில் புகழாக இருக்கும் என்று நாயனார் இக்குணத்தின் பெருமைகளைக் கூறுகிறார். எம்பெருமான் எல்லா உயிர்களிடத்திலும், வாத்சல்ய குணமுடையவனாக இருப்பவன் என்பதை சில பிரமாணங்கள் மூலம் காட்டுகிறார். "எம்பெருமான் பிரளயத்தின் போது காத்திராவிடில் இவ்வுலகங்கள் உண்டாகியிருக்காது. எல்லாப் பிராணிகளுக்கும் நண்பனான எம்பெருமானிடத்தில் ஆச்ரித வாத்சல்யமான இந்தக் குணமானது ஆச்சர்யமல்ல" என்று ஆளவந்தார் அருளியுள்ளார்.[3] ஸ்ரீராமபிரானை விபீஷணன் சரணடைந்த பொழுது பிற வானர முதலிகள் எல்லோரும் ஆட்சேபித்த பொழுதும் "நண்பனுடைய பாவனையோடு, ஒருவன் வந்தாலும் அவனை ஒரு பொழுதும் கைவிட மாட்டேன். அவனிடம் தோஷமிருந்தாலும் அவனை ஏற்பது நிந்திக்கத் தக்கதல்ல"[4] என்று கூறி அவனை ஏற்றுக் கொண்டார் என்று, எம்பெருமானுடைய மற்றெல்லாத் திருக்கல்யாண குணங்களைவிடவும் வாத்ஸல்யகுணத்தின் பெருமை உயர்ந்தது என்பதை "அன்பன்" என்ற ஒரு சொல்லை விளக்குவதன் மூலம் நாயனார் விரிவாக அருளியுள்ளார்.

## 3.11 இதிகாச நிகழ்ச்சிகளோடு ஒப்பிடுதல்

ஆழ்வார்களுடைய பாசுரங்களுக்கு, ஆங்காங்கேஇதிகாசபுராண நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டி, விளக்கம் தரும் உக்தியை நாயனார் கையாண்டுள்ளார்.

---

1. ஸ்ரீரங்க கத்யம் 2. ஸ்தோத்ரரத்னம் 58 3. மேலது - 10
4. ஸ்ரீராமாயணம் சுந். 21-30

**3.11.1.** நெடுநாளாக கண்ணபிரானுடைய கலவியை இழந்து கிடந்த ஆய்ப் பெண்கள் தாங்கள் கிருஷ்ணனோடு சேருவதற்கு வாய்த்த நாளை "நன்னாள்"[1] என்று கொண்டாடுகின்றனர். நாயனார். 'நன்னாள்' என்பதற்கு "திருவயோத்தியில் உள்ளார் பெருமாளைப் பொன்முடி சூட்டி அனுபவிக்கப் பாரித்துக் கொண்டிருக்க, வெறுந்தரையான நாள் போலன்றிக்கே, மீண்டு வந்து திருமுடி சூடியருளின நாள் போலே" என்று ஸ்ரீராமாயண நிகழ்ச்சியோடு ஒப்பிட்டு உரையருளி யுள்ளார்.

**3.11.2.** பெரிய பெருமாள் திருப்பாணாழ்வாரை லோக சாரங்க முனிவரையிட்டு அழைத்துக் கொண்டார். பெரிய பெருமாள் லோகசாரங்க முனிவரை அனுப்பிய நிகழ்ச்சியை இதிகாச நிகழ்ச்சியோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். இராமபிரானை விபீஷணன் சரணம் அடைய வந்த பொழுது அவன் ராஜ்யத்தில் ஆசையுடையவனாக இருந்தபடியால் இளையபெருமாளை அனுப்பாமல், அவனைப்போலவே ராஜ்யத்தில் ஆசையுடைய சுக்ரீவனையிட்டு அழைத்து வரச் செய்தார். அதைப் போல பெரிய பெருமாளும், திருப்பாணாழ்வார் எப்பொழுதும் தம்மையே (பெரியபெருமாளையே) நினைத்துக் கொண்டிருந்தமையால், அவரைப் போலவே தம்மையே மநநம் செய்பவரும், மிகவும் உயர்ந்த வருமான லோகசாரங்க முனிவரையிட்டு, ஆழ்வாரை ஆட்கொண்டார் என்று நாயனார் விளக்குகிறார்.[2]

**3.11.3.** மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரிடம் ஈடுபாடு கொண்டிருந்த நிலையினை, சத்ருக்னனின் நிலையோடு ஒப்பிட்டு, சத்ருக்னன் இராமனுடைய குணங்களில் ஈடுபடாமல் பரதனிடமே ஈடுபட்டதைப் போல மதுரகவிகளும் கண்ணனுடைய குணத்தில் ஈடுபடாமல் ஆழ்வார் குணத்திலேயே ஈடுபட்டார் என்று அருளிச் செய்கிறார்.[3]

## 3.12 . சமகால நிகழ்வுகளை ஒப்பிடுதல்

ஒரு சில பாசுரங்களுக்கு விளக்கம் அருளும்போது நாயனார், தம்முடைய காலத்தில், தாம் நேரில் கண்ட நிகழ்ச்சிகளை உவமையாக்கி விளக்கம் தருவதுமுண்டு.

**3.12.1.** "கார்மேனிச் செங்கண்"[4] என்பதில் உள்ள செங்கண் என்பதற்கு இராத் திருநாள் சேவித்தார் கண்போலே இருக்கை" என்று நாயனார்

1. திருப்பாவை 41
2. அமலனாதிபிரான் வியாக்கியானம் ப. 108
3. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம் ப.
4. திருப்பாவை ப.45

உரையருளியுள்ளார். உற்சவ காலங்களில் எம்பெருமானைச் சேவிப்பதற்காக இரவில் நெடுநேரம் கண் விழித்திருப்பவர்களது கண்கள் சிவந்திருக்கும். அதை எம்பெருமானுடைய தாமரை பூத்தாற்போலிருக்கிற சிவந்த கண்களுக்கு உதாரணமாக ஒப்பிட்டுக் காட்டியுள்ளார்.

3.12.2. திருப்பாணாழ்வார் முதற் பாசுரத்தில் அரங்கனின் திருவடிகளில் தமது நெஞ்சு சென்றது என்றவர், அடுத்த பாசுரத்தில், அந்நெஞ்சு எம்பெருமானுடைய சிவந்த ஆடையில் நின்றுவிட்டது என்கிறார். இதை விளக்கியருளும் நாயனார் – காவிரியில் நீராடச் செல்பவர்கள் துறையில் தங்கள் பிள்ளைகளைத் தவற விட்டால், பிறகு கோயிலுக்குள் வந்து திருவோலக்தில் அப்பிள்ளைகளைத் தேடிக் காண்பதைப் போல திருவடிகளில் பறி கொடுத்த நெஞ்சைத் திருவரையில் காண்கிறார் ஆழ்வார் என்று அழகாக உரையருளிச் செய்துள்ளார்.[1]

3.12.3. யசோதை கண்ணனை உரலுடன் கட்டிவிட்டு "உன்னால் முடியுமாகில் நான் கட்டின கட்டை அவிழ்த்துக் கொண்டு போ" என்று கூறிவிட்டு, தயிர் கடைவது முதலான தன்னுடைய வேலைகளில் ஈடுபடத் தொடங்கினாள். இதற்கு, "பெரிய திருநாளிலும் ஸந்தியாவந்தனம் முட்டாமல் நடத்துவாரைக் போலே யசோதை தன் காரியத்திலே போந்தாள்" என்று உதாரணம் காட்டியுள்ளார்.[2] உற்சவ காலங்களில் கோவிலில் உற்சவம் முடிந்து, நம்பெருமாள் சன்னிதிக்கு எழுந்தருளிய பிறகு ஸந்த்யாவந்தனத்தை விடாமல் செய்பவரைப் போலே யசோதையும் கிருஷ்ணனைக் கட்டிப் போட்டுவிட்டுத் தன் காரியத்தை விடாமல் செய்ததாகக் கூறுகிறார்.

## 3.13. பிற ஆழ்வார்களுடன் ஒப்பிட்டு உயர்வு கூறுதல்

எந்த ஆழ்வாருடைய அருளிச் செயலுக்கு நாயனார் உரையிடுகின்றாரோ, அவ்வாழ்வாரை மற்ற ஆழ்வார்களுடன் ஒப்பிட்டு, மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் அவ்வாழ்வாருக்கு உண்டான பெருமையை எடுத்துக் காட்டும் உத்தி நாயனார் உரைகளின் சிறப்பாகும்.

3.13.1 "மேட்டிள மேதிகள் தளைவிடுமாயர்கள்" என்று தொண்டரடிப்பொடி ஆழ்வார் பத்துப் பாசுரங்களாலே எம்பெருமானை எழுப்பினார். ஆண்டாள் "புள்ளும் சிலம்பின காண்" என்ற பாசுரத்திலிருந்து தொடங்கி "எல்லே இளங்கிளியே" என்ற பாசுரம் ஈறாக பத்துப் பாசுரங்களாலே

1. அமலனாதிபிரான் வியாக்கியானம் ப. 40
2. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம் ப. 89

எம்பெருமான் அடியவர்களை எழுப்புகிறாள். நம்மாழ்வார் "எம்மா வீடு" என்ற பதிகத்திலே ப்ராப்யத்தை அறுதியிட்டு "ஒழிவில் காலம்" என்னும் பதிகத்திலே பிரார்த்தித்து அதனுடைய எல்லை நிலமான பாகவதானுபவத்தை, "நெடுமாற்கடிமை"யிலே ப்ரார்த்தித்தார். ஆண்டாள் "நீராடப் போதுவீர்" "எல்லாரும் போந்தாரோ" என்று பாகவதாநுபவத்தை முதலில் பிரார்த்தித்து பின் சிற்றஞ்சிறுகாலையில் ப்ராப்யத்தை அறுதியிட்டு எம்பெருமானிடத்தில் கைங்கரியத்தைப் பிரார்த்திக்கிறாள்'' என்று ஆண்டாளை மற்ற ஆழ்வார்களுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.[1]

**3.13.2.** முதலாழ்வார்கள் மூவரும் பரத்வத்திலே மண்டி அர்ச்சையையும் அநுபவித்தார்கள். ஸ்ரீ குலசேகரப்பெருமாள் ராமாவதாரத்திலே ஈடுபட்டு அர்ச்சாவதாரத்தையும் அநுபவித்தார். நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் ஆண்டாளும் கிருஷ்ணாவதாரத்திலே மண்டி அர்ச்சாவதாரத்தை அநுபவித்தார்கள். திருமழிசைப் பிரான் தேவதாந்தர பரத்வ நிரஸநத்திலே ஊற்றமுடையவராய் இருந்தார். திருமங்கையாழ்வார் அர்ச்சாவதாரத்திலே யிழிந்தாலும், தானுகந்த ஊரெல்லாம் தன் தாள் பாடித் திரிந்தார். "கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று" பெரிய பெருமாளையும் மற்றைத் திருப்பதி எம்பெருமான்களோடு சேர்த்து அனுபவித்தார். பெரிய பெருமாளையும் "நின்னடியிணை யடைந்தேன்" என்று திருவடியை மட்டும் அனுபவிக்கிறார். தொண்டரடிப் பொடியாழ்வார் பெரிய பெருமாளை மட்டும் அனுபவித்தாலும், தம்மையுணர்ந்தனுபவிப்பது, பரோபதேசம் பண்ணுவது சபத பூர்வமாகப் பெரிய பெருமாளுடைய பரத்வ ஸ்தாபநம் பண்ணுவதாய்ப் போந்தார். திருப்பாணாழ்வார் அப்படியன்றிக்கே பரத்வாதிகளால் பூர்ணரான பெரிய பெருமாளுடைய திருமேனி முழுவதையும் திருவடி தொடங்கி அனுபவிக்கிறார். மற்றையாழ்வாகளுக்கு "பல்லாண்டு","போற்றி" என்று பாவிக்க வேண்டியதாயிற்று. அப்படி யல்லாமல் பாணர் குலத்தில் பிறந்தமையால் இவருக்கு அது ஜன்ம ஸித்தமாயிற்று என்று நாயனார் மற்ற ஆழ்வார்களுடன் திருப்பாணாழ்வாரை ஒப்பிட்டுக் காட்டுகிறார்.[2]

**3.12.3.** மதுரகவியாழ்வாரின் பாசுரங்களைக் கொண்டு அவருடைய தன்மைகளை வெளிப்படுத்துகின்ற நாயனார், ஆழ்வார்களில் தலை சிறந்தவரான நம்மாழ்வாருடன் அவரை ஒப்பிடுகின்றார். நம்மாழ்வார் முதல் நிலையாகிய பகவத் விஷயத்திலே ஊன்றியவர் என்றும் மதுரகவியாழ்வார்

---

1. திருப்பாவை வியாக்கியானம் ப. 174
2. அமலனாதிபிரான் வியாக்கியானம் ப. 6

கடைநிலையாகிய பாகவத விஷயத்திலே ஊன்றியவர் என்றும் எடுத்துக்காட்டியுள்ளார்.[1]

இதுபோல் நம்மாழ்வாரையும் மதுரகவியாழ்வாரையும் ஒப்பிட்டு அருளிச் செய்யப்பட்டுள்ள நாயனாரின் கருத்துக்களைப் பின்னிணைப்பில் காணலாம்.

## 3.14. கண்ணால் காண்பது போல் நிகழ்ச்சிகளை விளக்குதல்

சில பாசுரங்களுக்கு உரையிடும்போது நிகழ்ச்சிகளை நேரில் காண்பது போலவே கற்பனை வளத்துடன் விளக்குகிறார்.

3.14.1. "பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப" என்று வயலினுடைய செழிப்பைப் பேசுகிறாள் ஆண்டாள். இதற்கு, அழகிய குவளை மலரிலே வண்டுகள் ஒன்றோடொன்று சண்டையிடுகின்றன என்பது பொருள். நாயனார் அதனுடைய நேரான பொருளை மட்டும் கூறாமல் இந்த நிகழ்ச்சியை ஒரு காட்சியாக நம் கண் முன் வடித்துக் காட்டுகிறார். "மதுபானம் பண்ணுவதற்கென குவளை மலரிலே இழிந்த வண்டுகள், மதுவின் மயக்கத்தாலும், பூவின் மென்மையான ஸ்பர்சத்தாலும் பூவிலே மயங்கிக் கிடந்தன. காலை உணர்ந்து எழுந்திருக்கும் போது, 'என்னை நீ எழுப்பிற்றிலை, என்னை நீ எழுப்பிற்றிலை' என்று பேடையும் தானும் ஒன்றுக்கொன்று சீறுபாறு என்னா நின்றன" என்று நேரில் காண்பது போல் உரையருளுகிறார்.[2]

3.14.2. பெரியபெருமாள் லோகசாரங்க முனிவரிடம் திருப்பாணாழ்வாரை அழைத்து வருமாறு நியமிக்க, முனிவரும் திருப்பாணாழ்வாரிடம் எம்பெருமானுடைய கட்டளையைக் கூற ஆழ்வாரும் முதலில் பெரிதும் தயங்கிப் பிறகு எம்பெருமானது ஆணையைச் சிரமேற்கொண்டு முனிவரது தோள்மேல் ஏறி அரங்கனின் சன்னிதியை அடைந்தார். அரங்கன் கட்டளையையும், முனிவர் அழைத்ததையும், பாணர் மறுத்ததையும் நாயனார் நம் கண் முன்னே அழகியதோர் காட்சியாகத் தீட்டுகிறார்.[3]

3.14.3. கண்ணன் வெண்ணெயைக் களவு கண்டதைக் கண்ட யசோதை அவனைக் கண்ணிநுண்சிறுத்தாம்பினால் உரலோடே சேர்த்துக்

1. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம் ப. 26
2. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 93
3. அமலனாதிபிரான் வியாக்கியானம் ப. 16

கட்டினாள். யசோதையின் கோபத்தையும், கண்ணன் அழுது ஏங்கும் நிலையையும் நாயனார் ஒரு அழகிய காட்சியாகச் சித்தரிக்கிறார். "இவன் கள்ளனென்று வாயது கையதாகப் பிடித்து, கிடந்ததொரு கயிற்றாலே பண்டும் இவன் களவுக்குப் பெருநிலை நிற்கும் உரலோடேயணைத்துக் கட்ட, இவனும் கட்டுண்டிருந்து அழப்புக்கவாறே வாய் வாயென்று கையிலே கயிற்றைக் கொள்ள, ஏறிட்ட குரலை இறக்க மாட்டாதே இருந்து அழுது ஏங்குமாய்த்து" என்று கண்ணால் காண்பது போலவே வருணிக்கிறார்.[1]

## 3.15. பாசுரங்களைக் கொண்டே கருத்தை வலியுறுத்தல்

ஒரு பாசுரத்திற்கு விளக்கம் அருளிச் செய்யும் பொழுது, அவ்விளக்கத்தை நிலை நாட்டப் பற்பல பாசுரங்களை மேற்கோளாகக் காட்டி விளக்குவது நாயனாரின் தனிச் சிறப்பாகும்.

3.15.1. ஆய்ப்பெண்கள் கண்ணனைக் காணச் சிற்றஞ்சிறுகாலையில் செல்கின்றனர். சிறுகாலையில் வந்தால் கண்ணனைக் காணமுடியாது என்பதால் சிற்றஞ்சிறுகாலையில் ஆய்ச்சிகள் வந்ததாகக் கூறுகின்றகின்ற நாயனார், மற்றைக் காலங்களில் கண்ணனைக் காணமுடியாமையின் காரணத்தைப் பாசுரங்களைக் கொண்டே விளக்குகிறார். "உன்னை இளங்கன்று மேய்க்கச் சிறுகாலே ஊட்டி ஒருப்படுத்தேன்"[2] என்று யசோதை கூறியபடியே கண்ணன் சிறுகாலையில் இளங்கன்று மேய்க்கப் போய்விடுவான். விடிந்த பின் "காலிப்பின்னே போம்"[3] என்கிறபடியே மாடுகளின் பின்னே போய்விடுவான். "எல்லியம்போதாக வரும்"[4] என்கிறபடியே பகலில் வீடு திரும்புவான். அதன்பின் "நீராட்டமைத்து, ஆடி அமுதுசெய்"[5]வான். "அல்லுத்தான்வந்த பின்னை"[6] என்கிறபடியே இருளிலே ஆள் பார்த்து ஊரிலே திரிவான். விரும்பியவர்களைப் புணர்ந்து "இரா நாழிகை மூவேழு சென்றபின்"[7] வீடு தேடி வருவான். எனவே சிறுகாலையில் செல்பவன் இரவு இருபத்தொரு நாழிகை கழித்தே திரும்புவான் என்பதனால் சிற்றஞ்சிறுகாயில் வந்தார்கள் என, பாசுரங்களைக் கொண்டே விளக்குகிறார்.

3.15.2. லோகசாரங்க முனிவர் எப்பொழுதும் எம்பெருமானையே மனனம் செய்து கொண்டிருப்பவராதலால் பெரிய பெருமாள் அவரையிட்டு திருப்பாணாழ்வாரை அழைத்து வரச் செய்தார். அவரும்

---

1. கண்ணிநுண். வியாக்கியானம் ப.47
2. பெரியாழ்வார் திருமொழி 3-3-2
3. பெரியாழ்வார் திருமொழி 3-3-1
4. பெரியாழ்வார் திருமொழி 3-4-2
5. பெரியாழ்வார் திருமொழி 3-3-3
6. பெரிய திரு. 10-7-6
7. பெரியாழ்வார் திருமொழி 3-1-10

எம்பெருமானடியவர்களிடம் அன்பு பூண்டவராகையாலே ஆழ்வாரைத் தம் தோளின் மேலேற்றிக் கொண்டு வந்தார். இக்கருத்தை நாயனார் பல பாசுரங்களைக் கொண்டு விளக்குகிறார். "இழிகுலத்தவர் களேலும் எம்மடியார்களாகில் தொழுமின் நீர் கொடுமின் கொண்மின்"[1] என்று பெரியபெருமாள் உபதேசிக்கக் கேட்டிருக்கையாலும், "நின் திருவெட்டெழுத்துங் கற்று நான் – உற்றதுமுன்னடியார்க்கடிமை"[2] என்றும், "ஆரெண்ணும் நெஞ்சுடையார் அவர் எம்மையாள்வாரே"[3] என்றும், திருமங்கையாழ்வார் அருளிச் செய்ததையும், "பங்கயக் கண்ணனைப் பயிலும் திருவுடையார் எவரேலுமவர் கண்டீர் பயிலும் பிறப்பிடைதோறும் எம்மையாளும் பரமரே"[4] என்று நம்மாழ்வார் அருளிச்செய்ததையும் கேட்டிருக்கையாலும், லோக சாரங்க முனிவர் கடுகப் போய் ஆழ்வாரை அருள்பாடிட்டுத் தோளில் மேலேற்றிக் கொண்டு வந்தார் என்று, பாசுரங்களைக் கொண்டே தம் கருத்தை நாயனார் வலியுறுத்துக்கிறார்.

**3.15.3.** கண்ணன் யசோதை கையால் கட்டுண்டிருந்த நிலையை நம்மாழ்வார் அனுபவித்தார். எம்பெருமான் தன் ஸங்கல்பபாசத்தால் நம்மாழ்வாரைக் கட்டிய நிலையை மதுரகவிகள் அனுபவித்தார். இதைக் கூற வந்த நாயனார் ஆழ்வார் கட்டுண்ட நிலையை நம்மாழ்வாருடைய பாசுரங்கள் மூலமாகவே விளக்குகிறார். "இமையோர் தலைவா"[5] என்று முதற் பிரபந்தத்திலேயே ப்ராப்யத்திலே கண் வைத்த இவரை, "அவாவற்று வீடு பெற்ற"[6] என்கிறபடியே கடைசியில் எம்பெருமானடி சேர்வது வரையிலும் எம்பெருமான் உலகத்தார்க்கு நன்மை பயப்பதற்காக இவரழுவது, அலற்றுவது, ஆண் பெண்ணாக மடலெடுப்பது, தூது விடுவதாம்படி தன் ஸங்கல்ப பாசத்தாலே கட்ட இவரும் அதை அவிழ்க்க மாட்டாதே, "அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால்"[7] என்னும்படி கட்டுண்டிருந்த இருப்பு தமக்கும் போக்யமாயிருந்தபடியை மதுரகவிகள் அருளிச் செய்வதாக நாயனார் விளக்குகிறார்.

## 3.16 ஒப்பீடு செய்தல்

சில பாசுரங்களின் உரையில் இரண்டு விஷயங்களை எடுத்துக் கொண்டு ஒன்றோடொன்று ஒப்பிட்டு அவையிரண்டின் தன்மைகளை நயமாக விளக்குகிறார்.

---

1. திருமாலை 42
2. பெரிய திரு. 8-10-3
3. பெரிய திரு. 2-6-2
4. திருவாய். 3-7-1
5. திருவிருத்தம் 1
6. திருவாய்மொழி 2-3-3
7. திருவாய்மொழி 10-10-11

**3.16.1** எம்பெருமானையும், மாணிக்கத்தையும் ஒப்பிட்டு, அவ்விரண்டின் பொதுவான தன்மைகளை நாயனார் பட்டியலிடுகிறார். "மணிவண்ணா என்று – மணியினுடைய ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது. அதாவது 'உண்டு' என்ன உயிர் நிற்கையும், உடையவன் காலிலே ஸர்வரும் விழும்படியிருக்கையும், இழந்தார் பிழையாதொழிகையும், கைப்பட்டார்க்குப் பூணலாயிருக்கையும், பூணாதார்க்கு அழித்து உண்ணலாயிருக்கையும், கிழிச்சீரையிலே அடக்கலாயிருக்கையும், பிறர்க்கேயாயிருக்கையும் அளவு படாமல் உபகரிக்கையும், 'கொடுத்தோம்' என்று நினைத்திராதொழிகையும், வேறொன்றில் கண் வைக்கவொட்டாதொழிகையும் தொடக்கமான ஸ்வபாவங்கள்" என்று ஒப்பிட்டுக் காட்டுகிறார்.[1]

**3.16.2.** வெண்ணெயைக் களவு செய்த கண்ணனையும், திருப்பாணாழ்வார் உள்ளத்தைக் கவர்ந்த அரங்கனையும் ஒப்பிடுகிறார். *கண்ணன் வெண்ணெயைக் கவர்ந்தான்; திருவரங்கன் திருப்பாணாழ்வார்* உள்ளத்தைக் கவர்ந்தான் என்றும், உறிகளின் குறியழியாதிருக்க கண்ணன் வெண்ணெயைக் கவர்ந்தான்; ஆழ்வார் உடல் குறியழியாதிருக்க அரங்கன் அவருள்ளம் கவர்ந்தான் என்றும் கூறி ஆத்மாவை வெண்ணெய்க்கு ஒப்பிட்டுள்ளார்.[2]

**3.16.3.** கண்ணனைக் கட்டிய தாம்பையும் பக்தியையும் நாயனார் ஒப்பிடுகிறார். கண்ணித்தாம்பு பலகண்ணிகளை உடையதாயிருக்கும்; பக்தியும் ருசி, ஸங்கம், பக்தி, பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்திகள் என்று அநேக நிலைகளை உடையதாயிருக்கும். நுண்தாம்பு, திருமேனியிலே அழுந்தும்படி நுண்ணிதாயிருக்கும்; பக்தியும், ஜ்ஞான விசேஷமாகையாலே அந்த ஜ்ஞாநந்தான் நுண்ணறிவாயிருக்கும். வேறு ஒன்றுக்கும் உபயோகமில்லாத கயிற்றைக் கொண்டு கண்ணனை யசோதை கட்டினாள்; அநந்யமான (மற்றொருவருக்கு ஆட்படாத) பக்திக்கு மட்டுமே இவன் கட்டுப்படுவான். ஆக கண்ணிநுண் சிறுத்தாம்பு என்றதால் ஜ்ஞான விசேஷமுமாய், அநந்யார்ஹமுமாய் ஸங்க காமாதி பர்வத்தையுமுடைத்தாயிருக்கிற பக்தியைச் சொல்லிற்றாயிற்று என்று நாயனார் ஒப்பிட்டுக் கூறுகிறார்.[3]

## 3.17. நீண்ட உரைத்தொடர் அமைத்தல்

நாயனார் சில இடங்களில் நீண்ட உரைத் தொடர் மூலம் பாசுரத்தின் உட்கருத்தை வெளியிடுகிறார்.

---

1. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 451
2. அமலனாதிபிரான் வியாக்கி ப. 113
3. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக். ப. 51

**3.17.1** ஆய்ப் பெண்கள் தென்னிலங்கையை அழித்தவனுடைய திறலுக்குப் பல்லாண்டு பாடுகிறார்கள். 'திறல்' என்ற சொல்லுக்கு நாயனார்,

> "அரண்களொன்றும் வேண்டாதபடி எத்தனையேனும் தரமுடைய தேவஜாதி தந்தாமுடைய வருத்தங்களாலே ஸாதித்த அஸ்த்ரங்களை எல்லாம் ஒரு மிடறாக நின்று ஒருகாலே ஓரிலக்காகி விட்டால் அவர்களுக்குத் தப்பவொண்ணா தென்று விட, நாலடி பிற்காலித்து விடாதே நெஞ்சு கலங்காதே நிலையும் பேராதே மஹிஷிகளுந் தானுங் கூட ஜலக்ரீடை பண்ணும்போது அவர்கள் பூவையிட்டுத் தன்மேல் எறிந்தால் பிறக்கும் விகாரமும் பிறவாதபடி இருக்குமவன், 'நான் கடவேன்' என்று நோக்குகிற ஊராய், அழகிதான அரணையுடைத்தாய், குளவிக்கூடு கொண்டாற்போலே ஹிம்ஸகரடையத் திரண்ட நிலமாயிருந்த லங்கையை, அரண் சிதற அடைமதிள்படுத்தி, சதுரங்க பலத்தையும் துவளவென்று, சேனைத் தொகையைச் சாடி, ப்ராத்ரு புத்ராதிகளைத் தலையழித்து, தான் சிலரை ஆச்ரயித்துக் கதிர்பொறுக்கிக் கூட்டினவையல்லாத அம்புகளைக் கொண்டு, இடியேறுண்டிடச் சுற்றும் வேமாபோலே, பையலைப் பக்க வேரறுத்து, நெஞ்சழிந்து நிலை தள்ளும்படி பண்ணி, ஸத்தையழிந்து பட்டு விழும்போதும் வில்பிடித்த பிடிநெகிழாதே விழக்கடவ அவனை, எதிரி வீரமறியாதே கோழையாய்ப் பட்டானென்று தரக்கேடனாகாதே வீரன் என்று விருது பிடிக்கும் வில்லைப் பொகடுவித்து, ஸ்திரீப்ராயனாக்கிக் கொன்று வென்றி கொண்ட பராபிபவநஸாமர்த்யத்தை யெல்லாம் நினைத்து "திறல்" என்கிறார்கள்"

என்ற நீண்ட விளக்கத்தை அருளிச்செய்துள்ளார்.[1]

**3.17.2** அரங்கத்தம்மான் திருவாரமார்பு திருப்பாணாழ்வாரை ஆட்கொண்ட விதத்தை நாயனார் நீண்ட உரைத்தொடர் மூலம் விளக்குகிறார்.

> "முடிக்குரியவனை முடிசூட்டுமா போலே, என்னுடைய ஸ்வரூப விரோதியையும், ஆச்ரயண விரோதியையும், உபாய விரோதியையும், உபேய விரோதியையும், போக விரோதியையும் போக்கி, ஸ்வரூப அநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டது. தன்னுடைய மேன்மையையும், அழகையும் காட்டி என்னை அநந்யார்ஹமாம்படி பண்ணி, பெரிய பிராட்டியாரையிடுவித்து, 'ந கச்சிந் நாபராத்யதி'

1. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 417

என்னப் பண்ணி, பெரிய பெருமாளை யிடுவித்து, அவர் தம்முடைய போக்யதையை என்னெஞ்சிலே பிரகாசிப்பித்துக் கொண்டு புகுரும்படி பண்ணி, என்னுடைய ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டது அந்தத் திருமார்பன்றோ என்கிறார்."[1]

3.17.3 "பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும்" என்ற பாசுரத்தில் "செயல் நன்றாகத் திருத்தி" என்ற சொற்றொடருக்கு,

> "இவருபதேசித்த அர்த்தம் என் நெஞ்சிலே பட்டு அதுதான் அத்யவஸாய பர்யந்தமாய் அவ்வளவன்றிக்கே அநுஷ்டான சேஷமாய், அவ்வநுஷ்டானந்தான் ஸதஸதநுஷ்டான மிச்ரமாகையன்றிக்கே ஸதநுஷ்டாநமேயாம்படி திருத்தினார். முற்பட ச்ரவணமும், ச்ருதமான அர்த்தத்தில் மநநமும், மநநமான அர்த்தத்தில் மஹாவிச்வாசமும், விச்வஸ்தமான அர்த்தத்தில் அநுஷ்டாநமும், அதில் அஸதநுஷ்டாநம் கலசாதே ஸதநுஷ்டாநமேயாய்ப் போருகையுமிறே செயல் நன்றாகத் திருத்துகையாவது"

என்று நீண்ட உரைத் தொடர் அமைத்து விளக்குகிறார்.[2]

## 3.18 பல பொருள் கூறுதல்

நாயனார் சில இடங்களில் பாசுரங்களில் வரும் சொற்களுக்குப் பல பொருள் கூறி விளக்குகிறார்.

3.18.1 "போதரிக் கண்ணினாய்" என்பதற்குப் பூவும் மானும் போன்ற கண், பூவில் படிந்த வண்டு போன்ற கண், பூவோடே சீறுபாறு என்ற கண், உலாவுகின்ற மான்போலே இருக்கிற கண் என்று பல அர்த்தங்களைக் கூறுகிறார். "அரி" என்பதற்கு மான், வண்டு, சத்ரு(எதிரி) எனப் பல அர்த்தங்களைக் கொண்டு பொருள் உரைக்கிறார்.[3]

3.18.2 "உவந்த உள்ளத்தனாய்" என்பதற்கு ஆழ்வாரைக் கைக் கொண்டதால் வந்த உவப்பு, உலகமளந்தவன்று எவரும் கேட்காமலிருக்கச் செய்தே எல்லோர் தலையிலும் திருவடிகளை வைத்த பொழுது, வேண்டாவென்று விலக்காதிருக்கப் பெற்றோமே என்கிற உவப்பு, விலக்காமையே காரணமாகத் திருவடிகளை வைத்ததால் உண்டான உவப்பு எனப் பல பொருள்களைக் கூறுகிறார்.[4]

---

1. அமலனாதிபிரான் வியாக். ப. 68
2. கண்ணிநுண். வியாக். ப. 212
3. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 243
4. அமலனாதிபிரான் வியாக். ப. 32

**3.18.3** "மேவினேனவன் பொன்னடி" என்பதில் "அவன் பொன்னடி" என்பதற்கு "ஆழ்வார் திருவடிகளையே உபாயமாகப் பற்றினேன்" என்றும், "அத்திருவடிகளையே உபேயமாகப் பற்றினேன்" என்றும், எம்பெருமானடியவர்களின் தலையில்மட்டுமிருக்கும் திருவடிகளைப் பற்றினேன்" என்றும், "நான் தொட்டுப் பரிமாறினாலும் குற்றம் வராத திருவடிகளைப் பற்றினேன்" என்றும் நான்கு பொருள்களைக் காட்டுகிறார்.[1]

## 3.19 . தொடர்புரை வரைதல்

ஒரு சொற்றொடரில் வரும் எல்லாப் பதங்களையும் தனித்தனியே எடுத்து விளக்கும்போது அடுத்தடுத்த சொற்களுக்குத் தொடர்பு கூறி விளக்குதல் நாயனாரின் உரைகளில் உள்ள தனிச் சிறப்பாகும்.

**3.19.1** "மாமாயன் மாதவன் வைகுந்தன்" என்ற தொடருக்கு, "மாமாயன் – ஆச்சர்ய குண சேஷ்டிதங்களாலே அபலைகளான பெண்களை எழுதிக் கொண்டு, அவர்களுக்கு இஷ்ட விநியோகார்ஹமாம்படி பவ்யனாயிருக்குமவன். மாதவன்– அந்த ஸௌலப்யத்துக்கு குருகுல வாஸம் பண்ணினவிடம். வைகுந்தன் – பெண்களையேயன்றிக்கே ஆண்களையும் அடிமை கொண்டு ஒருநாட்டுக்குக் கையாளாயிருக்குமவன். ச்ரிய:பதித்வத்தால் வந்த மேன்மைக்குத் தகுதியான தேச விசேஷத்தை உடையவன்; ஸ்ரீவைகுண்டத்தைக் கலவிருக்கையாக உடையனாய், பெரிய பிராட்டியாருக்கு வல்லபனாயிருந்து வைத்து, நமக்குக் கையாளான ஆச்சர்ய தமன் என்னவுமாம்" என்று உரையிட்டுள்ளார்.[2]

**3.19.2** "அமலனாதிபிரான் அடியார்க்கென்னையாட்படுத்த விமலன் விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்" என்ற தொடரில் "அமலன்" – என்பதற்கு தம்முடைய தோஷத்தைப் பாராதே தமக்கருள் செய்த எம்பெருமான், அதன் பின்பும் நிர்மலனாய் இருந்தான் என்கிறார். "ஆதி"– இப்படித் தம்மை அங்கீகரிப்பதற்குக் காரணம் பெற்றவர்களாலே விடப் போகாமை என்கிறார். மேலும் பிரளயத்திலே அழிந்த உலகத்தை உண்டாக்கினாப்போலே நான் அழித்துக் கொண்ட ஸ்வரூபத்தை உண்டாக்கினவன் என்கிறார். "பிரான்" – என் தாழ்வு பாராதே என்னைக் கைக் கொண்ட உபகாரகன். "அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன்" – தன்னளவில் அடிமை ஆக்கிக் கொண்டதோடு நில்லாது தன்னடியார்களளவும் ஆக்கிக் கொண்ட பரிசுத்த ஸ்வபாவம்.

1. கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக். ப. 92 2. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 188

ஆளில்லாமையாலோ இழிந்தவரான உம்மை ஒரு பொருளாக்கினான் என்ன, இவ்வாறு தம்மை ஒரு பொருளாக்கியயவன் "விண்ணவர் கோன்" என்கிறார். அதாவது பரமபதத்திலுள்ள நித்ய சூரிகள் திரளாக அவனைச் சூழ்ந்து வாழ்த்திப் பணி செய்ய இருக்குமவன் தோஷமே நிறைந்த என்னை ஒரு பொருளாக்கினான் என்கிறார். இம் மண்ணுலகில் ஒருவரில்லாமையால் உம்மை அங்கீகரித்தாரோ என்ன, மண்ணவர், விண்ணவர் ஆகிய இரு திறத்தாரும் அடிமை செய்ய ஏற்றுக் கொள்ளுகிற பூர்ணனான "விரையார் பொழில் வேங்கடவன்" தன் மேன்மை பாராதே என்னை ஏற்றுக் கொண்டான் என்று அமலன், ஆதி, பிரான், அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன், விண்ணவர்கோன், விரையார் பொழில் வேங்கடவன் என்று ஒவ்வொரு பதத்திற்கும் நாயனார் தொடர்பு கூறி விளக்கி உரையிட்டுள்ளார்.[1]

**3.19.3** "கரிய கோலத் திருவுருக் காண்பன் நான்" என்ற தொடரில் வரும் "கரிய" என்ற சொல்லுக்கு, நித்ய சூரிகள் அனுபவிக்கிற போதும், ஆழ்வார் அனுபவித்த போதும் எம்பெருமான் நிறம் வெளிறியிருந்ததாகவும், மதுரகவிகளுக்கு எம்பெருமான் தன் வடிவைக் காட்ட, இவர் அநுபவித்தவுடன் தன்னிறமிட்டதாயிற்று என்றும் கூறுகிறார். "கோலம்" என்பதற்கு, மதுரகவிகளுக்குத் தன் வடிவழகைக் காட்டும் பொழுது எம்பெருமான் ஆனைக்கு உதவ வந்தாற் போல இருந்தபடியே வராமல் மனத்திற்கு இனியவர்களிடம் வருபவர்கள் ஆபரணங்கள் பூண்டு அலங்காரம் செய்து கொண்டு வருவது போல வந்தான் என்கிறார். "திருவுரு" என்பதற்கு பெரிய பிராட்டியாராகிற கழற்றவொண்ணாததோராபரணத்தையும் கொண்டு வந்தான் என்று கூறியுள்ளார். "காண்பன்" என்ற சொல்லுக்கு எம்பெருமான் மதுரகவிகளுக்குத் தன் வடிவழகைக் காட்டுவதற்காக இப்படி அழகு செய்து கொண்டு வந்த பொழுதும் மதுரகவிகள் எம்பெருமானை "ஒரு பார்வை விசேஷம் பார்ப்பாரைப் போல" (ஒரு விசித்ரமான பொருளைப் பார்ப்பது போல) அலட்சியமாகப் பார்த்ததாகக் கூறுகிறார்.[2] இவ்வாறு ஒரு சொற்றொடரில் வரும் எல்லாப் பதங்களையும் தனித்தனியே எடுத்துத் தொடர்பு கூறி நயமுற விளக்குகிறார்.

## 3.20 தத்துவக் கருத்துக்களைக் கூறுதல்

பாசுரங்களுடைய உரைகளில் தத்துவக் கருத்துக்களை மிகுதியாகக் கூறி விளக்குவது நாயனாருடைய தனிச் சிறப்பாகும். இவருடைய உரைகளில் தத்துவக் கருத்துகள் மிக அதிகஅளவில் காணப்படுகின்றன.

---

1. அமலனாதிபிரான் வியாக். ப. 20 2. கண்ணிநுண். வியாக். ப. 108

3.20.1 "போதுவீர் போதுமினோ" என்பதற்கு "நாலுநாள் ஊர்வசீ கடாக்ஷம் பெற்று ஸ்வர்க்காநுபவம் பண்ணி பின்பு "த்வம்ஸ" என்று தள்ளுகிற இதுக்கு, கூச்மாண்டகணஹோமாதிகள் பண்ண வேண்டாநின்றது, "ந ச புநராவர்த்ததே" என்று அபுநராவ்ருத்தி லக்ஷண மோக்ஷத்திற்கு இச்சாமாத்திரமே அமைவானென்னென்னில், பெறுகிற பேற்றுக்கு ஸத்ருசஸாதநம் இல்லாமையாலே இங்கு அபிமத ஸித்திக்கு இச்சையே வேண்டுவதென்கை. இச்சை ஸர்வோபாய ஸாதாரணமாயிருக்குமே. 'அல்லோம்' என்னாதாரெல்லாரும் அதிகாரிகள்" என்று உரையிட்டுள்ளார். சுவர்க்காநுபவம் முதலான அல்ப பலன்களை அநுபவிக்க யாகங்கள் பல செய்யவேண்டும்; ஆனால் எம்பெருமானை அடைய விருப்பம் மட்டுமே போதும். எம்பெருமான் நமக்கருள் புரியும் பொழுது விலக்காமல் இருந்தாலே போதுமானது என்ற தத்துவக் கருத்தை விளக்கியுள்ளார்.[1]

3.20.2 'பழவினை என்பதற்கு' "காலமோ அநாதி, ஆத்மவஸ்துவோ நித்யம், அசித் ஸம்ஸர்க்கமும் அன்றே தொடங்கி அநுவர்த்திக்கிறவையிறே. இக்காலமெல்லாம் கூடக்கூடு பூரித்ததாயிருக்குமிறே.'ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்றவன் தானே தள்ள வேண்டும்படியாயிருக்கை" என்று கூறியுள்ளார். இதில் ஆத்மா நித்யம் என்றும், நம்முடைய பாபங்களை எம்பெருமான்தான் போக்கியருள வேண்டும் என்றும் தத்துவத்தைக் கூறியுள்ளார்.[2]

3.20.3 "கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய" என்ற தொடருக்கு, பல இடங்களிலும் அற்று முடிந்த கயிற்றைக் கொண்டு யசோதை கண்ணனைக் கட்டினாள் என்று உரையிட்டுள்ளார். நல்ல கயிறாகில் கன்றுகளையும் பசுக்களையும் கட்டுவற்குப் பயன்படும். ஆனால் வேறொருவரைக் கட்டுவதைக் கொண்டு இவனைக் கட்ட முடியாது. ஆகையால் வேறு ஒருவருக்கும் பயன்படாத கயிற்றினாலே கண்ணனைக் கட்டினாள் என்று கூறிவிட்டு மேலும் அதை விளக்க. வேறு ஒருவர்க்கும் ஆட்படாமல் எம்பெருமானொருவனுக்கே பரதந்த்ரராய், அவனிடத்திலேயே பக்தி(அன்பு) செலுத்துபவர்களுக்கே எம்பெருமான் கட்டுப்படுவான் என்ற தத்துவத்தைக் கூறுகிறார்.[3]

> "ஒழிஞ்சான முட்டாயிருப்பதொரு கயிற்றையிட்டாயிற்று இவனைக் கட்டுவது; வேறொருவரைக் கட்டுமதிட்டு இவனைக் கட்டப்போகாதே:

---

1. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 42
2. அமலனாதிபிரான் வியாக். 63
3. கண்ணிநுண். வியாக். ப. 49

> பசுப்ராயரைக் கட்டுமதொன்றுக்கு இவகைப்படானே:பல கண்ணிகளையுமுடைத்தாய் அநந்யமாய் இருப்பதொரு பாசத்துக்கிறே இவனகப்படுவது"

என்பது நாயனார் அருளிச்செயலாகும்.

## 3.21. ரகசியநூல்களை அடியொற்றியுள்ளமை

இவருடைய திவ்ய பிரபந்த உரைகளிலுள்ள தத்துவக் கருத்துகள் பல இடங்களில் பிள்ளை உலகாசிரியருடைய ஸ்ரீவசனபூஷணம், முமுக்ஷுப்படி முதலிய ரகசிய நூல்களின் கருத்துக்களுடன் ஒத்திருக்கின்றன.

**3.21.1** "தூயோமாய் வந்து" என்றவிடத்தில் "தூய்மை" என்பதற்கு பகவத் ஸம்பந்தம் என்று கூறுகிறார்.

> "பகவத் ஸம்பந்தத்தை அநுஸந்திக்கையொழிய, தனக்கொரு சுத்தியில்லை. விபீஷணன் கடலில் முழுக்கிட்டன்றிறே வந்தது; அர்ஜுநன் யுத்தத்தின் நடுவே முழுக்கிட்டன்றிறே சரமசுலோகம் கேட்டது: திரௌபதி முழுகியன்றே பிரபத்தி பண்ணிற்று. ஆகையால் ப்ரபத்திக்கு ஒரு சுத்தியும் தேட வேண்டா; அசுத்தி ஸம்பாதிக்கவும் வேண்டா: நின்ற நிலையில் அதிகாரமமையும்"

என்று உரையிட்டுள்ளார்.[1] இக்கருத்துகள் "திரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று: அர்ஜுனன் நீசர் நடுவேயிறே இவ்வர்த்தம் கேட்டது; ஆகையால் சுத்தி அசுத்திகள் இரண்டும் தேட வேண்டா. இருந்தபடியே அதிகாரியாமித்தனை"[2] என்ற ஸ்ரீவசனபூஷண சூத்திரத்தை ஒத்துள்ளது.

**3.21.2.** "அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்" என்பதற்கு "ஆத்மாவுக்கு நிலைநின்ற வேஷம் சேஷத்வமாகையாலே "அடியார்க்கு" என்கிறார்" என்று உரையருளியுள்ளார்.[3] இக்கருத்தும் "சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்"[4] என்ற முமுக்ஷுப்படியின் சூத்திரத்தை ஒத்துள்ளது.

**3.21.3** "பணிகொள்வான்" என்ற சொற்றொடருக்கு, நம்மாழ்வார் மதுரகவிகளை பகவத் பாகவத விஷயங்களில் அடிமை செய்யும்படி மூட்டினார்; மதுரகவிகளும் பகவத் பாகவத விஷயங்களில் அடிமை செய்தது நம்மாழ்வாருடைய உகப்புக்காக என்று நாயனார் உரையிட்டுள்ளார்.

---

1. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 128
2. ஸ்ரீவசநபூஷணம் - 29
3. அமலனாதிபிரான் வியாக். ப. 21
4. முமுக்ஷுப்படி - 55

> "பகவத் பாகவத விஷயங்களுக்கு அடிமை செய்யும், ஆசார்யனுக்கு ப்ரியமாக; பகவத் பாகவத விஷயமிரண்டும் உகக்கைக்கு ஆசார்யனுக்கு அடிமை செய்யும்"

என்றருளியுள்ளார்.[1] ஸ்ரீவசனபூஷணத்தில் அமைந்துள்ள, "ப்ராப்யத்துக்கு ப்ரதமபர்வம் ஆசார்யகைங்கர்யம்; மத்யம பர்வம் பகவத்கைங்கர்யம்; சரம பர்வம் பாகவத கைங்கர்யம்"[2] என்ற சூத்திரத்தை மேலே குறிப்பிட்ட நாயனாரின் உரை பெரும்பாலும் ஒத்துள்ளது எனலாம்.

## 3.22 மரபு வழக்குகள்

நாயனார் தம்முடைய உரைகளில் நயமான மரபு வழக்குகளை மிக அதிகமாகக் கையாண்டுள்ளார்.

3.22.1. தண்ணீர்த் துரும்பற்று–தண்ணீரில் கிடக்கும் துரும்பு அத்தண்ணீரை அருந்துவதற்கு தடையாக நிற்கும். அதைப் போல ஒன்றை அடைவதற்குத் தடையாக அமைந்து இருப்பதைத் தண்ணீர்த் துரும்பு என்ற சொல் குறிக்கிறது.

> "ஆய்ப்பெண்கள் கிருஷ்ணன் திருமாளிகைக்கு அசல் திருமாளிகையுமாய், நடுவு இடைச் சுவர் தள்ளிப் பொகட்டு ஒரு போகியாகத் தண்ணீர் துரும்பற்று ஒரு படுக்கையிலே அவனுந்தானுமாக எப்பொழுதும் அனுபவிப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள்."[3]

ஒரு தடையுமில்லாமல் எப்பொழுதும் கிருஷ்ணனை அநுபவிப்பவளை ஆய்ப் பெண்கள் எழுப்புவதாக நாயனார் கூறும்பொழுது 'தண்ணீர்த்துரும்பற்று' என்ற மரபு வழக்கைக் கையாண்டுள்ளார்.

3.22.2. துறுப்புக்கூடு – கண்டபொருள்களையெல்லாம் இட்டு வைக்கும் கலம். திருப்பாணாழ்வாருடைய ப்ரபந்தம் ப்ரணவம் போலே மிகவும் சுருக்கமாயிருத்தல், மஹாபாரதம் போலே பரந்து துறுப்புக் கூடாயிருத்தல் செய்யாதே பத்துப்பாட்டாய் சுருக்கமாய் அமைந்துள்ளது என்கின்றார்.[4]

3.22.3 கைவழிமண் – குயவன் கையில் உள்ள மண் அவன் விரும்பிய பொருளாக மாறுவதைப் போல ஒருவன் விருப்பப்படி மற்றவர்கள் நடத்தல்.

---

1. கண்ணி. வியாக். ப. 213
2. ஸ்ரீவசனபூஷணம் - 415
3. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 200
4. அமலனாதிபிரான் வியாக். ப. 14

அரக்கர்கள் ராவணனுக்குக் கைவழி மண்ணான அடியார்களாய் அவனுடைய கட்டளைப்படி சொன்னதைச் செய்தார்கள் என்று அருளிச்செய்கின்றார்.[1]

## 3.23. செறிவுத் தொடர்

நாயனாருடைய உரைகளில் அழகான செறிவுத் தொடர்கள் இடம் பெற்றுள்ளன.

### 3.23.1. எடுத்து விடுகை – படையெடுத்தல்

"ராஜாக்களும் தங்கள் பகைவர்கள் பக்கல் கொண்ட பகையை மறந்து எடுத்து விடுகையுந் தவிர்ந்து, கை கழியப் போனவர்களும் தந்தாம் வீடுகளுக்குத் திரும்பி உகந்த விஷயங்களோடே கூடியிருக்கும்படி மாரிக்காலமும் அமைகின்றது."[2]

3.23.2. கோல் தேனாக அநுபவித்தல். மிகவும் இனியதாகக் கொள்ளுதல்.

"திருமங்கையாழ்வார் பெரிய பெருமாளையும் அல்லாத திருப்பதிகளைப் போல கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை என்று கோல் தேனாக அனுபவித்தார்."[3]

3.23.3 வரைமுறுகல் – சுவையற்றது. (முறுக வறுக்கப்பட்டது – காந்தியது.)

"கண்ணன் சொன்ன கீதை வறைமுறுகலாயிருக்கும்."[4]

## 3.24 ஐதிஹ்யங்கள்

பாசுரங்களுக்கு உரையிடும் பொழுது நாயனார் அவற்றின் பொருளைத் தெளிவுபடுத்த ஐதிஹ்யங்களை எடுத்துக் காட்டி விளக்குகிறார்.

3.24.1. "ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி" என்ற இடத்தில் ஆய்ச்சியர்கள் எம்பெருமான் பேர் பாடுகையே தங்களுக்குப் பேறு என்கின்றனர். திருநாமம் சொல்வதற்குத் தகுதி வேண்டா; அதற்கு எல்லோரும் அதிகாரிகள் என்கிற கருத்தை நாயனார் ஒரு ஐதிஹ்யத்தின் மூலம் காட்டுகிறார்.

"திருநாமம் சொல்லுகைக்கு அதிகார ஸம்பத்தி வேண்டாவோ?"என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்டருள: "யோக்யனாகில் இருந்தபடி

---

1. கண்ணிநுண். வியாக்கியானம் ப. 122
2. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 398
3. அமல. வியாக். ப. 8
4. கண்ணி. வியாக். ப. 185

சொல்கிறான்; அயோக்யனாகில் யோக்யதை சம்பாதிக்க வேண்டா" என்றருளிச் செய்தார்"

என்கிற ஐதிஹ்யத்தை எடுத்துக் காட்டியுள்ளார்.[1]

**3.24.2.** பெரிய பெருமாளைப் பாட வந்த திருப்பாணாழ்வார் "விரையார் பொழில் வேங்கடவன்" என்று திருவேங்கடமுடையானையும் பாடுகிறார். அதை விளக்க நாயனார் ஒரு ஐதிஹ்யத்தைக் குறிப்பிடுகிறார்.

> பிள்ளைத் திருநறையூரரையரைச் சிலர் பெரிய பெருமாளை அநுபவிக்க இழிந்தவர் திருவேங்கடமுடையான் பாடே போவானென்னென்ன: ஆற்றிலே அமிழ்ந்துகிறவன் ஒரு காலைத் தரையிலே ஊன்றினால் பிழைக்கலாமோ வென்று கால் தாழ்க்குமா போலே, இவரும் பெரிய பெருமாளழகிலே அழுந்துகிற வராகையாலே திருமலையிலே கால் தாழ்ந்தார்: அது மடுவாகிறதறிகிலர்"

என்று குறிப்பிடுகிறார்.[2]

**3.24.3** "அவன் பொன்னடி மேவினேன்" என்ற இடத்தில் மதுரகவிகள் நம்மாழ்வாரைப் பற்றுவதற்கு ஒரு புருஷகாரம் வேண்டுவதில்லை என்று கூறுவதாக உரையிட்டுள்ளார்.

> "ஒரு புருஷகார புரஸ்ஸரமாகவன்றிக்கே தந்நிரபேக்ஷமாக ஆச்ரயித்தேன். இங்கே சீயர் வார்த்தையை அநுஸந்திப்பது"

என்று ஒரு ஐதிஹ்யத்தை எடுத்துக் காட்டியுள்ளார். பட்டர் நஞ்சீயரைத் திருத்திப் பணிகொள்வதற்காக மேல் நாட்டுக்கு எழுந்தருளியபோது, 'காடும் மலையும் கடந்து ஒரு புருஷகாரமின்றிக்கே தாமே மேல் விழுவதே' யென்று நஞ்சீயர் ஈடுபட்டுச் சொன்ன வார்தையை இங்கு எடுத்துக் காட்டுகிறார்.[3]

## 3.25 உவமைகள்

உவமைகளைக் கையாண்டு உரைகளை விளக்கும் உத்தியையும் நாயனார் கையாண்டுள்ளார்.

**3.25.1.** இந்திரன் துயர் தீர்க்க வாமனனாக வந்து மாவலியிடம் மூவடி மண் வேண்டி நின்ற எம்பெருமான், மாவலி நீர் வார்க்க திரிவிக்கிரமனாக

1. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 92　　2. அமலனாதிபிரான் வியாக். ப. 24
3. கண்ணிநுண். வியாக். ப. 93

வளர்ந்தபடியை "பனிப்பட்டுச் சாய்ந்த மூங்கில் ஆதித்ய கிரணம் பட்டவாறே வளருமாபோலே" என்கிற உவமையின் மூலம் விளக்குகிறார்.[1]

**3.25.2** "என்னுள் புகுந்தான்" என்பதற்கு 'என்தாழ்வு பாராதே எம்பெருமான் என்னெஞ்சினுள் புகுந்தான்' என்று திருப்பாணாழ்வார் அருளுவதாகக் கூறிய நாயனார் அதை விளக்க "வசிஷ்டன் சண்டாள க்ருஹத்திலே புகுமா போலே" என்ற உவமையைக் கையாண்டுள்ளார்.[2]

**3.25.3** "தேவு மற்றறியேன்" என்று எம்பெருமானையும் மறந்து நம்மாழ்வாரிடத்தில் பக்தி பூண்டவர் மதுரகவிகள். இதைக் கண்ட எம்பெருமான் நம் பக்தனிடத்தில் பக்தி பூண்ட இவருக்கு நாம் கொடுக்கும் பரிசிலேதென்று பார்த்து இவருடைய திருவுள்ளத்திலே தன் வடிவழகைக் கொண்டு வந்து காட்டினான். "நீர் வெள்ளத்திலே நெய்தல் பாரித்தாப்போலே" எம்பெருமான் தன் வடிவழகைக் காட்டியதாக நாயனார் உதாரணம் கூறி தெளிவுபடுத்துகிறார்.[3]

## 3.26 மதிப்பீடு செய்தல்

சில சொற்களுக்குப் பொருள் கூறும்பொழுது அச் சொல்லுக்கு உரிய பொருளை அவற்றிக்கு நேர் எதிரான சொற்களுடன் ஒப்பிட்டு மதிப்பீடு செய்கிறார்.

**3.26.1** "ஓங்கி உலகளந்த உத்தமன்" என்பதில் உத்தமன் என்பதற்கு அதமன், மத்யமன், உத்தமன் என்று வகைப்படுத்தி, அதமன் – பிறரைத் துன்புறுத்தித் தன் வயிறை வளர்ப்பவன்; மத்யமன் – பிறரும் வாழ வேணும், நாமும் வாழ வேணும் என நினைப்பவன்; உத்தமன் – தன்னை அழிய மாறியாகிலும் பிறர் வாழவேணும் என்று இருப்பவன் என்று மூவகை மனிதர்களைப் பற்றி விளக்கியுள்ளார்.[4]

**3.26.2** "நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்" என்பதை நன்மை கலசாத பொல்லாங்கு. நன்மை, நன்மையால் மிகுகை என்று மூன்றாக வகைப்படுத்தி விளக்குகிறார். நன்மை கலசாத பொல்லாங்காவது – காரணமில்லாமல் அனைவரிடமும் கோபம் கொள்ளுதல்; நன்மையாவது – எம்பெருமான் அடியவர்களிடத்தில் அபகாரம் செய்யாதிருத்தலும், தன்னிடம் காரணமில்லாமல் அபகாரம் செய்பவர்களிடத்திலும் கோபம் கொள்ளாதிருத்தலும்; நன்மையால் மிகுகையாவது – தன்னிடம் அபகாரம்

1. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 90
2. அமலனாதிபிரான் வியாக். ப. 65
3.. கண்ணிநுண். வியாக். ப. 106
4. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 91

செய்தவர்களுக்கும் உபகாரம் செய்கை; அதாகிறது அவர்களிடத்தில குறை காணாதிருக்கை.[1]

## 3.27 வருணனை நடையில் உரையிடுதல்

நாயனார் பாசுரங்களிலுள்ள சொற்களைச் சில இடங்களில் வருணனை மூலம் விளக்கியுள்ளார்.

3.27.1. "கோவிந்தா" என்பதற்கு "கடையாவும் கழிகோலும் கையிலே பிடித்த கண்ணிக் கயிறும், கற்றுத் தூளியாலே தூஸரிதமான திருக்குழலும், மறித்துத் திரிகிறபோது திருவடிகளிலே கிடந்து ஆரவாரிக்கிற கழல்கள் சதங்கைகளும், குளிர் முத்தின் கோடாலமுமாய் நிற்கிற உபாய வேஷத்தை 'கோவிந்தா' என்கிறார்கள்" என்று கோவிந்தனின் திருக்கோலத்தை வருணிக்கிறார்.[2]

3.27.2. "அவுணனுடல் கீண்ட ஆதிப்பிரான்" என்பதற்கு "நரஸிம்ஹத்தினுடைய மொறாந்த முகமும், நாமடிக் கொண்ட உதடும், இறுத்து நோக்கின நோக்கும், குத்த முறுக்கின கையும் கண்டபோதே பொசுக்கின பன்றி போலே உலர்ந்த தாழை நாரைக் கிழித்தாப் போலே கிழித்தபடி" இருக்கிற நரஸிம்ஹத்தினுடைய திருக்கோலத்தை நாயனார் வருணிக்கிறார்.[3]

## 3.28 சொற்களைப் பிரித்துப் பொருள் கூறுதல்

நாயனார் பாசுரங்களில் வரும் சில தொடர்களை இரண்டு வகையாகப் பிரித்துப் பொருள் கூறியுள்ளார்.

3.28.1. "ஆயர் குலத்தினில் தோன்றுமணிவிளக்கை" என்ற தொடரை 'ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை' என்றும், 'ஆயர் குலத்தினில் தோன்றும் மணி விளக்கை' என்றும் இரண்டு வகையாகப் பிரித்துப் பொருளுரைத்துள்ளார்.[4]

3.28.2. "ஆலினிலையாய்" என்பதை 'ஆலின் இலையாய்' என்றும், 'ஆலின் நிலையாய்' என்றும் இரண்டு வகையாகப் பிரித்துள்ளார்.[5]

## 3.29 சிலேடைக் கூற்றுக்கள்

நாயனார் பாசுர உரைகளில் பல இடங்களில் இரு பொருள் தரும் வகையில் சிலேடையாகச் சொற்களைக் கையாண்டுள்ளார்.

---

1. கண்ணிநுண் வியாக். ப. 121
2. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 496
3. அமல. வியாக். ப.
4. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 128
5. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 454

**3.29.1.** "நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்" என்பதற்கு, "பரம தார்மிகனாய் பவித்ரபாணியாயிருப்பானொரு சிஷ்டனுடைய த்ரவ்யத்தை யன்றோ நான் அபஹரித்தது" என்று உரையிட்டுள்ளார்.[1] பவித்ரமென்பது வைதிக காரியங்கள் செய்யும்போது கையில் அணிந்து கொள்ளும் பவித்ரத்தையும், எம்பெருமான் திருக்கையில் உள்ள சக்கராயுதத்தையும் குறிக்கும்.

**3.29.2.** "அவ்வாறு இவ்வாறாய்த்துக் காணும்" என்று நாயனார் ஓரிடத்தில் உரையிடுகின்றார்.[2] ஆறு என்பது நீர் நிறைந்த ஆற்றையும், உபாயத்தையும் குறிக்கும்.

**3.29.3.** "குயில்நின்றார் பொழில்" என்பதற்கு, "சாகா சம்பந்தமுண்டாகையாலே அக்குயில்கள் திருவாய்மொழியாய்த்து பாடுவது" என்று உரையிடுகின்றார்.[3] சாகை என்பது கிளையைக் குறிக்கும். இங்கு சாகை என்பது வேதத்தின் கிளைகளையும் மரத்தின் கிளைகளையும் குறிக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

இவ்வாறு நாயனாருடைய திவ்வியப்பிரபந்த உரைகள் பற்பல சிறந்த உத்திகளைத் தன்னகத்தே கொண்டுள்ளமையால், அவை தனிச்சிறப்புற்று விளங்குகின்றன.

## முடிவுகள்

1. அழகியமணவாளப்பெருமாள் நாயனாரின் உரைகள் பிற உரைகளை விட மிக விளக்கமாகவும் விரிவாகவும் அமைந்துள்ளன.

2. நாயனார் அருளியுள்ளதாகக் குறிப்பிடப்பெறும் உரைகளில் திருப்பாவை ஆறாயிரப்படி உரை, கண்ணிநுண்சிறுத்தாம்பு உரை ஆகியவை மட்டுமே தற்போது கிடைக்கின்றன.

3. அமலனாதிபிரானுக்கு நாயனார் உரை அருளிச்செய்துள்ளதாக நூல்கள் எவற்றிலும் குறிப்பிடப்படாவிட்டாலும், அவர் அருளிச்செய்துள்ளதாக வெளியிடப்பட்டுள்ள அமலனாதிபிரான் வியாக்கியானம் நாயனாருடையதே என்று அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.

1. கண்ணிநுண். வ்யாக். ப.141
2. அமலனாதிபிரான் வ்யாக். ப. 14
3. கண்ணிநுண். வ்யாக். ப. 216

4. பெரியதிருமடலுக்கு நாயனார் அருளிச்செய்துள்ளதாக வெளியிடப்பட்டிருக்கும் வியாக்கியானம் நாயனார் அருளிச் செய்ததல்ல.

5. பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்துள்ள உரைகளுக்கு விரிவான விளக்கங்களை அருளிச்செய்யவே நாயனார் உரைகளை அருளிச்செய்திருக்க வேண்டும்.

6. பல இடங்களில் நாயனாருடைய உரை பெரியவாச்சான்பிள்ளையின் உரையினைப் போன்றே அமைந்துள்ளது.

7. சில இடங்களில் நாயனாருடைய உரை பெரியவாச்சான் பிள்ளையின் உரையினை விளக்குவதாக அமைந்துள்ளது.

8. சில இடங்களில் பெரியவாச்சான்பிள்ளையின் உரைக்கு நயமான விளக்கம் தருவதாக அமைந்துள்ளது.

9. பெரியவாச்சான் பிள்ளை உரையில் இடம்பெறாத விளக்கங்கள் சில நாயனார் உரையில் இடம்பெற்றுள்ளன.

10. பெரியவாச்சான்பிள்ளையின் உரையில் இடம்பெற்றுள்ள சில விளக்கங்கள் நாயனார் உரையில் இடம்பெறவில்லை.

11. நாயனார் உரையில் மேற்கோள்களாக எடுக்கப்படும் சில வடமொழி சுலேகங்கள் முழுமையாக விளக்கப்பட்டுள்ளன.

12. சில இடங்களில் சுலோகங்கள் மேற்கோள்களாக எடுக்கப்படாமல் அவற்றின் பொருள்கள் மட்டும் கூறப்பெற்றுள்ளன.

13. சில இடங்களில் மிக அதிகமான பாசுரங்கள் மேற்கோள்களாக எடுக்கப் பட்டுள்ளன.

14. சில இடங்களில் மேற்கோளாக எடுக்கப்பட்ட பாசுரங்களுக்கு முழுமையான வியாக்கியானம் அருளியிருக்கின்றார்.

15. சில இடங்களில் நாயனார் தாமே வினாவை எழுப்பி அதற்கு விடையும் தரும் முறையில் உரை வரைந்துள்ளார்.

16. அடைமொழிகளை விளக்குதல், உணர்ச்சி நயம் தோன்ற உரை வரைதல், இரு பொருள் கூறுதல், நயவுரை வழங்குதல் போன்ற பல உத்திகளைக் கையாண்டுள்ளார்.

17. பாசுரங்களின் அவதாரிகையில், முன்பாசுரங்கள் பலவற்றில் கூறப்பட்டுள்ள கருத்துகளைத் தொகுத்து தொடர்பு கூறுகிறார்.

18. ஒருசில இடங்களில் பாசுரத்திலுள்ள சொற்றொடர்களுக்கு மிகமிக விரிவான விளக்கமருளியிருக்கின்றார்.

19. சில இடங்களில் இதிகாச நிகழ்ச்சிகளையும், சில இடங்களில் சமகால நிகழ்வுகளையும் ஒப்பிட்டு உரை வரைந்துள்ளார்.

20. ஒவ்வொரு பிரபந்தத்திலும் அதை அருளிச்செய்த ஆழ்வாரைப் பிற ஆழ்வார்களுடன் ஒப்பிட்டு உரை வரைந்துள்ளார்.

21. சில நிகழ்ச்சிகளைக் கண்ணால் காண்பதுபோல் உரையிட்டுள்ளார்.

22. உரைநெடுகிலும் பாசுரங்களைக் கொண்டே தமது விளக்கங்களை நிலைநிறுத்துகின்றார்.

23. ஒப்பீடு செய்தல், நீண்ட உரைத்தொடர்களை அமைத்தல், ஒரே சொல்லுக்குப் பல பொருள்கள் கூறுதல், தொடர்புரை வரைதல், தத்துவக் கருத்துகளை மிகுதியாகக் கூறுதல் முதலிய கூறுகள் நாயனார் உரையில் இடம்பெற்றுள்ளன.

24. நாயனார் உரையில் இடம்பெற்றுள்ள தத்துவக் கருத்துகள் பெரும்பாலும் பிள்ளைலோகாசாரியர் அருளிச்செய்த ரகசிய நூல்களை அடியொற்றியே அமைந்துள்ளன.

25. மரபுவழக்குகள், செறிவுத் தொடர்கள், ஐதிஹ்யங்கள், உவமைகள் போன்றவை இடம்பெற்றுள்ளன.

26. மதிப்பீடு செய்தல், வருணனை நடையில் உரையிடுதல், சொற்களை வெவ்வேறு வகையாகப் பிரித்து உரையிடுதல், சிலேடைக் கூற்றுகள் போன்ற பல உத்திகள் நாயனார் உரையில் இடம்பெற்றுள்ளன.

27. அனைத்துச் சிறப்புகளையும் தன்னகத்தே கொண்ட இவ்வுரைகள் தனிச் சிறப்பு பெற்று விளங்குகின்றன.

# நாயனாரின் ரகசிய நூல்கள்

## ரஹஸ்யம்

"ரஹஸி பவம் ரஹஸ்யம்" என்பது ரஹஸ்ய சொல்லின் விரிவாகும். மனித சஞ்சாரமின்றி நிச்சப்தமான இடமே ரஹ: எனப்படுகிறது. அவ்விடத்தில் உண்டான சொல்லும் அதன் பொருளும் ரஹஸ்யங்களாகும். 'சில அர்த்தங்களை ஏகாந்தத்திலே சொல்ல விதிக்கையாலே அவற்றை ரஹஸ்யங்கள் என்கிறது'[1] என்பர் ஆன்றோர். இதன்படி, ஆசாரியன் ஏகாந்தமான இடத்திலே தன்னுடைய சீடனுக்குக் கூறும் விளக்கங்கள் ரஹஸ்யங்கள் எனப்படுகின்றன.[2]

## ரஹஸ்யத்ரயங்கள்

ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய மூன்று மந்திரங்களும் ரஹஸ்யத்ரயங்கள் எனப்படுகின்றன. "முமுக்ஷுவுக்கு அறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்று"[3] என்று பிள்ளை உலகாசிரியரும், மோட்சத்தை விரும்புபவன் மிக முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய ரஹஸ்யங்களாகத் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகிய மூன்றையும் குறிப்பிட்டுள்ளார். இவற்றை விளக்குகிற நூல்கள் ரகசிய நூல்கள் எனப்படுகின்றன.

## திருமந்திரம்

"ஓம் நமோ நாராயணாய" என்பது திருமந்திரம். இது மூன்று பதங்களையும், எட்டெழுத்துக்களையும் கொண்டதாக அமைந்துள்ளது. சம்சாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து பகவத் கைங்கரியத்தையும் இழந்து, இழந்தோமே என்கிற கவலை சிறிதும் இன்றி, பிறவியாகிற பெருங்கடலுள் விழுந்து நோவு படுவதைக் கண்ட இறைவன் இவர்களை உய்வித்தற் பொருட்டு தானே சீடனாகவும், தானே ஆசார்யனாகவும் நின்று பதரிகாச்ரமத்திலே திருமந்திரத்தை வெளியிட்டருளினான். எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டவனான நான், எனக்கு உரியவன் அன்றிக்கே, அவனுக்கு எல்லாக் கைங்கர்யங்களையும் செய்யப் பெறுபவனாக ஆக வேண்டும் என்று வேண்டுவது இதன் சாரமான பொருளாகும்.

---

1. அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஆற்றிய வைணவப் பணி ப. 230
2. ஸம்பரதாய பரிசுத்தி ப. 2
3. முமுக்ஷுப்படி - 1

### த்வயம்:

"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்று இரண்டு பகுதிகளாய் அமைந்துள்ளமையால் த்வயம் என்று பெயர் பெற்ற இம்மந்திரம் இருபத்து ஐந்து எழுத்துக்களை உடையதாய் அமைந்துள்ளது. எம்பெருமானாலே பிராட்டிக்கு உபதேசிக்கப்பட்ட ஏற்றத்தை யுடையது. இதில் முதல் வாக்கியம், 'பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக் கொண்டு எம்பெருமானின் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன்' என்ற பொருளையும், அடுத்த வாக்கியம், 'பெரிய பிராட்டியாரும் எம்பெருமானுமான சேர்த்தியில், அவர்களுடைய மகிழ்ச்சிக்காக எல்லா அடிமைகளையும் எப்போதும் செய்யக் கடவேன்' என்ற பொருளையும் தருகின்றன.

### சரமச்லோகம்

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:"

என்பது சரம ச்லோகம். இது முப்பத்திரண்டு எழுத்துக்களைக் கொண்டு அநுஷ்டுப் என்னும் யாப்பில் அமைந்துள்ளது. 'கர்மம், ஞானம், பக்தி முதலான ஸகல தர்மங்களையும் அவை உபாயங்கள் என்ற எண்ணத்தை விட்டு என் ஒருவனையே உபாயமாகப் பற்று. நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவித்து மோக்ஷமளிக்கிறேன். நீ வருந்தாதே' என்பது இந்த சுலோகத்தின் கருத்து. இதற்கு மேலான உபாயம் வேறு இல்லை என்னும்படி சரமமான (கடைசியான) உயர்ந்த உபாயத்தை (வழியை) உபதேசிக்கும் சுலோகமாகையாலே இதற்கு சரம சுலோகம் என்று பெயரமைந்தது என்பர். இதனை மஹாபாரதப் போர் நடுவே திருத்தேர்த் தட்டில் அருச்சுனனுக்கு கண்ணன் வெளியிட்டருளினான்.

எம்பெருமான் சரமோபாயத்தை விதிப்பதானாலேயே அதாவது 'செய்' என்று கட்டளையிடுகையாலே சரம சுலோகத்தை "விதிரஹஸ்யம்" என்றும், பகவானையே மோக்ஷோபாயமாக அநுசந்திப்பதாகிய பிரபத்தியை அநுஷ்டிப்பதால் த்வயத்தை 'அநுஸந்தான ரஹஸ்யம்' என்றும், திருவஷ்டாக்ஷரமென்னும் மூலமந்திரத்தை 'மந்திர ரஹஸ்யம்' என்றும் பூருவாசாரியர்கள் பெயரிட்டு அழைத்தனர்.[1]

1. அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஆற்றிய வைணவப் பணி ப. 232

## இம் மந்திரங்களை அனுசரிக்கும் முறை

இம்மந்திரங்களை அனுசரிக்கும் முறையை பிள்ளைலோகாசாரியர் "திருமந்திரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி அனுசந்திக்க வேணும்"[1] என்று அருளுகிறார். திருமந்திரத்தினுடைய பெருமைக்குத் தக்கவாறு ஆசையுடனும், பிறர் காதில் விழாதபடி ரகசியமாகவும் அனுசந்திக்க வேண்டும் என்பது இதன் கருத்து. அவ்வாறே நம்முடைய பூருவாசாரியர்கள் இந்த மூன்று ரஹஸ்யங்களையும் தம்முடைய சீடர்களுக்குக் கற்பித்து வந்தனர்.

"எம்பெருமானும் மூலமந்திரமான பெரிய திருமந்திரத்தைத் திருமங்கை ஆழ்வாருடைய வலத்திருச் செவியிலே உபதேசித்தருள"[2] என்றும்

"பெரிய நம்பியும் ஆளவந்தார் திருவடிகளை ஸ்மரித்துக் கொண்டு மந்த்ர ரத்னமான த்வயத்தை இளையாழ்வாருடைய வலத்திருச் செவியிலே உபதேசித்தருளி"[3] என்றும்,

"திருக் கோட்டியூர் நம்பி இவர் (எம்பெருமானார்) திருக்கையைப் பிடித்துக் கொண்டு போய் ஏகாந்த ஸ்தலத்திலே மேல் தளத்திலே ஏறி எழுந்தருளியிருந்து படிக்கதவை விழ விட்டு, ஒருவருக்குஞ் சொல்லாதபடி தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளுறவு கொண்டு பரம ரஹஸ்யமான சரமச்லோகத்தை அருளிச் செய்து"[4] என்றும் குருபரம்பரையிலே காண்கையாலே பூருவாசாரியர்கள் இம்மந்திரங்களை ரகசியமாக உபதேசித்து வந்தமையை அறிய முடிகின்றது.

"ஓராண் வழியா யுபதேசித்தார் முன்னோர்
ஏராரெதிராசரின்னருளால் - பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று
பேசி வரம்பறுத்தார்பின்"[5]

என்ற பாசுரத்தில் எம்பெருமானார்க்கு ஒரு பெரிய ஏற்றத்தை மாமுனிகள் அருளிச் செய்துள்ளார். எம்பெருமானார்க்கு முற்பட்ட ஆசாரியர்களான நாதமுனிகள், ஆளவந்தார் முதலியவர்கள் ரஹஸ்யத்ரயத்தினுடைய அர்த்தத்தை மறைத்து வைத்துக் கொண்டு ஏகாந்தமாகத் தமது சீடர்களுக்கு உபதேசித்து வந்தனர். ஆனால் எம்பெருமானார் அந்த வரம்பையறுத்து,

---

1. முமுக்ஷுப்படி - 3 2. குருபரம்பரை ப. 78 3. குருபரம்பரை ப. 170
4. குருபரம்பரை பக். 195-196 5. உபதேசரத்தினமாலை - 37

திருக்கோட்டியூர் நம்பியிடம் தாம் அரிதின் முயன்று பெற்ற அர்த்தத்தை "ஆசையுடையோர்க் கெல்லாம் ஆரியர்காள் கூறும்" என்று பிறர்க்குக் கூறி, தாமும் அவ்வர்த்தத்தை ஆசையுடையோர் எல்லோருக்கும் உபதேசித்தார்.

## ரஹஸ்ய நூல்கள்

எம்பெருமானார் காலத்திலும், திருவாய்மொழிக்கு மட்டுமே வியாக்கியானங்கள் ஏடுபடுத்தப்பட்டனவேயொழிய ரஹஸ்யார்த்தங்கள் ஏடுபடுத்தப் படாமல் வாய் மொழியாகவே வழங்கப் பட்டு வந்தன. ஆசார்ய பரம்பரையில் முதன் முதலில், பராசர பட்டர் "அஷ்டச்லோகீ" என்கிற (எட்டு வடமொழி சுலோகங்கள் கொண்ட) ரஹஸ்யகிரந்தம் ஒன்றை அருளினார். இதில் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் ஆகியவற்றின் பொருள் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

பரந்த ரஹஸ்யம் என்றொரு நூல் மணிப்ரவாள நடையில் ரஹஸ்யத்ரயத்தின் பொருளை விரிவாகக் கூறுகிறது. இந்நூல் பெரியவாச்சான் பிள்ளையால் அருளிச் செய்யப்பட்டது என்று சிலரும் அவருடைய திருமகனாரான ஆச்சான் பிள்ளையால் அருளிச் செய்யப்பட்டது என்று சிலரும் கருதுகின்றனர்.

வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரரான பிள்ளைலோகாசாரியர் "அஷ்டாதச ரஹஸ்யம்" என்னும் ரஹஸ்ய நூலை அருளினார். இதில் பதினெட்டு ரகசிய நூல்கள் அடங்கியுள்ளன. அவற்றில் முமுக்ஷுப்படி, யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, ச்ரிய:பதிப்படி, தனித்வயம், தனிசரமம், தனிப்ரணவம் முதலிய பல நூல்களில் ரஹஸ்யத்ரயத்தினுடைய பொருளை அவர் மிக விரிவாக அருளிச் செய்துள்ளார்.

பிள்ளைலோகாசாரியருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்யஹ்ருதயம், அருளிச்செயல் ரஹஸ்யம் ஆகிய இரண்டு ரகசிய நூல்களை அருளிச் செய்துள்ளார். ஆசார்யஹ்ருதயத்திற்கு விளக்கமாக அவர்தாமே அருளிச்செய்த 'பட்டோலை' எனும் நூல் இப்போது கிடைத்திலது.

# ஆசார்ய ஹ்ருதயம்

ஆசார்ய ஹ்ருதயம் ஒப்புயர்வற்ற ஒரு நூல். "இவ்வுலகில் எத்தனையோ பிரபந்தங்கள் அவதரித்திருந்தாலும் சொல் தொடையிலும், பொருள் நடையிலும்

இதனை யொத்த பிரபந்தம் இதுவேதான் என்னலாமத்தனையொழிய இது போன்ற வேறொரு கிரந்தமும் அவதரித்திலது. ஸகல ச்ருதி ஸ்மிருதீதிஹாஸ புராணங்களும் ஆழ்வாரருளிச் செயல்களும் அருளிச் செயல்களின் வியாக்யானங்களும் ஆசார்யர்களின் ஸ்தோத்ர ஸூக்திகளுமெல்லாம் ஒருங்கே திரண்டு இவ்வாசார்ய ஹ்ருதய ப்ரபந்தமாக வடிவெடுத்ததென்றால் மிகையாகாது. இதில் அர்த்தத்திற் காட்டிலும் சொல் தொடைதானே மிகவும் இனிதாயிருக்கும். இதில் ஆழ்ந்து அநுபவித்தவர்கள் இத்தையொழிய வேறொன்றில் காலக்ஷேபம் பண்ணக் கருதார்கள். இதனை அறியக் கற்று வல்லரானவர்கள் ஸர்வஜ்ஞர் என்னும் சிறப்புப் பெயர் பெறுவதற்கே உரியராவர் என்பர் ஸ்ரீ உ.வே.அண்ணங்கராசாரியர் ஸ்வாமி.[1]

## நூலின் பெயர்க் காரணம்

"வைதிக ஸந்தானத்துக்குப் பிரதம ஆசார்யரான நம்மாழ்வாரருளிச் செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துக்களைத் தெளிய வெளியிடு கையாலே இது தனக்கு ஆசார்யஹ்ருதயமென்று திருநாமமாயிற்று" என்பர்.[2]

## நூலின் அமைப்பு

இப்பிரபந்தத்தில் இவரருளிச் செய்துள்ள வாக்கியங்களெல்லாம் பெரும்பாலும் ஸ்தோத்திரங்கள், அருளிச்செயல் முதலிய நூல்களின் சொற்களைக் கொண்டே தொகுக்கப் பட்டுள்ளன. இவருடைய சொந்த வாக்காக உள்ள வார்த்தைகள் மிகச் சிலவே ஆகும். இந்நூல் சூத்திரவடிவில் அமைந்துள்ளது.

எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள் அனைவருமே வேத வேதாந்தக் கருத்துகள் பொதிந்த பாசுரங்களை அருளிச் செய்தனர். அவர்களுள் நம்மாழ்வார் மிகவும் முக்கியமானவராகப் போற்றப்படுகிறார். அவர் அருளிச் செய்த திவ்வியப் பிரபந்தங்களான திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகியவை நான்கும் முறையே ரிக்வேதம், யஜுர் வேதம், அதர்வண வேதம், சாமவேதம் ஆகியவற்றின் சாரங்களாகப் போற்றப் பெறுகின்றன.

அவற்றுள், திருவாய்மொழியின் உட்கருத்துக்களை விளக்குவதற்குப் பல பேருரைகள் தோன்றியுள்ளன.அவையனைத்தும் திருவாய்மொழியிலிருந்து

1. ஆசார்யஹ்ருதய ஸாரம் அவதாரிகை
2. மேலது

ஒவ்வொரு பாசுரமாக எடுத்து விளக்கம் தருகின்றன. ஆனால் திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களின் திரண்ட கருத்தையும் ஒரு நூல் வடிவில் சூத்திரமாக நமக்கு வழங்கியுள்ளவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஒருவரேயாவர். திருவாய் மொழிப் பாசுரங்களின் சிறப்புப் பொருட்கள், உட்பொருள்கள் முதலியவற்றைத் தொகுத்து, அவற்றைப் பாசுரங்களின் துணை கொண்டே, ஆசார்யஹ்ருதயம் எனும் ஒப்புயர்வற்ற நூலில் விளக்கி அருளுகிறார்.

## இதில் அருளிச் செய்யப்பட்ட விஷயங்களின் தொகுப்பு

கருணையுள்ள இறைவன் அறிவிலாத மக்கள், நல்லனவற்றையும், தீயனவற்றையும் பகுத்துணரும் விவேகம் பெறுவதற்காக சாத்திரங்களை வெளியிட்டருளினான். அப்படிப் பகுத்து உணருவதால் இவ்வுலக வாழ்க்கையாகிற துன்பத்திலிருந்து விடுபட்டு இறைவனை அடைவதாகிய இன்பத்தைப் பெறலாம் என்று நாயனார் கூறுகிறார். துன்பங்களுக்கும் இன்பங்களுக்கும் காரணங்களைப் பின்வருமாறு பட்டியலிட்டு நாயனார் காட்டுகின்றார்.

| துன்பம் | இன்பம் |
|---|---|
| அசித் சம்பந்தம் | நாராயண சம்பந்தம் |
| அவித்யை | பகவத் ஸௌஹார்த்தம் |
| நல்வினை தீவினைகள் | பகவத் கிருபை |
| சம்சாரத்தில் பிறவி | பகவானுடைய விசேஷ கடாக்ஷம் |
| ராஜஸ தாமஸ குண மிகுதி | ஸத்வ குண பூர்த்தி |
| அர்த்தக பஞ்சக ஞானமின்மை | அர்த்த பஞ்சக ஞானம் |
| சம்சாரத்தில் துக்கம் | மோக்ஷ சுகம் |

## எம்பெருமான் சாத்திரங்களை அருளியமை

மூன்று குணங்களையுடைய மக்களை இலக்காக உடைய வேதங்களை எம்பெருமான் வெளிப்படுத்தியதற்குக் காரணம் அவர்களுடன் தனக்குள்ள குடல் துடக்காகிய சம்பந்தம் என்கிறார். மக்களிடம் தாய் போன்ற அன்புடையவன் ஆதலால் மக்களுடைய ருசிக்குத் தகுதியாக மோக்ஷ சாஸ்த்ரத்தையும், பிறவிகளிலேயே கட்டுப் படுத்தக் கூடிய சாஸ்த்ரங்களையும் கொடுத்தான் என்றும், பந்த சாஸ்திரங்களைக் கொடுத்ததும் அவர்கள் படிப்படியாக உயர்வு பெற்றுக் கரை ஏறுவதற்கு இட்ட வழி என்றும் நாயனார் அருளிச் செய்துள்ளார்.

## எம்பெருமான் திருமந்திரத்தை வெளியிட்டது

பலப்பல அர்த்தங்களை வெளியிடுகின்ற சாஸ்திரங்களைக் கற்பது மிகவும் அரிது என்பதனால், எம்பெருமான் ஸகல சாஸ்திர தாத்பர்யமான திருமந்திரத்தை ஸ்ரீ பதரிசாச்ரமத்தில் நர நாராயணனாய் அவதரித்துத் தானே சிஷ்யனுமாய் தானே ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டு அருளினான்.

## சாத்திரங்களினுடையவும், திருமந்திரத்தினுடையவும் வேறுபாடு

சாஸ்த்ரங்களினுடையவும், திருமந்திரத்தினுடையவும் வேறுபாடுகளைப் பின்வருமாறு நாயனார் காட்டுகின்றார்.

| சாஸ்த்ரங்கள் | திருமந்திரம் |
|---|---|
| 1. எம்பெருமான் வ்யாஸர் முதலிய முனிவர்கள்மூலம் வெளியிட்டவை. | 1. எம்பெருமான் நரநாராயணனாகத் தானே வெளியிட்டது. |
| 2. இவற்றுக்கு உடலிலே நோக்கு. | 2. இதற்கு ஆத்மாவிலே நோக்கு. |
| 3. இவைகளைக் கற்பதற்கு நல்ல குடிப் பிறப்பு, ஆசாரத்தில் குறைவற்று இருத்தல் முதலிய தகுதி வேண்டும். | 3. இதைக் கற்பதற்கு, கற்க வேண்டும் என்ற மனமுடையவர்கள் அனைவரும் அதிகாரிகள். |
| 4. இதைக் கற்பவர்கள் சாஸ்த்ரிகள் (சாஸ்த்ரங்களில் ஊன்றியவர்கள்) எனப்படுவர். | 4. இதை உணர்ந்தவர்கள் ஸாரஜ்ஞர் (உட்பொருளை உணர்ந்தவர்) எனப்படுவர். |

| சாஸ்த்ரிகள் | ஸாரஜ்ஞர் |
|---|---|
| 1. தம் முயற்சியும் இறைவனுடைய அருளும் ஆகிய இரண்டையும் பற்றிக் கொண்டு பிறவிக்கடலை நீந்த எண்ணுவர்கள். | 1. எம்பெருமானுடைய திருவருள் மட்டுமே நிலைத்த சாதனம் என்று அறுதியிட்டு இறைவனை அடையும் காலத்தை எண்ணியிருப்பர். |
| 2. எம்பெருமானுக்குத் தங்களை அடிமைப் பட்டவர்கள் என்றும், அவனைத் தாங்கள் அனுபவிப்பவர்கள் என்றும் எண்ணியிருப்பர். | 2. எம்பெருமானுக்குத் தாங்கள் இட்ட வழக்காக இருப்பவர்கள் என்றும், அவனால் தாங்கள் அனுபவிக்கப் படுபவர்கள் என்றும் எண்ணியிருப்பர். |

| சாஸ்த்ரிகள் | ஸாரஜ்ஞர் |
| --- | --- |
| 3. எம்பெருமானை அனுபவிப்பதாகிய இன்பத்தை நுகர்கிறவன் அதை அடைய முயற்சி செய்ய வேண்டாவோ என்னும் நினைவால் பகவானை அடைவதற்குரிய வழியாகிய சில செயல்களில் தாங்கள் ஈடுபடுவர். | 3. தங்களைப் பெற்று அநுபவிக்கிற இறைவனே இவ்வான்மாவைப் பெற முயற்சி செய்வான் எனும் நினைவால் எம்பெருமானைப் பெறுதற்குரிய வழிகளாகிய செயல்களைச் செய்வதில் நின்றும் விலகியிருப்பர். |
| 4. இவர்களுக்குச் சாத்திரங்களில் விதிக்கப்பட்ட கருமங்களைச் செய்வதில் ஈடுபாடு இருக்கும். | 4. எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யத்திலேயே இவர்களுக்கு ஈடுபாடு இருக்கும். |
| 5. இவர்கள் ஈடுபடுகின்ற கருமமானது, பொய்யானதும், அழியக் கூடியதுமான உடலுக்குரிய சாதிக்குத் தகுந்ததாக இருக்கும். | 5. கைங்கர்யமானது, மெய்யானதும் என்றும் நிலை பெற்றுள்ளதுமான ஆத்மாவின் அடிமைத் தன்மைக்கு தகுந்ததாக இருக்கும். |
| 6. சாத்திர விதியானது கர்மத்தைச் செய்வதற்குத் தூண்டுகோலாக இருக்கும். | 6. பகவானுக்குத் தொண்டு செய்வதில் ஆசை கைங்கரியத்துக்குத் தூண்டுகோலாக இருக்கும். |
| 7. பக்திமான்கள் கர்மத்தைச் செய்வதற்கு உரியவர்கள். | 7. பிரபந்நர்கள் கைங்கரியத்தைச் செய்வதற்கு உரியவர்கள். |
| 8. எம்பெருமான் மற்ற தெய்வங்களுக்கு அந்தர்யாமியாக நின்ற இடம் கர்மத்திற்கு இலக்கு ஆகும். | 8. எம்பெருமான் தனது கிருபையினால் அர்ச்சாவதாரமாய் நிற்கிற இடம் கைங்கர்யத்துக்கு இலக்கு. |
| 9. கர்மம் ஸாதாரணம். (பொதுவானது) | 9. கைங்கர்யம் அஸாதாரணம். (சிறப்பு உடையது). |
| 10. இவர்கள் சாதிக்குரிய கர்மங்களைக் கடைப்பிடிக்கும் அந்தணர்கள். | 10. இறைவனுக்கு உகந்த தொண்டுகளைச் செய்யும் வைணவர்கள். |
| 11. சந்தஸ்ஸுக்களுக்குத் தாயாக இருக்கும் காயத்ரி மந்திரத்தின் உபதேசத்தால் பிறப்பிக்குமது இவர்களுக்கு உயர்ந்த பிறவியாகும். | 11. காயத்ரிக்கும் தாயான திருமந்திரத்தினுடைய உபதேசத்தால் பிறப்பிக்குமது கைங்கர்யத்தில் ஊன்றியிருப்பவர் களுக்கு உயர்ந்த பிறவியாகும். |

| | |
|---|---|
| 12. அந்தணர் மறையோர் என இவர்கள் அழைக்கப் படுவர். | 12. அடியார், தொண்டர் என இவர்கள் வழங்கப்படுவர். |
| 13. கிராமம், குலம் ஆகியவற்றை இட்டு இவர்கள் அழைக்கப்படுவர். | 13. திவ்யதேசத்தின் தொடர்பையிட்டு இவர்கள் அழைக்கப்படுகின்றனர். |
| 14. அந்தணர்களுக்கு மூலபுருஷர்கள் பராசரர், வியாஸர், போதாயனர் முதலிய மகரிஷிகள். | 14. பிரபந்நர்களுக்கு மூல புருஷர்கள் நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார் எம்பெருமானார் போன்றவர்கள். |
| 15. வேதத்தை ஓதுதல், அதன் பொருளை உணர்தல், அவற்றைப் பின்பற்றுதல் முதலியவற்றால் அந்தணத்தன்மை சித்திக்கும். | 15. திருவாய்மொழி ஓதுதல், அதன் பொருளை உணர்தல், அதைப் பின்பற்றுதல் முதலியவற்றால் வைணவத் தன்மை சித்திக்கும். |

இவ்வாறு சாத்திரத்தை மட்டும் உணர்ந்து, பின்பற்றுபவர்கள் அந்தணர் என்றும், சாத்திரத்தின் உட்பொருளான திருமந்திரத்தை உணர்ந்து பின்பற்றுபவர்களே வைணவர்கள் என்றும் இப்படித் தொடர்ச்சியாகப் பல வேறுபாடுகளைக் காட்டி நிலைநாட்டுகிறார்.[1] அடுத்து சாஸ்த்ரதாத்பர்யமான திருமந்திரத்தின் பொருளை விவரித்துச் சொல்வதிலே நோக்காக உள்ள திருவாய்மொழி வேதமே என்பதை பல பிரமாணங்கள் மூலம் எடுத்துரைக்கிறார்.

## திருவாய்மொழி வேதமே

நம்மாழ்வார் பாசுரங்கள் வைதிகர்களால் தாழ்ந்த மொழி என்று கூறப்படும் தமிழில் அமைந்துள்ளன. ஆகவே இவற்றைப் பிரமாணமாக ஏற்றுக் கொள்ள முடியாது என்று திருவாய்மொழியின் பெருமைகளைக் குறைத்துக் கூறிய சில அறிவிலிகளுக்கு, நஞ்சீயர், நம்பிள்ளை முதலிய ஆசாரியர்கள் திருவாய்மொழிப் பேருரைகளின் முன்னுரைகளில், மொழிவிலக்கு பகவானுடைய புகழ்களின் திறத்து அன்று; அதாவது, வடமொழி தவிர்த்த ஏனைய மொழிகளில் அமைந்த நூல்கள் கற்கத் தகாதவை என்ற விதி இறைவனைப் பற்றிய நூல்களுக்குப் பொருந்தாது என்றும் விடை பகர்ந்தனர். தமிழ் மொழியில் அமைந்திருந்தாலும் எம்பெருமானைப் பற்றிய பாசுரங்களாக இருந்தால் அவற்றை ஏற்றுக் கொள்ளலாம் என்ற அளவில் அவர்களுடைய கருத்துகள் அமைந்திருந்தன. ஆனால் நாயனார் "செந்திறத்த தமிழோசை என்கையாலே ஆகஸ்த்யமுமநாதி"[2] என்று, வடமொழியைப் போலவே தமிழ்

1. ஆசார்ய ஹ்ருதயம் 19 -38

2. ஆசார்ய ஹ்ருதயம் - 41

மொழியும் பழைமையான மொழி என்றும், எனவே தமிழ் மொழியில் அமைந்த திருவாய்மொழியும் வேதமே என்றும் பல பிரமாணங்களால் விளக்குகிறார்.

வேதம் ஒன்றாயிருக்கச் செய்தேயும் அது தன்னில் கிளை வேறுபாடுகளை இட்டு ருக்வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்கிற பிரிவுகள் உண்டா யிருப்பதைப் போல, மொழி வேறுபாட்டையிட்டு ஸம்ஸ்கிருத வேதம், திராவிட வேதம் என்கிற பிரிவும் ஒரு விதம். அதனால் வடமொழியைப் போல தமிழ் மொழியும், தொன்மை வாய்ந்தது என்கிறார்.

திருமங்கை ஆழ்வார் "செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி"[1] என்று வட மொழியோடு தமிழையும் ஒன்றாக எடுக்கும் பொழுது தமிழை முன்னே கூறியருளி யுள்ளபடியால் தமிழுக்கே முதலிடம் என்று கூறுகிறார். "வடமொழி மறைவாணர்"[2] என்கிறவிடத்தில் மறையென்று பொதுவாக அருளிச் செய்யாமல் வடமொழி மறை யென்று ஆழ்வார் பிரித்துக் கூறியதால் தென்மொழி மறையென்று ஒன்று உள்ளதென விளங்கும் என்றும் கூறுகிறார்.

வடமொழி வேதத்திற்கு உள்ளதைப் போல தமிழ் வேதமாகிய, நம்மாழ்வாரருளிய பிரபந்தங்களுக்கும் அங்க உபாங்கங்கள் உண்டு என்றருளிச் செய்துள்ளார். ருக் வேதம் முதலிய நான்கு வேதங்களுக்கும் ஆறு அங்கங்களும், எட்டு உபாங்கங்களுமான பதினாலும் அமைந்திருப்பதைப் போல, நம்மாழ்வாரருளிச் செய்த நான்கு வேத ஸாரமான நான்கு திவ்யப் பிரபந்தங்களுக்கும், திருமங்கையாழ்வாரருளிச் செய்துள்ள ஆறு பிரபந்தங்களும் அங்கங்களாகும். மற்றையாழ்வார்கள் எண்மருடைய பிரபந்தங்களும் உபாங்கங்களாகும்.

ஆனாலும் "குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்று பல பாசுரங்களின் ஈற்றடியில் வருவதால் ஆழ்வார் இவைகளை இயற்றியவராகச் சொல்லப்படுகிறாரே, ஆனால் வேதத்திற்கு அபௌருஷேயம் (ஒரு புருஷனால் இயற்றப்படாதது) என்ற சிறப்பு உண்டே என்கிற சந்தேகத்திற்கும் விடையிறுக்கிறார் நாயனார். பிரளய காலத்தில் மறைந்த வேதங்களை பிரமன் எம்பெருமானிடத்திலேயோதி அவற்றை ருத்ரன் முதலானோர்களுக்கு வெளிப்படுத்தியதே காரணமாக அந்த வேதம் நான்முகன் படைத்தான் என்று பெயர் பெற்றதைப் போல, பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து முன்னுருச் சொல்ல அவன் பக்கல் ஓதின இவ்வாழ்வாரும் மதுரகவிகள்

1. திருநெடுந்தாண்டகம் - 19    2. திருவாய்மொழி 8-9-8

போல்வாரைப் பயிற்றுவிக்க, இவ்வாறு ஆழ்வாரால் வெளிப்படுத்தப் பட்டதால் இத்திருவாய்மொழியும் சடகோபன் சொல் என்று பெயர் பெற்றது. ஆகையால் திருவாய்மொழிக்கும், வேதத்தைப் போல நித்யத்வமும் (என்றுமுள்ள தன்மை) அபௌருஷேயத்வமும் உண்டு என்று நாயனார் நிரூபிக்கிறார்.

## நான்கு பிரபந்தங்களும் நான்கு வேதம்

நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களும் நான்மறைகள் என்பதனையும், இன்ன பிரபந்தம் இன்ன வேதத்தோடு ஒக்கும் என்பதனையும் அவற்றில் திருவாய்மொழி சாந்தோக்ய ஸாமத்தோடு ஒக்கும் என்பதனையும் பாசுரங்களின்படியே நாயனார் அருளிச் செய்கிறார். நம்மாழ்வாரருளிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் பிரபந்தங்கள் மூன்றினையும் அடைவே ருக், யஜுர், அதர்வணம் என்னும் மூன்று வேதங்களின் தானத்திலும், திருவாய்மொழியை ஸாமவேதத்தின் தானத்திலும் கொள்ள வேண்டும் என்கிறார். பண்ணையும் இசையையும் உடைத்ததான அந்தச்சாம வேதத்தில் சிறந்ததான சந்தோக சாம உபநிடதத்தை இது ஒக்கும் என்றும் அருளிச் செய்கிறார்.

## திருவாய்மொழி உபப்ரும்ஹணம்

இனி, நம்மாழ்வாருடைய பிரபந்தங்களை வேதங்களுக்கு ஒப்பிட்டது போல, நாயனார் வேத உபப்ருஹ்மணங்களுக்கும் ஒப்பிட்டுக் கூறுகிறார்! வேதத்திலே கூறப்பட்ட எம்பெருமானுடைய ஸ்வரூபம், குணம், விபூதி, சேஷ்டிதங்களை (அவதரித்துச் செய்த செயல்கள்) விவரித்துச் சொல்ல வந்த பாஞ்சராத்ர, புராண, இதிகாசங்கள் போல வேதத்தில் கூறப்பட்டுள்ள எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்கிரகத்தை விவரித்துச் சொல்வதிலே இவருடைய அருளிச் செயல்களுக்கு நோக்கு என்கிறார்.

ஆயினும் வேதவிளக்க நூல்களை இயற்றிய ரிஷிகளைக் காட்டிலும் ஆழ் வாருக்குப் பலவிதங்களிலும் உயர்வு கூறுகிறார்.

## ரிஷிகளைக் காட்டிலும் ஆழ்வாருக்கு உயர்வு

| ரிஷிகள் | நம்மாழ்வார் |
| --- | --- |
| 1. ஸாத்விக, ராஜஸ, தாமஸ குணங் களுக்கு உட்பட்டு அந்தந்த கல்பங்களில் அந்தந்த தெய்வங் களின் பெருமையைப் பேசுகிற | 1. ரஜஸ் தமோ குணங்கள் கலசாமல் சுத்த ஸத்வகுணத்தோடு கூடிய வனும் பிரம்ம ருத்ராதிகளுக்கு அந்தர்யாமியாக இருப்பவனுமான |

| | |
|---|---|
| நான்முகனின் அருளையும், ஆகமம் முதலிய மோஹ சாஸ்த்ரங் களை வெளியிட்ட ருத்ரனின் அருளையும் பெற்று புராணங்களை ரிஷிகள் இயற்றினர். | திருமகள் கேள்வனான எம்பெருமானால் மயர்வறமதிநலம் அருளப்பெற்று ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்தார். |
| 2. ரிஷிகள் தங்களுடைய ஞானத்தின் மூலமாக அறிய வேண்டியவற்றைத் தெளிய அறிந்துகொண்டு, மகிழ்ச்சி கொண்டவர்களாய் அதனடியாகத் தயங்காமல் சுலோகங்களை மேலே மேலே தொடுத்துக் கொண்டே சென்றனர். | 2. எம்பெருமானுடைய அருளைப் பெற்ற ஆழ்வார், அதனடியாகப் பிறந்த பக்தியால் மூவாறு மாதம் மோகித்துக் கிடந்து, ஒரு சொல் எடுக்கும்போது ஒரு மலை எடுப்பதைப் போல தழுதழுத்து ஈரச் சொற்களாலே பிரபந்தங் களை அருளிச் செய்தார். |
| 3. இவர்கள் வேதத்தைக் கற்று அதன் மூலம் எம்பெருமான் இப்படிப் பட்டவன் என்று உணர்ந்து அதில் விளக்கம் இன்மையால் பலவித ஆசாபாசங் களுக்கு உட்பட்டிருப்பர். | 3. தன்னைக் காண்பதற்காக எம்பெருமான் கொடுத்தருளிய ஞான ரூபமான கண்ணால் அவனைக் கண்டபோதே அவனருளால் வன் பாசங்கள் அற்றவராயிருப்பர். |
| 4. ரிஷிகளுக்குக் காய், கனி, கிழங்கு, சருகு, காற்று முதலியவைகள் உணவாக இருக்கும். | 4. இவருக்கு உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணனாகவே இருக்கும். |
| 5. ரிஷிகள் தங்கள் உறவினரைப் பிரிந்த வருத்தத்தினால் நெஞ்சம் கலங்கி, வாய்விட்டு அழுது, காணப் பெறாமையால் அலமாப்படைவர். | 5. இவர் எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினால் நெஞ்சு கலங்கி 'எங்கே காண்கேன்' என்று கண்ணும் கண்ணீருமாய் அலமருவர். |
| 6. எம்பெருமானை அடைவதே பயனாகவும் கர்ம, ஞான, பக்தி களே உபாயமாகவும் இந்திரன் முதலிய தேவர்களுக்கு அந்தர்யா மியான இறைவனே பற்றத் | 6. எம்பெருமானுக்குச் செய்யும் தொண்டே பயனாகவும், எம்பெருமானையே உபாயமாகவும், எம்பெருமா னைத் தவிர வேறு தெய்வங்களைத் |

தகுந்தவனாகவும் மற்ற தேவதைகளும் வணங்குவதற்குரியவர்களாகவும் ரிஷிகள் கூறினர்.

7. நாராயணனுடைய கதையைச் சொல்வதாக தொடங்கி, கங்கையின் பிறப்பு, சுப்ரமண்யனுடைய பிறப்பு முதலியவற்றையே கூறியதால் நாவில் அசுத்தி ஏற்பட, அதைப் போக்கிக் கொள்ளவே எம்பெருமானுடைய சரித்திரத்தைப் பேசுவதாக வியாஸர் கூறியுள்ளார்.

தொழாமலிருத்தலே உறுதியான கொள்கையாகவும் ஆழ்வார் அருளிச் செய்துள்ளார்.

7. தூய்மையிழந்த வாக்கைப் பின்பு சுத்தி செய்து கொள்ள வேண்டாதபடி திருமாலவன்கவி என்று முதலில் திருவிருத்தத்தில் கூறியபடியே, வேறு பொருளைக் குறிக்கும் சொற்கள் ஒன்றும் கலவாதபடி சொற்களைத் தெரிந்தெடுத்து பிரபந்தங்களை ஆழ்வார் அருளியுள்ளார்.

## திருவாய்மொழியின் பெருமை

அடுத்து திருவாய் மொழியின் சீர்மையினை நாயனார் அருளிச் செய்கிறார். வேதங்களில் புருஷ சூக்தமும், தர்ம சாஸ்திரங்களில் மநுஸ்மிருதியும், மஹாபாரதத்தில் கீதையும், புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணமும் சாரமாக இருப்பதைப் போல, எம்பெருமானைப்பற்றியது தவிர வேறு பேச்சின் வாசனையுமற்ற திவ்யபிரபந்தங்களுக்குள் திருவாய்மொழி சாரமாக இருக்கும். பரம்பொருளின் தன்மையை உள்ளபடியே சொல்ல வல்ல ஆற்றலையுடைத்தான இத்திருவாய் மொழிக்குச் சேராத சாஸ்திரங்கள், மநுதர்ம சாஸ்திரங்களுக்கு மாறுபட்ட தர்மசாஸ்த்ரங்கள் போல, விலக்கப்படுவனவாம் என்கிறார். இராமாநுசர் ஸ்ரீபாஷ்யம் செய்தருளும் போது வியாஸஸூத்ரங்களை இத்திருவாய்மொழியின் ஸ்ரீசூக்திகளைக் கொண்டு ஒருங்க விடுவர் என்றும், அதற்கு மூலம் ஆளவந்தார் அருளிச் செய்த வார்த்தை என்றும் அருளுகிறார்.

## வேதம் திருவாய் மொழியாக அவதரித்தல்

வேதமே திருவாய்மொழியாக ஆவிர்ப்பவித்தது (அவதரித்தது) என்று நாயனார் அருளியுள்ளார். எம்பெருமானுடைய பரத்வ நிலையைப் பேசுகையாலே பரத்வத்தில் நோக்கான வேதமானது, அப்பெருமானுடைய வியூஹ நிலையில், ரூபம், குணம் முதலியவற்றைக் கூற பாஞ்சராத்ரமாகவும், அந்தர்யாமித்வ நிலையில் வியாப்தியைப் (எங்கும் பரந்துள்ள நிலை) பேசுவதற்காக அந்த வேதமே மனு முதலானவர்களின் ஸ்மிருதியாகவுவம், அப்பெருமானுடைய

அவதாரங்களில், அச் செயல்களைச் சொல்லுவதற்காக இதிகாசங்களாகவும், (அவ்வெம்பெருமானே) அர்ச்சாவதாரமான நிலையில், அர்ச்சையின் பெருமையைப் பேசத் தமிழ் வடிவாய்க் கொண்டு ஆழ்வார் பக்கலிலே திவ்யப்ரபந்தமாகவும் அவதரித்தது என்கிறார். பர, வியூஹ, அந்தர்யாமி, விபவ நிலைகளில் காணப் பெறாதவர்களுக்கு சுலபமாக அர்ச்சாவதாரம் அமைந்தது போல், பாஞ்சராத்ர, ஸ்மிருதி, இதிஹாசங்களில் தொடர்பற்றவர்களுக்கு அருளிச்செயல் மிகவும் எளிதாக அமைந்துள்ளதென்கிறார். எம்பெருமான் எல்லோருக்கும் சுலபனாய் அர்ச்சாவதாரமான நிலையில், வேதமும் எல்லோரும் கற்பதற்குஉறுப்பாகத் தமிழ் வடிவில் அவதரித்தது.

## நம்மாழ்வாரின் பெருமைகள்

இனி ஆழ்வாரின் பெருமைகளை விரித்துரைக்கிறார். 'தமிழ் மறை என்று திருவாய்மொழி போற்றப்பட்ட போதிலும், அதை இயற்றிய ஆழ்வார் நான்காம் வருணத்தவரன்றோ? அதனால் அதைப் பிரமாணமாக ஏற்றுக் கொள்ள முடியாது என்று சில அறிவிலிகள் இயம்ப, அதற்கு பதிலிறுக்கும் முகமாக நஞ்ஜீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை ஆகியோர் தமது பேருரைப் பிரவேசங்களில், ஆழ்வார் எம்பெருமானுடைய அருளைப் பெற்றபடியால் விதுரர், சபரி போன்றவர் களைக் காட்டிலும் உயர்ந்தவர் என்று அருளிச் செய்ததை நாயனார் மேலும் விளக்கியுள்ளார். அடியார்களின் திருமாளிகைகளிலே அவர்களுகந்த ஒரு பொருளைத் திருமேனியாகக் கொண்டு இன்பத்தை விளைக்கின்ற அர்ச்சாவதாரத்தை அது செய்யப்பட்ட மரம், கல் முதலிய பொருள்களைக் கொண்டு இகழ்வதும், எம்பெருமானுடைய கல்யாண குணங்களைச் சொல்லுவதாலே பெரியோர்கட்கு ஆனந்தத்தை உண்டாக்கக் கூடியதாய் உள்ள திருவாய்மொழியை அது தமிழ் மொழியில் உள்ளது என்று இகழ்வதும் எப்படிப்பட்ட பாவத்தை விளைக்குமோ அப்படிப்பட்ட பாவம் ஆழ்வாருடைய பிறவியை ஆராய்வதால் உண்டாகும் என்கிறார். மேலும் வடமொழியிலுள்ள நூல்கள் மட்டுமே ஏற்றுக் கொள்ளத் தக்கவை என மொழியினுடைய பெருமையை மட்டும் பார்க்கில் "கள்ள நூல்", "பொய்ந்நூல்" என்று பழிக்கப்பட்ட புறச்சமய நூல்களும் வடமொழியில் அமைந்துள்ளமையால் ஏற்றுக் கொள்ளத் தக்கவையாகிவிடும். உயர்ந்த குலத்தில் பிறந்தவர்கள் சொன்னவை மட்டுமே கொள்ளத்தக்கது என்று பிறவியை மட்டும் பார்க்கில், செம்படவப்பெண்ணான மத்ஸ்ய கந்தியின் புதல்வனான வியாசன் சொன்ன ஐந்தாம் வேதமான மஹாபாரதமும், யது குலத்தில் பிறந்த ஸ்ரீ கிருஷ்ணன் அருளிய பகவத் கீதையும், தள்ளத் தக்கவையாகிவிடும் என்கிறார்.

## வியாசர், கிருஷ்ணன் முதலியவர்களைக் காட்டிலும் ஆழ்வாரின் உயர்வு

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனான கிருஷ்ணனுடைய பிறவியையும், கன்னிகையான மச்சகந்தியினுடைய புத்திரனான வியாச முனிவருடைய பிறவியையும் விட, கிருஷ்ணன் விஷயத்தில் உண்டான ஆசையே ஒரு வடிவு கொண்டாற்போல் இருக்கின்ற ஆழ்வாருடைய பிறப்பு மிகவும் சிறந்தது என்று ஒப்பிட்டுக் கூறுகிறார்.

1.தேவகி கண்ணனை மகனாகப் பெற்றிருந்தும் அவனுடைய பிள்ளை விளையாட்டுக்களை அனுபவித்திலள். மற்றொரு தாயாரான யசோதை கண்ணனுடைய இளமைப் பருவ விளையாட்டுக்களை அனுபவித்த போதிலும் மனிதச் செயல்களுக்கு அப்பாற்பட்ட அவனுடைய செயல்களால் தானும் பிறரும் "தத்துக் கொண்டாள் கொலோ, தானே பெற்றாள் கொலோ" என ஐயுறும் படியான தன்மையையுடையவளானாள்.

மத்ஸ்யகந்தி விஷ்ணுவின் அம்சமான வியாச முனிவரைப் பிள்ளையாகப் பெற்றிருந்தும், கன்னிப் பருவத்திலேயே குழந்தை பெற்றுக் கொண்டபடியால் அவனாலுண்டாகும் இளமைப் பருவ இன்பத்தை அனுபவிக்க முடியாமல் மறுபடியும் கன்னிகையானாள்.

நம்மாழ்வாருடைய திருத்தாயார் "நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப் பாதம் பரவிப் பெற்ற" என்கிறபடியே நீண்டகாலம் கண்ணன் திருவடிகளை அடைந்து பெற்றதாகவும், இவருடைய திருவாயினின்றும் வருகின்ற வார்த்தைகளை அனுபவித்ததாகவும் ஆழ்வார் தாமே சொல்லக் கூடிய பேற்றினைப் பெற்றவர்.

2. கண்ணன் பிறந்த இடம் வெண்ணை முடை நாற்றம் நாறுகின்ற இடைச்சேரி. .வியாசர் பிறந்த இடம் மீன்வெறி நாறுகின்ற வலைச் சேரி. ஆழ்வார் அவதரித்த இடம் "வெறி கொள் துழாய் மலர் நாறும்" என்கிறபடியே பகவானுடைய சம்பந்தத்திற்கு அறிகுறியான திருத் துழாய் மணம் கமழும் இடம்.

3. கண்ணன் பிறந்த இடத்திலுள்ள ஆறு – தமோமயமான (கருநிறமுடைய) யமுனை. துறை – காளியன் விஷத்தாலே கெடுக்கப்பட்ட துறை. ஊர் – அறிவொன்றும் இல்லாத ஆய்ச்சேரி. வியாசர் பிறந்த இடத்திலுள்ள ஆறு – சிவபெருமான் சம்பந்தமுடைய கங்கை. துறை – ஓடத்துறை. ஊர் – வலைச்சேரி. நம்மாழ்வார் பிறந்த இடத்திலுள்ள ஆறு –

சிறப்புடைய பொருள்களுக்குப் பிறப்பிடமான மேன்மை வாய்ந்ததான தாமிரபரணி. துறை – வெண்மையான சங்கங்கள் வந்து சேரும் திருச்சங்கணி துறை. ஊர் – நல்லார்நவில்குருகூர்.

## ஆழ்வாருடைய பரோபகாரம்

ஜனக குலத்துக்கு மூத்த பெண்ணான பிராட்டி தான் பிறந்த குலத்துக்குக் கீர்த்தியுண்டாக்கினாற் போலேயும், தசரத குலத்துக்கு நடுவில் பிள்ளையான பரதாழ்வான் தன் குலத்துக்கு முன்பில்லாத ஏற்றங்களை உண்டாக்கினாற் போலவும், வசுதேவருக்குக் கடைக் குட்டியான கிருஷ்ணன், தாய் தந்தையருடைய கால் விலங்கை அறுத்தாற் போலேயும், இவ்வாழ்வாரும் திருவவதரித்து, தாம் பிறந்த ஊருக்குப் புகழுண்டாக்கி, தன்னுடைய குடிக்கு முன்பில்லாத ஏற்றத்தை உண்டாக்கி, தம்முடைய திவ்யப்ரபந்தத்தைக் கற்பதன் மூலம் தம்மோடு தொடர்புடையவர்களின் பிறவியாகிற சிறையை அறுத்தார் என்றருளியுள்ளார். மேலே குறிப்பிட்ட மூவர் செய்த செயல்களையும் இவர் ஒருவரே செய்ததாலும், ஆன்ம சொரூபத்திற்குத் தகுதியாகச் செய்ததாலும் இவர் அவதாரம் மிக்க பரோபகாரம் வாய்ந்ததாக ஆயிற்று என்கிறார்

## ஆழ்வார் அவதரித்ததால் உலகுக்கு உண்டான நன்மை

புற இருளைப் போக்கிக் கொண்டு உதிக்கும் சூரியனுக்குப் போகாத அறிவின்மையாகிற உள்ளிருள் நீங்கி, அம்புக் கூட்டங்களாகிற கிரணங்களைக் கொண்டு இராக்கதர்களாகிற கடலை வற்றப் பண்ணின இராமனாகிற சூரியனுக்கு வற்றாத பிறவிப் பெருங்கடல் வற்றி, உலகமாகிற தாமரை மலரும்படி தேவகியாகிற கிழக்குத் திசையிலே தோன்றின கிருஷ்ணனாகிற சூரியனுக்கு மலராத மனமாகிற தாமரை மலர்ந்தது நம்மாழ்வாராகிய சூரியன் தோன்றியதாலே என்கிறார்.

## நான்காம் வருணத்தில் அவதரித்ததற்குக் காரணம்

ஆழ்வார் நான்காம் வருணத்தில் அவதரித்ததும் பிறரை உய்வித்தற் பொருட்டேயாம் என்கிறார் நாயனார்.

யயாதி சாபத்தாலே அரசுரிமை இழந்து கிடந்த யது வம்சத்தை முன்னேற்றுவதற்காகத் தாழ்குலமான ஆய்க்குலம் புக்க கோபாலனைப் போலவும், இரணியாட்சனுடைய பலத்தாலே நிலை குலைந்து கிடந்த பூமியை மேலெடுக்க பாதாளத்திலே தாழ விழிந்த வராஹமூர்த்தியைப் போலவும், இவ்வாழ்வாரும், உயர்ந்த குலச் செருக்கில் மூழ்கிக் கிடப்பவர்களை

அந்நிலையில் நின்றும் மாற்ற அகங்காரத்திற்குக் காரணமான உயர்ந்த வருணத்தை விட்டு அவையில்லாத நான்காம் வருணத்திலே பிறந்ததாக அருளியுள்ளார்.

## பாகவதர்களுடைய பெருமை

ஆழ்வாருடைய குலத்தையிட்டு அவரைத் தாழ்வாக நினைத்தல் தகாது என்பதை நிலை நாட்டும் பொருட்டு, பரம ஸ்ரீவைஷ்ணவர்களான பாகவதர்களுடைய பெருமையைப் பல உதாரணங்களால் விளக்கியுள்ளார்.

(1) தாழ்ந்த ஜாதியில் பிறந்தவனாயினும் எம்பெருமானிடத்தில் பக்தி உடையவனாக இருந்தால் அவனை உயர்ந்த குலத்தில் பிறந்தவர்கள் பூஜிக்கலாம். அவனிடத்தில்! ஞானம் பெறலாம் என்று எம்பெருமானே அருளிச் செய்துள்ளான்.

(2) தொடங்கிய யாகத்தை, செய்ய வேண்டிய முறைப்படி செய்யாமையாலும், அது முடிவதற்கு முன்னே இறக்கையாலும் சோம சர்மா என்ற அந்தணனுக்கு வந்த பிரம்மராக்ஷஸத் தன்மையை, தாழ்ந்த பிறவியில் வந்த பாகவதனாகிய நம்பாடுவான் தன்னுடைய கைசிகப் பண்ணாலே போக்கினான்.

(3) பிறவியாலும், ஒழுக்கத்தாலும், ஞானத்தாலும் தாழ்ந்தவனான குகன் இராமபிரானுக்கு ஒத்த தோழனாய், சித்ர கூடத்திலே பெருமாள் பள்ளி கொண்டருளும் பொழுது, கண்ணுறக்கமற்று, கையும் வில்லுமாய்க் காத்துக் கொண்டிருக்கிற இளைய பெருமாளிடத்திலும் ஐயம் கொண்டு, ஆயுதங்களோடு கூடினவனாய், அவர் மேல் கண்ணாய் நின்று, பிறகு ஸ்ரீ ராமனைப் பிரிந்த வருத்தத்துடன் வந்த பரதாழ்வானுக்கு, இராமனிடத்தில் இளைய பெருமாளுக்கு உள்ள பக்தியையும், பாரதந்திரியத்தையும் எடுத்துச் சொல்லும்படி இக்ஷ்வாகு வம்சத்தவர்களோடு ஒன்றாகக் கலந்தான்.

(4) இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்தவனான இராமபிரான் வேடுவிச்சியான சபரி கொடுத்த (கடித்த) பழங்களை உண்டான். குரங்கினத்தைச் சேர்ந்தவனான அனுமானோடும் உண்டான். பாண்டவர்களுக்காகத் தூது சென்ற கண்ணபிரான் தாழ்குலத்தவரான விதுரர் இட்ட விருந்தை உண்டான்.

(5) யது குலத்திலே பிறந்து இடைக் குலத்திலே வளர்ந்த ஸ்ரீ கிருஷ்ணனுக்கு தர்ம புத்திரரும், ரிஷி புத்திரனாய்ப் பிறந்து பிரம்பன் குடியிலே

வளர்ந்த திருமழிசைப் பிரானுக்குப் பெரும்புலியூரடிகளும் அக்ர பூஜை (முதல் மரியாதை) கொடுத்தனர்.

(6) க்ஷத்ரியகுலத்தில் பிறந்த தர்மபுத்திரர் தாழ்குலத்தவரான விதுரருக்கும், இராமபிரான் பறவையான ஜடாயுவுக்கும், அந்தணரான பெரியநம்பி தாழ்குலத்தவரான மாறனேர் நம்பிக்கும் ஈமக்கடன்கள் செய்தனர்.

(7) திருவேங்கடமுடையானுக்கு அந்தரங்கரான குறும்பறுத்த நம்பியை அரசர்களில் தலைவனான தொண்டைமாள் சக்கரவர்த்தியும், பெருமாள் கோயிலிலே விசிறியும், கையுமாய்ப் பெருமாளுக்கு அந்தரங்கராய் இருந்த திருக்கச்சிநம்பியை வைதிகோத்தமரான உடையவரும், திருவரங்கத்தில் வீணையும் கையுமாய் பெருமாளுக்கு அந்தரங்கரான திருப்பாணாழ்வாரை லோகசாரங்க மகாமுனிவரும் பணிந்திருந்தனர்.

(8) பிள்ளை உறங்காவில்லி தாசரைத் தீண்டுதலால் உடையவர் தம்முடைய உடலைச் சுத்தி செய்து கொண்டார். பிள்ளை ஏறு திருவுடையார் தாசருடைய திருக்கரத்தாலே பிரசாதத்தைத் தொடச்செய்து நம்பிள்ளை அன்ன சுத்தி பண்ணினார். பிள்ளை வானமாமலை தாசருடைய நடையாட்டத்தாலே நடுவில் திருவீதிப்பிள்ளை தம்முடைய இல்லத்தை சுத்தி பண்ணினார்.

இவ்வாறு பல பெரியோர்கள், குலத்தின் தாழ்வு பார்க்காமல் செய்தவற்றை நன்கு அறிபவர்களுக்கன்றோ பிறப்பினுடைய உயர்வு தாழ்வுகள் தெரிவது என்கிறார். பகவானுடைய அன்புக்கு இலக்காய், அவனிடம் பக்தி கொண்டிருக்கின்ற பிறப்பே உயர்ந்தது. அது இல்லாமல் உயர்ந்த குலத்தில் பிறந்திருந்தாலும் அது தாழ்ந்த பிறப்பே என்பது நாயனார் கருத்து.

## எம்பெருமானுக்கு அடிமை செய்வதற்குத் தக்க பிறவியே உயர் பிறவி

ஆத்மாவுக்கு இயற்கையான தொண்டினைச் செய்வதற்குத் தக்கதான பிறவியே ஆத்மாவுக்கு உயர் பிறவி என்றும், அப்படிப்பட்ட பிறவிகளையே நித்ய சூரிகளும் முமுக்ஷுக்களும் ஆசைப்பட்டனர் என்பதையும் எடுத்துக் காட்டுகளுடன் விளக்குகிறார்.

பரமபதத்திலே எம்பெருமானுக்குப் படுக்கையாக இருந்து கைங்கர்யம் செய்வதற்குறுப்பாகப் பாம்பாகவும், வாகனமாக இருந்து கைங்கர்யம் செய்வதற்குறுப்பாக கருடப்பறவையாகவும், எம்பெருமான் விரும்பி

அணிவதற்கு உரிய திருத்துழாய்ச் செடியாகவும் இருக்க, பெருமக்களான நித்யசூரிகள் ஆசைப்படுகின்றனர். யமுனைக் கரையில் கண்ணபிரான் தன்னுடைய திருவடிகளால் மிதித்து ஏறின கடம்பரமாகவோ, குருந்தமரமாகவோ ஆக வேணுமென்றும், பிருந்தாவனத்தில் கண்ணன் போன வழியைப் பின் தொடர்ந்த பெண்களுடைய பாதத்துகள் சேர்ந்த பிருந்தாவனத்தில் உள்ள சிறு செடிகள், கொடிகள் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றாக ஆகவேணுமென்றும், திருமலையோடு சம்பந்தமுடைய விலங்கு மற்றும் செடிகொடிகளில் ஏதேனுமாக ஆக வேண்டு மென்றும், ஸ்ரீ வைஷ்ணவர் திருமாளிகையில் உள்ள ஒரு புழுவாகப் பிறக்க வேண்டும் என்றும், முறையே – பெரியோர்களாகிற ஸ்ரீசுகர், உத்தவர், ஸ்ரீகுலசேகரப் பெருமாள், ஆளவந்தார் முதலான முமுக்ஷுக்கள் வேண்டினர். இவ்வுலகில் விலங்கு, பறவை, மரம், செடி முதலிய பிறவிகள் தீவினையின் பயனாய்ப் பெறப் படுவதாக சாத்திரங் களில் சொல்லியிருக்க, அப்படிப்பட்ட பிறவிகளை நித்யசூரிகளும், முமுக்ஷுக்களும் வேண்டுவர்கள் என்பதனால், எம்பெருமானுக்கு அடிமை செய்வதற்குத் தக்க பிறவியே உயர்ந்தது என்பது இதனால் பெறப்படுகிறது என்று கூறுகிறார்.

## வருணம் வந்தேறி

வருணம் வந்தேறி என்பதை உதாரணம் கொண்டு விளக்குகிறார். க்ஷத்ரியனான ஒரு அரசன் (விசுவாமித்திரன்) தான் செய்த புண்ணியத்தின் பலனாய், அந்த உடலுடன் இருக்கும்போதே அந்தணனாய் பிரம்ம ரிஷியாகையாலும், க்ஷத்ரியனான மற்றொரு அரசன் (திரிசங்கு) தான் செய்த தீவினையின் பயனாய், அந்த உடலோடு இருக்கும்போதே சண்டாளனாக்கப் பட்டமையாலும், அரசத்தன்மை நீங்கி பிரம்ம ரிஷியானவன், அரசனாம் தன்மை நீங்கி சண்டாளனாய் நிற்கிறவனை அந்த வேஷத்தோடே யாகம் செய்வித்து சுவர்க்கத்திலே ஏற்றுகையாலும், வருணங்கள் நல்வினை தீவினை காரணமாக வந்ததேறினவாகையால் ஆத்மாவுக்கு இயல்பானவையல்ல என்பது விளங்கும் என்கிறார்.

மேலும், நம்மாழ்வாருடைய அவதாரம் முக்காலமும் உணர்ந்த முனிவர்களான ஸ்ரீசுகர் முதலியவர்களால் ஸ்ரீபாகவதம் முதலிய நூல்களில் முன்பே குறிப்பிடப் பட்டுள்ளது என்றும் இப்படி அவதரித்த ஆழ்வாரை மாபெரும் ஞானிகளும் இன்னார் என்று அளவிட முடியாமல் ஐயுறுவர் என்றும் அருளிச் செய்கிறார்.

## ஆழ்வாருடைய பக்தி சாதனங்களால் உண்டானது அல்ல

இவருடைய பரமபக்தி, கர்ம, ஞான, பக்தி என்னும் மூன்று சாதனங்களையும் இப்பிறவியில் செய்ததால் உண்டானது அன்று என்பதை நாயனார் ஆழ்வாருடைய பாசுரங்களைக் கொண்டே நிரூபிக்கிறார். "இடகிலேன் ஒன்று அட்டகில்லேன்"[1] "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்"[2] முதலிய பாசுரங்களிலே கர்ம, ஞான, பக்தி யோகங்கள் ஒன்றையும் நான் அனுட்டிக்கவில்லை என்று ஆழ்வார் தாமே பேசியிருக்கை யால் இந்தப் பரமபக்தி இப்பிறவியில் உபாயத்தை அனுட்டித்து வந்ததன்று.

## முற்பிறவியில் செய்ததுமல்ல

"கிற்பன் கில்லேன்"[3] என்ற பாசுரத்தில் விதித்தவற்றைச் செய்யாது, விலக்கியவற்றைச் செய்து போந்தேன் என்றும், "தெரிந்துணர்வொன்று இன்மையால் தீவினையேன் – வாளா இருந்தொழிந்தேன் கீழ் நாள்கள் எல்லாம்"[4] என்ற பாசுரத்தில், கழிந்து போன காலம் எல்லாம் எம்பெருமானை ஏத்தாது அறிவு கெட்டு வாளா இருந்து விட்டேன் என்றும் ஆழ்வாரே அருளிச் செய்துள்ளமையால் ஆழ்வாருடைய பரமபக்தி முற்பிறவியில் உபாயத்தை அனுட்டித்ததாலுண்டானது மன்று என்று தெரியும் என்கிறார்.

## எம்பெருமானுடைய திருவருளால் வந்தது

"குறிக் கொள் ஞானங்களால் எனையூழி செய்தவமும்"[5] என்ற பாசுரத்தில் பல கல்ப காலங்கள் சேர்ந்து கேள்வியாலும், மனத்தாலும் இடையறாத நினைவினாலும் வரக்கூடிய பக்தி யோகமாகிற தவத்தினுடைய பலத்தினை, ஒரு முயற்சியும் இன்றியே எம்பெருமானருளாலே இப்பிறப்பிலே, இப்பிறப்பிலும் சில நாட்களிலேயே பெற்றேன் என்று தாமே அருளிச் செய்துள்ளமையால் ஆழ்வாருடைய பக்தியானது முற்பிறவிகளால் வந்ததுமன்று. இப்பிறவியில் கர்ம, ஞான, பக்தி முதலிய சாதனங்களை அனுட்டித்து வந்ததுமன்று எம்பெருமானுடைய அருளினாலே வந்தது என்பதை ஆழ்வார் பாசுரங்கள் கொண்டு காட்டுகிறார்.

## ஆழ்வாரை மட்டும் அங்கீகரிக்கக் காரணம்

இவ்வாறு எம்பெருமான் காரணம் ஒன்றுமின்றியே, அங்கீகரிக்குமளவில், எல்லோரையும் அங்கீகரிக்காமல், இவரை மட்டும்

---

1. திருவாய்மொழி 4-7-9 2. திருவாய்மொழி 5-7-1 3. திருவாய்மொழி 3-2-6
4. பெரியதிருவந்தாதி - 82 5. திருவாய்மொழி 2-3-8

அங்கீகரிக்கக் காரணம், ஒரு தடையும் இல்லாத எம்பெருமானு டைய சுவாதந்திரியமே என்கிறார். அரசன் இல்லாத தேசத்திலே, பட்டத்துக்குரிய யானையால் தேர்ந்து எடுக்கப்பட்டவன் ஒருவன் அரசன் ஆகும்பொழுது அந்த யானை மற்றவர்களை விட்டு அவனை மட்டும் தேர்ந்தெடுத்ததற்குக் காரணத்தை ஆராய முடியாதது போல, எம்பெருமான் தன் இச்சையாலே தனக்கு உரிமைப் பட்டனவான ஆன்மாக்களிலே ஒரொன்றைத் தன்டைய உபயோகத்திற்குத் தகுதியாம்படி அங்கீகரித்தால் அதற்குக் காரணம் ஆராயப்பட மாட்டாது என்கிறார்.

## ஆழ்வாருடைய பக்திக்குக் காரணம்

இவரை எம்பெருமான் அங்கீகரிப்பதற்கு இவர் அறிந்து செய்த புண்ணியங்கள் ஒன்றும் இல்லையாயினும் இவர் அறியாமலேயே யாத்ருச்சிகம், (தன்னை அறியாமல் தற்செயலாகச் செய்தவை) பிராசங்கிகம் (ஈச்வரன் தானே ஏறிட்டுக் கொள்ளும் சேதநன் அறியாத புண்ணியம்) என்று சொல்லப்படுகின்ற புண்ணியங்கள் இருக்க, அதனால் எம்பெருமான் இவரை அங்கீகரித்தானோ என்பதற்கு அவையும் இவர்க்கு இல்லை என்று ஆழ்வார் பாசுரங்களைக் கொண்டே காட்டுகிறார்.

"முந்நீர் ஞாலம்"[1] என்ற பாசுரத்தில் எம்பெருமான் தன்னுடைய திருவடித் தாமரைகளை அடைவ தற்குக் கருவியாகத் தந்த உடலைக் கொண்டு அவனை அடையாமல் பிறப்பதும், இறப்பதுமாக இச்சம்சாரத்தில் உழன்று போந்தேன் என்று தம்முடைய செயல்களைப் பற்றித் தாமே அருளியுள்ளார். "வாழ்ந்தார்கள் வாழ்ந்தது"[2] என்ற பாசுரத்தில், முன்பு வாழ்ந்தவர்கள் பெருமழையில் தோன்றும் நீர்க்குமிழி போல மாய்ந்து போனார்கள் என்பதொழிய படைப்புக் காலம் முதல் இன்று வரை ஒரு படிப்பட வாழ்ந்தவர்கள் என்பது கிடையாது என்று முன்பு செல்வர்களாய் வாழ்ந்து போந்தவர்களின் செயல்களை ஆழ்வார் அறிந்து கூறியுள்ளார்.

"சூட்டுநன் மாலைகள்"[3] என்ற பாசுரத்தில் பரமபதத்தில் நித்யசூரிகள் எம்பெருமானுக்குத் திருவாராதனம் சமர்ப்பித்துக் கொண்டிருக்கும் பொழுது, எம்பெருமான் அதனை வெறுத்து, திருவாய்பாடியில் வெண்ணையை விரும்பியும், நப்பின்னைப் பிராட்டியின் திருமேனியை விரும்பியும், வந்து அவதரித்ததைச் சொன்னதால் பரமபதத்திலுள்ளவர்களின் செயல்களைக் கூறினார்.

---

1. திருவாய்மொழி 3-2-1  2. திருவாய்மொழி 4-1-6  3. திருவிருத்தம்-21

"கோவை வாயாள்"[1], "ஆழியெழ"[2] என்ற இரண்டு பதிகங்களிலும், தேசத்தாலும், காலத்தாலும் முற்பட்டதான அவதாரங்களில் சர்வேச்வரன் செய்த செயல்களை ஒரு தடையும் இல்லாமல் அறிந்து அருளிச் செய்துள்ளார். இவ்வாறு எல்லாவற்றையும் தெரிந்து அருளிச் செய்துள்ள ஆழ்வார், தம்மை எம்பெருமான் அங்கீகரிப்பதற்கு அடியான யாத்ருச்சிகம் (ஈச்வரன் தானே ஏறிட்டுக் கொள்ளும் புண்ணியம்) முதலான புண்ணியங்கள் உண்டாகில் அவற்றையும் அருளிச் செய்திருப்பர். அவ்வாறு அருளிச் செய்யவில்லையாதலால் அவையும் இவர்க்கு இல்லை என்கிறார்.

## ஆழ்வாருடைய இசைவும், விருப்பமும் எம்பெருமானடியாக வந்தவை

ஆழ்வார் "வைத்தேன் மதியால்"[3] என்னும் பாசுரத்திலும், "யானும் என்நெஞ்சும் இசைந்தொழிந்தோம்"[4] என்ற பாசுரத்திலும் இசைவும், இச்சையும் இருப்பதாகச் சொல்லியிருக்கின்றாரே அது எம்பெருமானுடைய திருவருளுக்குக் காரணமாக அமையாதோ என்ற கேள்விக்கு, அதுவும் அவனதருளாலே வந்தது என்பதை நாயனார் ஆழ்வார் பாசுரங்களைக் கொண்டே காட்டுகிறார். "யானொட்டி என்னுள் இருத்துவமென்றிலன்"[5] என்கிறபடி எம்பெருமான் தம்முள்ளே புகுந்திருப்பதாகக் கேட்ட அளவில், அவனை உள்ளே இருத்துவோம் என்று இசையாத தம்மை, "இசைவித்து என்னை"[6] என்கிற படியே வருந்தி இசையச் செய்து என்னுள் புகுந்தான் என்கிறார். ஆகவே இந்த இச்சையும், இச்சையும் எம்பெருமானருளாலே வந்தவை என்கிறார்.

மேலும் "வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால்"[7] என்று திருவருள்தான் வந்த வழி இன்னது என்று சொல்லக்கூடிய காரணம் இல்லை என்றும், "வெறிதேயருள் செய்வர்"[8] என்கிறபடியே எம்பெருமான், தான் அருள் செய்ய நினைத்தவர்களுக்கு ஒரு காரணம் இன்றி அருள் புரிவான் என்றும், ஆழ்வாரே அறுதியிட்ட பின் இவருடைய பேற்றுக்கு எம்பெருமாளை யொழிய வேறு சொல்லக் கூடிய புண்ணியம் ஒன்றும் இல்லை என்கிறார்.

## ஆழ்வாருடைய பக்தி பேற்றுக்கு சாதனமன்று

எம்பெருமானருளாலே உண்டான இவருடைய பக்தி மற்றவர்களுடைய பக்தியைப் போன்று பேற்றுக்கு சாதனமன்று என்கிறார். ஆழ்வார் "மயர்வற

---

1 திருவாய்மொழி 4-3  2. திருவாய்மொழி 7-4  3. திருவாய்மொழி 8-7-10
4. பெரியதிருவந்தாதி-26  5. திருவாய்மொழி 1-7-7  6. திருவாய்மொழி 5-8-9
7. பெரியதிருவந்தாதி-56  8. திருவாய்மொழி 8-7-8

மதிநலம் அருளினன்"[1] என்று தமக்குப் பக்தி உண்டாவதற்குக் காரணம் எம்பெருமானுடைய திருவருள் என்று தொடங்கி "என் கொலம்மாள் திருவருள்கள்"[2] என்று தலைக்கட்டுகிறார். அவன் அருள் கொண்டே தரிக்க வேண்டும் தன்மையை உடையவரான இவர்க்கு, பக்தி உண்டாவதற்குக் காரணமாகச் சொன்ன அருளே "உன் அடி சேர் வண்ணமருளாயே"[3] என்கிறபடியே அடி சேருகையாகிற பேற்றுக்கும் காரணம் என்கிறார். பக்தி இவர்க்கு எம்பெருமானையடைய சாதனமன்று.

## எம்பெருமான் ஞானத்தையும் பக்தியையும் வளர்த்ததற்குக் காரணம்

பேற்றிற்கும் அவனதருளே காரணம் என்னில் "இந்நின்ற நீர்மை இனியாமுறாமை" என்று தொடங்கியபோதே ஆழ்வாருடை விருப்பத்தைத் தலைக்கட்டி விடாமல், எம்பெருமான் ஞானத்தையும், பக்தியையும் வளர்த்தது ஏன்? என்ற வினாவிற்கு, அளவிடற்கரிய ஞானத்தையும், சக்தியையுமுடைய நித்யசூரிகள் அனுபவிக்கிற போகத்தை முதலிலேயே கொடுத்தால் ஆழ்வாரால் தாங்க முடியாது என்று கருதியே எம்பெருமான், அது பொறுப்பதற்காக, கலவியாலே ஞானத்தையும், பிரிவாலே பக்தியையும் வளர்த்தான் என்று விடையறுக்கிறார்.

## ஆழ்வாரின் நிலைவேறுபாடு

ஆழ்வார் ஞானதசையில் தரமான தன்மையிலே நின்று பேசுவர். அன்பு நிலையில் வேறு ஒரு நிலையினை அடைந்தவராய்ப் பெண்பேச்சாகப் பேசுவர். ஆனால் இருவகைத் தன்மைகளிலும் அடிமைத் தன்மையான நிலை குலையாது என்கிறார். இவருக்கு நிலை வேறுபாடாவது – தம் பேச்சுப் போய்ப் பிராட்டி பாவனையில் பெண் பேச்சாகையே என்கிறார்.

## ஆழ்வார்க்குப் பெண் பேச்சு வந்தேறியன்று

இவருக்குத் தாமான தன்மையில் பேசுவதன்றோ இயல்பு. பிராட்டிமார் நிலையை அடைந்து பேசும் பேச்சு வந்தேறியன்றோ என்ன, எம்பெருமானுக்கே பரதந்திரப் பட்டதுமாய், இனியதாயுமிருக்கும் இந்த ஆத்மாவுக்கு இயல்பாக அமைந்தது பெண் தன்மையாகையாலே, அதனை உள்ளபடி அறிந்த இவர்க்கு, அதனடியாக வரும் பெண் பேச்சு வந்தேறியன்று என்கிறார்.

---

1. திருவாய்மொழி 1-1-1 2. திருவாய்மொழி 10-7-4 3. திருவாய்மொழி 6-10-2

## ஆன்மாவுக்குப் பிராட்டியோடு ஒப்புமை

பரிசுத்தமான ஆத்ம சொரூபத்திற்கு பெண்களுக்குள் உயர்ந்தவளான பிராட்டியோடே ஒப்புமையும் உண்டு என்றருளிச் செய்கிறார். எம்பெருமான் பிராட்டிக்குமுன்னே ஆழ்வார் பக்கல் இன்பனாவது, பிராட்டி பக்கல் பண்ணின சிநேகத்தை இவரளவும் வளரவிடுவது முதலியவை பிராட்டியோடு இவருக்கு உள்ள அறுவகையான ஒப்புமையாலே என்கிறார். அவை: அநந்யார்ஹ சேஷத்வம் (அவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல்). அநந்யசரணத்வம் (அவன் ஒருவனையே புகலாகக் கொண்டிருத்தல்), அநந்ய போக்யத்வம் (அவன் ஒருவனுக்கே இனியனாக இருத்தல்), ஸம்ச்லேஷத்தில் தரிக்கை (சேர்க்கையில் தரித்திருத்தல்), விச்லேஷத்தில் தரியாமை (பிரிவில் தரியாதிருத்தல்), ததேக நிர்வாஹ்யத்வம் (அவன் ஒருவனுக்கே வசப்பட்ட ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளை உடைமை).

## பிராட்டிமார் மூவரோடும் ஒப்புமை

பெரிய பிராட்டியாரோடு மட்டுமல்லாமல், தேவிமார்கள் மூவரோடும் இவருக்குண்டான ஒப்புமையை நாயனார் ஆழ்வார் பாசுரங்கள் கொண்டே காட்டுகிறார். "தேறியும் தேறாது மாயோன் திறத்தனளே இத்திருவே"[1] என்ற பாசுரத்தில் ஆழ்வார் பெரிய பிராட்டியாரோடும், "மதுசூதனன் தாமோதரன் உண்டுமிழ்ந்தும் கடாய மண்ணேரன்ன வொண்ணுதலே"[2] என்ற பாசுரத்தில் பூமிப் பிராட்டியோடும் ஒத்தவராகக் கூறப்பட்டிருக்கிறார். "பின்னை கொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்"[3] என்ற பாசுரத்தில், ஆழ்வாருக்கு தேவிமார் மூவரோடும் ஒப்புமை தெரிவிக்கப் பட்டுள்ளது.

## மற்றும் பல தேவிமார்களோடு ஆழ்வாருக்குண்டான ஒப்புமை

கோபிமார்களுடையவும், மதுராநகர ஸ்திரீகளுடையவும், நரக வதத்திற்குப் பிறகு கண்ணனால் அங்கீகரிக்கப்பட்ட பதினாறாயிரம் தேவிமார்களுடையவும் பாவமும் இவர்க்கு உண்டென்று நாயனார் அருளியுள்ளார். திருவாய்ப்பாடியிலுள்ள பெண்களுடைய பாவம் இவர்க்குள்ளபடி "கடல் ஞாலம்"[4] "மின்னிடைமடவார்"[5], "மல்லிகை"[6], "வேய்மரு"[7] என்ற திருவாய்மொழிகளிலும், "பேய்முலையுண்டு"[8], "முனிந்து

1. திருவாய்மொழி 4-4-7 2. திருவிருத்தம் 49 3. மேலது 6-5-10
4. மேலது 5-6 5. மேலது 6-2 6. மேலது 9-9
7. மேலது 10-3 8. மேலது 5-3-8

சகடமுதைத்து"[1], என்கிற பாட்டுக்களிலும் தோன்றும். மதுரா நகரத்துப் பெண்களுடைய பாவம் "மற்பொரு தோளுடைமாயப் பிரானுக்கு"[2], "விறல் கஞ்சனை வஞ்சனை செய்தீர்"[3] முதலிய பாசுரங்களில் தோன்றும். நரகாசுரனை வதம் செய்த பிறகு ஏற்றுக் கொண்ட பதினாறாயிரம் தேவிமார்களுடைய பாவம் இவருக்கு உண்டென்பது "வாயுந்திரைகளும்"[4], "தீர்ப்பாரையாமினி"[6] முதலிய திருவாய் மொழிகளிலே தோன்றும்.

## அடியார் எல்லாரோடும் இவர்க்கு உண்டான ஒப்புமை

இலக்குவன், பரதன், சத்ருக்நன், தசரதன், யசோதை, பிரஹ்லாதன், விபீஷணன், திருவடி, பார்த்தன் முதலியவர்களுடைய தன்மைகளும் ஆழ்வார் பக்கல் உண்டு என்று பிரமாணங்களின் மூலம் காட்டுகிறார்.

1. இளையபெருமாள் இளமை தொடங்கி ஸ்ரீராமபிரானைப் பிரியில் தரியாத சிநேகமுடையவராய், "அடியேன் தேவரீருக்கு எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்யவேண்டும்; ஏவிக்கொண்டருள வேண்டும்" என்று ஸ்ரீராமபிரானைப் பிரார்த்தித்து, எல்லாக் காலத்திலும் இடைவிடாமல் செய்யும் அக்கைங்கரியத்தைப் பிராட்டி புருஷகாரம் முன்னாகப் பெற்று, ஸ்ரீராமபிரானே தமக்கு எல்லாவிதமான உறவும் என்றிருந்தவர். ஆழ்வாரும் "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து"[7] என்கிறபடியே பருவம் நிரம்புவதற்கு முன்னே எம்பெருமானைப் பிரியில் தரியாத நிலையையுடையவராய், "ஒழிவில் கால மெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்"[8] என்கிறபடியே எல்லா விதமான கைங்கர்யங்களையும் செய்ய வேண்டும் என்றும், "முகப்பே கூவிப் பணி கொள்ளாய்"[9] என்கிறபடி ஏவிக்கொள்ளவும் வேண்டும் என்று பிரார்த்தித்து, "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்"[10] நமக்கென்று புருஷகாரம் முன்னாக அவன் திருவடிகளைப் பற்றி "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும், நன்மக்களும் மேலாத்தாய் தந்தையரும் அவரே"[11] என்று எம்பெருமானே தமக்கு எல்லா உறவுமென்றிருந்தார். இவ்வகைகளாலே இவர் இளைய பெருமாளோடொப்பர்.

2. ஸ்ரீபரதாழ்வான் தன் தாயாரான கைகேயி பெருமாளைக் காட்டுக்குத் துரத்தியபடியால், அவளைச் சீறி வெறுத்து, கிடைத்த அரசையும்,

---

1. திருவாய்மொழி 7-3-5 | 2. மேலது 6-6-10 | 3. மேலது 2-4-8 | 4. மேலது 2-1
5. மேலது 4-6 | 6. மேலது 9-9 | 7. மேலது 2-3-3 | 8. மேலது 3-3-1
9. மேலது 8-5-7 | 10. மேலது 5-10-11 | 11. மேலது 5-1-8

செல்வத்தையும் விரும்பாது, ஸ்ரீராமபிரானைத் தேடிச் சென்று, அவர் திருவடி நிலைகளைத் தலைமேல் பெற்று, பெருமாள் திரும்பும் வரையில் கண்ணநீரோடே தரைக் கிடந்தார்.

ஆழ்வாரும் எம்பெருமானை எவ்வழியாகிலும் அடைய வேண்டும் என்ற தன்னுடைய பதற்றத்திற்கு இசையாமல் விலக்கிய மாதாவை வெறுத்து, "கொள்ளென்று கிளர்ந்து எழுந்த பெருஞ் செல்வம் நெருப்பு"[1] என்று செல்வத்தை விரும்பாமல், "வேங்கடவாணனை வேண்டிச் சென்று"[2] என்கிறபடியே பெருமாளைத் தேடிச் சென்று, "திருவடியே சுமந்துழலக் கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை"[3] என்கிறபடியே அவனுடைய திருவடிகளைத் தலைமேல் தாங்கி, எம்பெருமான் விண்ணுலகம் தர விரைந்து வருமளவும், "கண்ணநீர் கைகளாலிறைக்கும்"[4] என்கிறபடியே கண்ணநீரோடே இருந்தமையால் பரதாழ்வானோடு ஒப்புமை கூறலாம்.

3. ஸ்ரீசத்ருக்நாழ்வான் பாகவதர்களுக்கு அடிமைப் பட்டிருத்தலே மேலான பேறு என்று ஸ்ரீ பரதாழ்வானுக்கு அடிமைப்பட்டவராய், ஸ்ரீராமபிரானுடைய அழகிலும் ஈடுபடாமல் பரதனுக்குத் தொண்டு செய்து, ஸ்ரீபரதாழ்வானுக்கு உகப்பு என்பதால் ஸ்ரீராமபிரானுடைய வடிவழகினை மனத்திலே கொண்டிருந்தார்.

ஆழ்வார் "கோதிலடியார்"[5] என்கிறபடியே பாகவதர்களுக்கு அடிமைப் பட்டிருத்தலை விரும்பி, அந்த நிலைக்கு விரோதியான பகவானுடைய விக்கிரகத்தை, தமக்கு உகந்தவர்களாகிய பாகவதர் களுக்கு உகப்பு என் கையாலே "புலன் கொள் வடிவு என் மனத்ததாய்"[6] என்கிறபடியே தன் மனத்தில் கொண்டிருக்கையாலே ஸ்ரீசத்ருக்னாழ்வான் தன்மையும் ஆழ்வார் பக்கலில் காணலாம்.

4. ஸ்ரீராமபிரானைப் பார்த்துக் கொண்டிருக்கிற தசரத சக்கரவர்த்தி, வைத்த கண் வாங்காதே அனுபவித்த போதும், மேலும் மேலும் அனுபவிக்க விரும்பியதைப் போல, இவரும் "எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழி"[7] என்கிறபடியே காலம் உள்ள வரையில் எம்பெருமானை அனுபவித்த போதிலும் "அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆராவமுதம்"[7] என்கிறபடியே மேன்மேலும் அனுபவிப்பதில் வேட்கை பெருக நின்றார். இந்நிலையில் இவர் தசரத சக்கரவர்த்தியோடொப்பர்.

---

1. திருவாய்மொழி 4-9-4 2. மேலது 8-2-1 3. மேலது 4-9-9 4. மேலது 7-2-1
5. மேலது 8-10-9 6. மேலது 8-10-4 7. மேலது 2-5-4

5. பிரஹலாதன் நெருப்பு முதலானவைகளினால் பாதிக்கப்படாமல், எல்லாவற்றையும் எம்பெருமானுக்கு அனுகூலமான பொருட்களாகவே நினைத்தும், "எங்குமுளன் கண்ணன்"[1] என்கிறபடியே எம்பெருமான் எல்லா இடத்திலும் இருக்கின்றான் என்று பிறர்க்கு உபதேசித்தும் இருந்தது போன்று, ஆழ்வாரும் "அறியும் செந்தீயைத் தழுவி அச்சுதன் என்னும் மெய் வேவாள்"[2] என்றும் "போம் இளநாகத்தின் பின் போய் அவன் கிடக்கை ஈது என்னும்"[3] என்றும் சொல்கிறபடியே நெருப்பு முதலான துன்புறுத்தும் பொருள்களை, எம்பெருமானை உயிராகக் கொண்டு இருப்பதனால் அனுகூலமாக நினைத்தமையாலும், "கரந்தசிலிடந்தொறும் இடந்திகழ் பொருள் தொறும் கரந்து எங்கும் பரந்துளன்"[4] என்று எம்பெருமான் எங்கும் பரந்து நிற்கும் தன்மையை அருளியமையாலும் பிரஹலாதனோடு ஒப்பாவார்.

6. விபீஷணன் லங்கையோடு கூட மனைவி, பிள்ளை எல்லாவற்றையும் விட்டு ஸ்ரீராமபிரானையே தமக்கு எல்லாமாகப் பற்றினார். இவரும் "பாதமடைவதன் பாசத்தாலே மற்றவன் பாசங்கள் முற்றவிட்டு"[5] என்கிறபடியே இவ்வுலக வாழ்க்கையில் உள்ள எல்லாப் பற்றுக்களையும் விட்டு "தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே"[6] என்று சக்கரவர்த்தி திருமகனையே எல்லாமாகப் பற்றினார். எனவே விபீஷணன் தன்மையையும் இவர் பக்கல் காணலாம்.

7. திருவடி சக்கரவர்த்தி திருமகனைத் தன்னுள்ளேயுடையவனாய், அவருடைய வீர சரிதத்தையே போக்யமாக நினைப்பவராய், (பரத்வத்திலும் நெஞ்சு செல்லாமல்) சக்கரவர்த்தி திருமகனையல்லது அறியேனென்றிருந்தார். ஆழ்வார் "செருக்கடுத்தன்று திகைத்த அரக்கரை, உருக்கெட வாளி பொழிந்த ஒருவன்,– திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும், ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் கண்டீர்"[7] என்று சக்கரவர்த்தி திருமகனைத் தன்னுள்ளே உடையவராய், "கணைநாணில், ஓவாத் தொழில் சார்ங்கன் தொல் சீரை நன்னெஞ்சே ஓவாத ஊணாக உண்"[8] என்கிறபடியே ஸ்ரீராமபிரானுடைய சரிதத்தை போக்யமாக உடையவராய் "தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன்"[9] என்றிருக்கையாலே திருவடியுடைய தன்மையும் இவர் பக்கல் காணலாம்.

8. அருச்சுனன் கண்ணனுடைய விசுவரூபத்தைக் கண்டு உவகையும் அச்சமும் கொண்டு, நான்கு தோள்களையுடையதாய்ச் சங்கு

1. திருவாய்மொழி 2-8-9 2. மேலது 4-4-3 3. மேலது 4-4-5
4. மேலது 1-1-6 5. மேலது 8-2-11 6. மேலது 3-6-8
7. மேலது 8-6-2 8. பெரிய திரு.78 9.மேலது 3-6-8

சக்கரங்களையுடைய அவனுடைய அழகிய திருமேனியைக் காண விரும்பினாற்போன்று, இவ்வாழ்வாரும் "நல்குரவும்"[1] என்று தொடங்கி பல வகைப் பட்ட பொருள்கள் அமைந்த உலகத்தையுடையவனாய்க் கொண்ட எம்பெருமானை நோக்கி "கூராராழி வெண் சங்சேந்தி வாராய்"[2] என்று சங்கு சக்கரங்களுடன் கூடிய திவ்ய மங்கள விக்கிரகத்தைக் காண ஆசைப்பட்டார். எனவே அருச்சுனன் தன்மையையும் இவர் பக்கல் காணலாம்.

## பெண் நிலையின் தன்மைகள்

எம்பெருமானாலே வளர்க்கப்படும் ஜ்ஞானத்தையும், பக்தியையுமுடைய ஆழ்வார் ஞானநிலையில் தாமான தன்மையில் பேசுவர். அன்பு நிலையில் பெண் தன்மையடைந்து பேசுவர். எம்பெருமானிடத்தில் அன்பு மிகுதியாக உள்ள காலத்தில் தம் நிலைமாறிப் பெண்ணிலை பெற்றுப் பேசுமிடத்தில் தோழி நிலையையும், தாய் நிலையையும், தலைமகள் நிலையையும் அடைந்து பாசுரங்கள் பாடியுள்ளார்.

ஆழ்வாருடைய இந்த மூன்று நிலைகளை நாயனார் திருமந்திரத்தினுடைய மூன்று பதத்திற்கும் ஒப்பிட்டுக் காட்டுகிறார். பிரணவத்தில் கூறப்பட்டுள்ள சம்பந்த ஜ்ஞானமாகிற நிலையே தோழி நிலை என்று கூறுகிறார். தோழியானவள் தலைவன் தலைவியை இணைக்கிச் சேர்க்குமவள். திருமந்திரத்தில் முதற்பதமான ஓம் என்னும் பிரணவத்தால் எம்பெருமானோடு, ஆன்மாவுக்குச் சொல்லப் பட்ட 'அவன் ஒருவனுக்கே அடிமை' என்பது முதலான சம்பந்த ஜ்ஞானமே அவ்வெம்பெருமானோடு இந்த ஆன்மா சேருவதற்குக் காரணமாகையாலே அந்த சம்பந்த ஜ்ஞான மாகிற நிலையைத் தோழியாகக் கூறுகிறார்.

இவ்வாறு தோழி நிலையில் ஆழ்வார் திருவாய்மொழியில் மூன்று திருவாய்மொழிகள் அருளியுள்ளார். அவையாவன தீர்ப்பாரையாமினி[3], துவளில்மாமணிமாடம்[4], கருமாணிக்கமலை[5] ஆகியவைகளாகும்.

தாயானவள் பெற்று வளர்த்துப் பெண்பிள்ளை யௌவன பருவத்தில் தலைவனிடத்தில் அன்பு மிகுதியால் அவனிருப்பிடத்திற்குச் செல்லுமளவில், தானே படி கடந்து செல்வது குல மரியாதைக்குத் தகாது என்று சொல்லி விலக்குபவள் ஆவாள். எம்பெருமானையே உபாயமாகப் பற்றினவர்கள், பேற்றை விரைவில் பெறவேண்டி படி கடந்து நடக்கும் பொழுது இது பிரபந்ந குல

1. மேலது 6-3-1
2. திருவாய்மொழி 6-9-1
3. மேலது 4-6
4. மேலது 6-5
5. மேலது 8-9

மரியாதைக்குச் சேராது என்று விலக்கி, எம்பெருமான் தானே வந்து அங்கீகரிக்க வேண்டும் என்று சொல்லித் துடிப்பை அடக்கப் பார்க்கிற நம: பதத்தில் கூறப்பட்ட உபாயத்தில் உறுதி என்கிற நிலையைத் தாய் எனக் கூறுகிறார்.

தாய்ப் பாசுரமாக அமைந்த பதிகங்கள் "ஆடியாடி"[1], "பாலனாய்"[2], மண்ணையிருந்துழாவி"[3], "கடல் ஞாலம்"[4], "மாலுக்கு"[5], "உண்ணுஞ்சோறு"[6], "கங்குலும் பகலும்"[7] ஆகிய ஏழு திருவாய்மொழிகளாகும்.

பலத்தில் பதற்றமாகிற பிரஜ்ஞா அவஸ்த்தைக்கு (நிலைக்கு) மகள் என்று பெயர். தலைவனை இயற்கையில் புணர்ந்து, தலைவனுடைய மேம்பாட்டிலே ஈடுபட்டுக் குலமரியாதைகளையும் பாராதே தலைவனை அடைந்தால் அல்லது தரியேன் என்னும் பதற்றத்தை உடையவள் ஆகையாலே திருமந்திரத்தில் பிரணவத்தாலும், நமஸ்ஸாலும் அறுதியிடப்பட்ட சேஷியாய், எல்லோர்க்கும் புகலிடமானவனுக்கு, திருமந்திரத்தின் முடிவிலே உள்ள நாராயண பதத்தாலே சொல்லப்பட்ட சொரூப ரூப குணங்களால் வந்த பெருமையை நினைத்து, 'அவனே உபாயம்' என்ற உறுதியையும் மீறி அவனைக் கிட்டியல்லது தரித்திருக்க முடியாதபடி இருக்கின்ற, பலத்திலே பதற்றமாகிற நிலையை மகள்நிலை என்று நாயனார் கூறுகிறார்.

தலைவி நிலையில் பேசும் பேச்சுக்களாக அமைந்தவை பதினேழு திருவாய்மொழிகள் ஆகும். அஞ்சிறைய மடநாரை,[1] வைகல் பூங்கழிவாய்,[2] பொன்னுலகாளீரோ,[3] எங்கானலகங் கழிவாய்,[4] வாயுந்திரையுகளும்,[5] ஏறாளும் இறையோனும்,[6] மாசறுசோதி,[7] ஊரெல்லாந்துஞ்சி,[8] எங்ஙனேயோ,[9] மானேய் நோக்கு,[10] மின்னிடைமடவார்,[11] வெள்ளைச் சுரிசங்கு,[12] ஏழையராவி,[13] நங்கள்வரிவளை,[14] இன்னுயர்ச்சேவல்,[15] மல்லிகைகமழ்,[16] வேய்மருதோளிணை[17] ஆகியவைகளாகும்.

## ஆழ்வார் தூது விடுகின்ற பறவைகளுக்கு உள்ளுறைபொருள்

பெண்ணிலை எய்துகின்ற ஆழ்வார் எம்பெருமானிடத்தில், அவனைப் பிரிந்து தாம் படுகின்ற துயரை அவனுக்குத் தெரிவிக்கும்படி பறவைகளைத்

1 திருவாய்மொழி 2-4    2. மேலது 4-2    3. மேலது 4-4    4. மேலது 5-6
5. மேலது 6-6    6. மேலது 6-7    7. மேலது 7-2    8. மேலது 1-4
9. மேலது 6-1    10. மேலது 6-8    11. மேலது 9-7    12. மேலது 2-1
13. மேலது 4-8    14. மேலது 5-3    15. மேலது 5-4    16. மேலது 5-5
17. மேலது 5-9    18. மேலது 6-2    19. மேலது 7-3    20. மேலது 7-7
21. மேலது 8-2    22. மேலது 9-5    23. மேலது 9-9    24. மேலது 10-2

தூது விடுகின்றார். இராமபிரான் அனுமனைத் தூதுவிட்டபடியால் குரக்கினம் பெருமை அடைந்தது போல ஆழ்வார் பறவைகளைத் தூதனுப்பியதால் பறவை இனங்கள் பெருமை பெற்றன என்று பராசரபட்டர் அருளிச் செய்வராம். எம்பெருமானிடத்தில் நம்மைக் கொண்டு சேர்க்கின்றவர்கள் (ஆசாரியர்கள்), பறவைகளாகக் கொள்ளப் படுவார்கள் என்று நாயனார் உள்ளுறை பொருள் உரைக்கின்றார். எம்பெருமானை விரைவில் அடைவதற்கு உறுப்பான அவர்களுடைய ஞானத்தையும், ஒழுக்கத்தையும் சிறகுகளாகக் கூறுகின்றார். இவ்வாறு தூது விடுவதாக வருமிடங்களில் அந்தந்த இடங்களுக்குத் தக்கவாறு ஆசாரியர்களையோ, ஒருசாலைமாணாக்கர்களையோ, புத்திரர்களையோ, மாணாக்கர்களையோ குறிப்பதாகக் கொள்ள வேண்டும்.

| அன்னம் | ஆசாரியர்கள் |
|---|---|
| 1. நீரையும் பாலையும் வெவ்வேறாகப் பிரிக்கும். | 1. சாரத்தையும், அசாரத்தையும் பிரிப்பார்கள். |
| 2. எம்பெருமான் அன்னத்தின் உருவமாய் இருந்து சாத்திரங் களைக் கொடுத்தான். | 2. இவர்களும் கேட்கின்ற சீடர்களுக்கு சாத்திரங்களை உபதேசிப்பர். |
| 3. அன்னம் சேற்று நீரில் பொருந்தாது. | 3. இவர்களும் இவ்வுலக வாழ்க்கை யாகிற சேற்றில் பொருந்தார்கள். |
| 4. அன்னமானது பெண்களின் நடையழகைக் கண்டு அவ்வாறே தானும் பின்பற்றும். | 4. (அன்னத்தின் நடையையுடைய) பிராட்டியின் அநந்யார்ஹ சேஷத்வாதிகள், புருஷகாரத்வம் ஆகிய நடையை மேற்கொள்ளுவர். |

| வண்டு | ஆசாரியர்கள் |
|---|---|
| 1. வண்டு தேன்தவிர மற்றொன்றை உணவாகக் கொள்ளாது. | 1. எம்பெருமானாகிற தேனை அநுபவிப்பதையே விரதமாகக் கொண்டவர்கள். |
| 2. வண்டுகள் தம்மோடே சேர்கின்ற வற்றையும் தம்மினத்தோடே சேர்விக்கும். | 2. இவர்களும் "தூவியம் புள்ளுடைத் தெய்வ வண்டு" ஆகிய எம்பெருமானோடு சேர்விப்பவர்கள். |

| கிளி, பூவை | ஆசாரியர்கள் |
|---|---|
| 1. கிளி வலையில் அகப்படும். | 1. எம்பெருமானது திருக்கண்ணோக்க வலையில் அகப்படுபவர்கள். |
| 2. கிளி தன்னை வளர்ப்பவர்களுக்கு வசப்பட்டிருக்கும். | 2. இவர்கள் தங்களுக்கு ஞானமூட்டி வளர்க்கின்ற ஆசாரியர்களுக்கு வசப்பட்டிருப்பவர்கள்.. |
| 3. ''தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசிலும் தந்து'' என்கிறபடியே பெண்கள் உண்பிக்கக் கிளி உண்ணும். | 3. இவர்களும் எம்பெருமானுடைய கல்யாண குணங்களை ஆசாரியன் அனுபவிப்பிக்க அனுபவிப்பவர்கள். |
| 4. கிளி கற்பித்ததையே சொல்லும். | 4. இவர்களும் முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு அதையே பின்பற்றிப் பேசுபவர்கள். |
| 5. தலைவனோடு சேர்க்க வேண்டும் என்று கூறித் தலைவி ஆதரித்த நிலையிலும், எம்பெருமானைப் பிரிந்த நிலையில், தலைவி வெறுத்துக் கூறிய நிலையிலும் உகந்திருக்கும். | 5. ஆசாரியன் ஆதரித்த போதும் வெறுத்துரைத்த போதும் எல்லாம் நமக்கு நன்மையே என்று உகந்து இருப்பவர்கள். |

| நாரை, கொக்கு, குருகு | ஆசாரியர்கள் |
|---|---|
| 1. குருகு உள்ளும் புறமும் வெண்மையாக இருக்கும். | 1. தூய்மை வாய்ந்த மன, மொழி, மெய்களையுடையவர்கள். |
| 2. நாரைகள் தங்களுக்கு உணவாகிற மீன்களைக் கவருவதற்காக அலைகள் வந்து மேலே விழுந்த போதும் கடற்கரையில் அசையாமல் இருக்கும். | 2. எம்பெருமான் பக்கலில் நெஞ்சை ஊன்ற வைத்து நிற்பதனால், இவ்வுலகத் துன்பங்கள் மேன்மேலும் வந்து தாக்கினாலும் அவற்றுக்கு வருந்தாதே இருக்குமவர்கள். |
| 3. கொக்கானது தன் வாயாலே எடுத்துக் கொடுக்க வாழ்ந்திருக்கும் தன் பிள்ளைக்கு, | 3. ஆசாரியர்கள், தங்கள் வாக்கால் உபதேசிப்பவற்றைப் பற்றி வாழும் சீடர்களுக்கு அவர்களுடைய |

| அதன் வாய்க்குள் அடங்கும் படியான இரையைத் தேடிக் கொடுக்கும். | அறிவிற்குத் தகுதியாக அர்த்த விசேஷங்களை ஆராய்ந்து கூறுவர். |
|---|---|
| **மேகம்** | **ஆசாரியர்கள்** |
| 1. மழை பெய்ய வேண்டிய காலங்களிலே கடலிலே புக்கு அதனுடைய நீரைப் பருகிக் கொண்டிருக்கும். | 1. எம்பெருமானுடைய கல்யாண குணங்களாகிய கடலில் புகுந்து அதை அனுபவித்துக் கொண்டு இருப்பர். |
| 2. மேகமானது எம்பெருமானது திருமேனியோடொத்த நிறத்தை உடைத்தாயிருக்கும். | 2. எம்பெருமானை நெஞ்சுக்குள் கொண்டிருப்பதால் அவனுடைய நிறத்தை ஒத்தவர்களாயிருப்பர். |
| 3. மேகமானது மழை பெய்து எல்லா உயிர்களையும் காக்கும் பொருட்டு ஆகாயம் முழுதும் திரியும். | 3. உலக மக்களுக்கு உய்யும் வகையைக் காட்ட எல்லா இடத்திலும் சஞ்சரிப்பர்கள். |
| 4. மேகமானது மழையைப் பொழிந்து தடாகத்தை நிறைக்கும். | 4. எம்பெருமானது குணங்களாகிற மழையினைப் பொழிந்து ஞான மாகிற மடுவை நிறைப்பர்கள். |
| 5. மேகமானது தனக்காக அன்றி பிறர் நலத்தைக் கண்டு உகக்கவே காரியம் செய்யும். | 5. தங்களுக்காக அன்றி, சீடர்களுடைய நலத்தையே கண்டு உகந்து காரியம் செய்வர். |

## ஆழ்வார் விடும் தூது

நம்மாழ்வார் எம்பெருமானது பிரிவாற்றாமையால், தாமான தன்மையழிந்து ஒரு பிராட்டி நிலையை அடைந்து, எம்பெருமானை அடைவதற்காகப் பறவை முதலானவைகளைத் தூது விடுகிறார். இவ்வாறு தூது விடுவதாகத் திருவாய்மொழியில் அமைந்த பதிகங்கள் நான்கு ஆகும். அவை: 1. அஞ்சிறைய மடநாரை[1], 2. வைகல்பூங்கழிவாய்[2], 3. பொன்னுலகு ஆளீரோ[3], 4. எங்கானலகங்கழிவாய்[4] என்பனவாகும். இவை எம்பெருமானுடைய பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை முதலிய ஐந்து நிலைகளிலும் உள்ள எம்பெருமானை நோக்கி விடப்பட்ட தூதாக நாயனார் அத்திருவாய்மொழிப் பாசுரங்களைக் கொண்டே காட்டுகிறார். ஒவ்வொரு

1. திருவாய்மொழி 1-4 2. மேலது 6-1 3. மேலது 6-8 4. மேலது 9-7

பதிகத்திலும் எம்பெருமானுடைய ஒவ்வொரு திருக்குணத்தைப் பற்றாசாகக் கொண்டு ஆழ்வார் தூது விடுவதாகவும் எடுத்துக் காட்டியுள்ளார்.

இப்படிப் பல இடங்களிலும் ஆழ்வார் தூது விட்டாலும், அடைய விரும்புவன் ஒருவனே என்று விளக்குவதற்காக, எம்பெருமானுடைய பர, வியூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளை ஓர் அரசனுடைய ஐந்து நிலைகளுடன் ஒப்பிட்டு, ஒரே அரசன் ஐந்து நிலைகளில் அமர்வதுபோலவே எம்பெருமானுடைய ஐந்து நிலைகளும் என்று நாயனார் விளக்குகின்றார். "பொங்கோதம் சூழந்த புவனியும் விண்ணுலகும் அங்காதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்"[1] என்றபடி, எம்பெருமானை அரசனாகக் கொள்ளல் தகும் என்றும் அவ்வரசனுடைய பல்வேறு நிலைகள் எம்பெருமானுக்கும் உண்டு என்றும் நாயனார் அழகாக எடுத்து உரைக்கின்றார்.

| அரசன் | எம்பெருமான் |
|---|---|
| 1. பகற்பொழுதில் மந்திரிமார்களோடு தன்வீறு தோற்ற ஓலக்கம் இருத்தல். | 1. ஒரு பகலான பரமபதத்திலே தேவிமார்களோடும் நித்ய முக்தர் களுடனும் ஓலக்கம் இருத்தல். |
| 2. ராச்சியத்தில் உள்ளாருடைய குணங்களையும், குற்றங்களையும் அறிகைக்காக இரவிலே பிறர் அறியாதபடி மாறு வேடம் பூண்டு நகர சோதனம் செய்கை. | 2. தான் பரந்து உறைகின்ற பொருள்களுக்குத் தெரியாதபடி அந்தர்யாமியாய் இருந்து "உள்ளுவார் உள்ளிற்றெல்லாம்"[1] அறிகை. |
| 3. இராச்சியத்தில் நல்லோரை நலம் புரிந்து காத்தற் பொருட்டுச் செய்யும் காரியத்தை ஆராய்தல். | 3. பாற்கடல் யோகநித்திரை செய்து ஆன்மாக்களைக் காப்பாற்றும் வழியை சிந்தித்தல். |
| 4. காட்டிற்குச் சென்று கொடிய மிருகங்களைக் கொல்லுவதற்காக வேட்டையாடுதல். | 4. அடியவர்களைக் காப்பதற்காக அவதரித்து, அவர்களுக்கு விரோதிகளைக் கொல்லுதல். |
| 5. வேட்டையாடிய களைப்பு நீங்க, பூந்தோட்டங்களிலே தன் பட்டத்துத் தேவிமார்களோடு விளையாடி இன்புறுகை. | 5. விரோதிகளைக் கொன்ற களைப்பு நீங்க கோயில் திருமலை முதலான திவ்ய தேசங்களிலே வாசம் செய்து இன்புறுகை. |

1. நாச்சியார் திருமொழி 11-3

## நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்தருளியுள்ள திவ்ய தேசங்களில் விளங்கும் எம்பெருமான்களின் திருக்கல்யாண குணங்கள்

குருகைக்கு அதிபனாகிய நம்மாழ்வார் உரைத்த உணர்பாவாகிய திருவாய்மொழியின் உட்பொருளை, ஒன்றும் அறியாத இவ்வுலகத்தவர் அறியும் வண்ணம் எடுத்துரைக்க வந்த அழகியமணவாளப்பெருமாள் நாயனார் ஆசார்ய ஹ்ருதயத்தில் மூன்றாவது பிரகரணத்தில் திருவாய்மொழியில் நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்தருளின திருப்பதிகளில் விளங்கும் எம்பெருமானுடைய திருக்குணங்களை ஆழ்வார் அநுபவித்தபடியே அந்தந்தப் பாசுரங்களைக் கொண்டே அற்புதமாக அருளிச் செய்துள்ளார். பரத்வம் முதலிய நிலைகளில் ஒவ்வொரு நிலைக்கே உரியதாயும் ஐவகை நிலைகளுக்கும் பொதுவானதாயும் உள்ள குணங்களில் ஒவ்வொரு குணம் ஒவ்வொரு திருப்பதியில் முதன்மையாக விளங்கும்படியைப் பல சூர்ணிகைகளில் அருளிச் செய்துள்ளார். 'தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே தமருகந்தது எப்பேர் மற்றப்பேர்'[1] என்று அடியாருகந்த திருமேனியாகவும், அவர்கள் உகந்த திருநாமங்களே தனக்குத் திருநாமமாகவும் கொண்டு பர, வ்யூஹ, விபவம் போல் அணுகுவதற்கு அரியனாக இல்லாமல், "பின்னானார் வணங்குஞ்சோதி"[2]யாக உள்ள அர்ச்சாவதாரத்திலே எல்லாக் குணங்களும் பரிபூர்ணமாக விளங்கும். இருப்பினும் மாறன் மனமுரைக்க வந்த நாயனார் ஒவ்வொரு குணம் ஒவ்வொரு திருப்பதியில் பிரகாசிக்கும் விதத்தை ஆழ்வார் அனுபவித்தபடியே எடுத்துக் காட்டுகிறார்.

எல்லாத் திவ்யதேசங்களிலும் முதன்மை பெற்றதான திருவரங்கம் பெரிய கோயிலிலே விளங்கும் குணத்தை முதலில் அருளிச் செய்கிறார்.

1. **"வன்பெரு வானகமுதலுய்ய இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி - வடிவுடைக் கடலிடம் கட்கிலீயென்னுமவற்றில் இவள் திறந்து என்பிக்கிற வ்யூஹ ஸௌஹார்த்த ப்ரதாநம்."**

திருவரங்கத் திருப்பதியில் எம்பெருமானின் ஐந்து நிலைகளில் ஒன்றான வ்யூஹத்தின் குணமான ஸௌஹார்த்தம் (எப்பொழுதும் உயிர்களின் நன்மையையே சிந்தித்துக் கொண்டிருத்தல்) என்னும் குணம் பிரதானமாக

1 திருப்பாவை ஆறாயிரப்படி ப. 417

விளங்குகிறது. திருப்பாற்கடலில் எம்பெருமான் ஜகத்ரக்ஷண சிந்தை செய்து கொண்டு யோக நித்திரை பண்ணுவதாக சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது. திருவரங்கத்து எம்பெருமானும் அவ்வாறே சிந்தனை செய்து கொண்டு "உறங்குவான் போல் யோகு செய்"[1]வதாக "திருவரங்கத்தாய் இவள் திறத்து என் சிந்தித்தாயே"[2] "திருவரங்கத்தாய் என் கொலோ முடிகின்றதிவட்கே"[3] என்றுள்ள பாசுரங்களின் மூலம் தெரிய வருகிறது. இத்திருப்பதி விஷயமாக நம்மாழ்வார் பாடியுள்ள "கங்குலும் பகலும்" என்கிற பதிகத்தில் "வடிவுடைவானோர் தலைவனே"[4] என்றும், "கடலிடங்கொண்ட கடல்வண்ணா"[5] என்றும் "காகுத்தா கண்ணனே"[7] என்றும், "கட்கிலீ உன்னைக் காணுமாறருளாய்"[8] என்றுமுள்ள சொற்களின் மூலம் நம்மாழ்வார் திருவரங்கத்தெம்பெருமானை அர்ச்சாவதார நிலையில் மட்டும் அல்லாமல் பரவ்யூஹ, விபவ, அந்தர்யாமி நிலைகளிலும் அனுபவித்திருப்பது விளங்கும். இதில் வியூஹத்தின் குணமான ஸௌஹார்த்தமே இங்கு ஆழ்வாருக்கு அனுபவமாக ஆகிறது. இத்திருவரங்கத்தைப் பற்றிக் கூறும் பொழுதும் ஆழ்வார் பாசுரங்களிலிருந்தே சொற்களை எடுக்கிறார் நாயனார். "வன்பெருவானகமுய்ய அமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய"[9] என்கிற பாசுரத்தில் சொல்லுகிறபடியே முதலில் பிரம்மலோகத்தில் எழுந்தருளிப் பின்பு பூலோகத்தில் எழுந்தருளின நிலையில், பிரம்மலோகம் முதலாக உண்டான மேலுலகங்களும் அங்குள்ள பிரமன் முதலானாரும், பூமியும் பூமியிலுள்ள மனிதர்களும் உய்யும்படியாக எம்பெருமான் திருவரங்கத்தில் இனிதாகத் திருக்கண் உணர்ந்தருளுகிறான். "திருவாளன் இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கம்"[10], "திருவாளன் திருப்பதி"[11] என்ற இரண்டு பதங்களையும் சேர்த்து "இனிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவாளன் திருப்பதி" என்றருளிச் செய்துள்ளார்.

2. அடுத்து, அர்ச்சாவதாரத்திற்குப் பொற்கால் பொலியவிட்ட இடமான திருமலையில் பிரகாசிக்கும் குணம் சொல்லப்படுகிறது.

2. **"மண்ணோர் விண்ணோர் வைப்பில், போகின்ற ஏழுலக்குக்கு உயிர் பாசம் வைத்த நிகரில் வாத்ஸல்யம் உஜ்வலம்."**

திருமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடம் பிரகாசிக்கும் குணம் வாத்ஸல்யம், "கண்ணாவான் என்னும் மண்ணோர் விண்ணோர்க்கு"[12],

1 முதல் திருவந்தாதி -44 | 2 திருநெடுந்தாண்டகம் - 10 | 3. திருவாய்மொழி 5-4-11
4. திருவாய்மொழி 7-2-4 | 5. திருவாய்மொழி 7-2-2 | 6. திருவாய்மொழி 7-2-10
7. திருவாய்மொழி 7-2-7 | 8. திருவாய்மொழி 7-2-3 | 9. திருவாய்மொழி 7-2-3
10 பெருமாள் திரு. 1-10 | 11 பெரியாழ். திரு. 4-9-10 | 12 திருவாய்மொழி 1-8-3

"தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு"[1] என்றுமுள்ள பாசுரங்களில் சொல்லியுள்ளபடி உபயவிபூதியில் உள்ளவர்களுக்கும் சேமித்து வைத்த நிதிபோல உள்ள திருமலையிலே வாத்சல்யம் விளங்கும். அதைத் தெரிவிப்பன இத்திருப்பதி விஷயமான "ஒழிவில் காலமெல்லாம்"[2], "உலகமுண்டபெருவாயா"[3] என்கிற இரண்டு பதிகங்களிலுள்ள பாசுரங்களான, "போகின்ற காலங்கள், போகு காலங்கள் தாய் தந்தை உயிர் ஆகின்றாய்"[4] என்றும் "கண்ணாய் ஏழுலக்குயிராய எங்கார் வண்ணனை"[5] என்றும், "என் கண் பாசம் வைத்த பரஞ்சுடர்சோதி"[6] என்றும் "நிகரில் புகழாய்"[7] என்றும் உள்ளவைகளாகும். பரஞ்சுடர்ச்சோதி என்பதைக் கொண்டு 'உஜ்வலம்' எனப்பட்டது.

3. "உபய ப்ரதாந ப்ரணவமான உறைகோயிலில் எத்தேவும் என்கிற பரேசத்வம் பொலியும்."

திருக்குருகூரில் பிரகாசிக்கும் குணம் 'பரேசத்வம்' என்கிறார். உபய ப்ரதாந பிரணவம் என்றதாவது ஜீவனுடையவும், எம்பெருமானுடையவும் முக்கியத்துவத்தைத் தெரிவிக்கும் பிரணவம் போலே, ஆழ்வாருடையவும், பொலிந்து நின்ற பிரானுடையவும் பெருமை தோன்ற இருக்கும் திருக்குருகூர். இத்திருப்பதி விஷயமான "ஒன்றும் தேவும்" என்கிற பதிகத்தில், "ஆதிப்பிரானவன் மேவியுறை கோவில்"[8] என்று வருவதால் திருக்குருகூர் என்னாமல் "உறைகோயில்" என்றார். "உறுவதாவதெத்தேவும்"[9] என்கிற பாசுரத்தில் சொல்லப்பட்ட பரத்வ லக்ஷணமான ஈச்வரத்வம் இத்திருப்பதியில் விளங்கும். "திருக்குருகூரதனுள் ஈசன்"[10], "திருக்குருகூரதனுள் பரன்"[11] என்றுள்ள பாசுரங்களைச் சேர்த்து பரேசத்வம் என்றார். "பொலிந்துநின்ற பிரான்"[12] என்ற திருநாமத்தை ஒட்டி "பொலியும்" என்றார்.

4. "வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீலமேனியின் ருசிஜநகவிபவ லாவண்யம் பூர்ணம்."

திருக்குறுங்குடியில் விளங்கும் குணம் லாவண்யம் (அழகு). இந்த எம்பெருமான் எம்பெருமானாரிடத்தில் சிஷ்யனாய் இருந்து வைஷ்ணவ நம்பி என்று பெயர் பெற்றதாலும், வாமநசேக்ஷத்திரம் என்று புராணப் பிரசித்தமாக இருக்கையாலும், திருக்குறுங்குடி வைஷ்ணவ வாமந க்ஷேத்திரம் என

1 நான்முகன் திருவந். -45
2. திருவாய்மொழி 3-3
3. திருவாய்மொழி 6-10
4. திருவாய்மொழி - 2-6-10
5. பெரியதிருமொழி 1-9-10
6. திருவாய்மொழி 3-3-4
7. திருவாய்மொழி -6-10-10
8. திருவாய்மொழி 4-10-2
9. திருவாய்மொழி 4-10-10
10. திருவாய்மொழி 4-10-4
11. திருவாய்மொழி 4-10-3
12. திருவாய்மொழி 4-10-5

வழங்கப்பட்டது. மேலும் "அறியக் கற்று வல்லார் வைட்டணவர் ஆழ்கடல் ஞாலத்துள்ளே"[1] என்று இத்திவ்ய தேசவிஷயமான திருவாய்மொழியைக் கற்றவர்கள் வைஷ்ணவர் என்கையாலே, வைஷ்ணவர்களுடையதாய் வாமந க்ஷேத்திரமாய் இருக்கிற தேசம் என்றும் கூறலாம். "நிறைந்த சோதி வெள்ளம் சூழ்ந்த நீண்ட பொன்மேனியோடும் நிறைந்தென்னுள்ளே நின்றொழிந்தான்"[2] என்றும் "நீலமேனியும் நான்கு தோளும் என்னெஞ்சம் நிறைந்தனவே"[3] என்றும் உள்ள பாசுரங்களின்படி ஆழ்வாருடைய திருவுள்ளத்தில் வேறொன்றும் தோன்றாதபடி இடம் பெற்று விளங்குவது காளமேகம் போன்ற நிறமுடைய எம்பெருமானுடைய அழகு. இது ஆழ்வார்க்கு மேன்மேலும் அநுபவ ருசியை விளக்கும்படியான அவதாரத்தில் பிரகாசிக்கின்ற சமுதாய சோபையான அழகு ஆகும். "நிறைந்த சோதி வெள்ளம் சூழ்ந்த"[4] என்பதைக் கொண்டு பூர்ணம் என்றார்.

5. "ருசி விவசர்க்குப் பாதமே சரணாக்கும் ஔதார்யம் வானமாமலையிலே கொழுந்துவிடும்."

சிரீவரமங்கை எனப்படும் வானமாமலையிலே விளங்குவது ஔதார்யம். எம்பெருமானுடைய லாவண்ய குணத்திலே ஈடுபட்டு அதில் பிறந்த ருசியில் (ஆசையால்) பரவசராய், வேறுகதியின்றி அவனையே பற்றினவர்களுக்கு, "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்"[5] என்னும்படி திருவடிகளையே உபாயமாகக் கொடுக்கும் ஔதார்ய குணம் வானமாமலை என்றும் திவ்யதேசத்து எம்பெருமானிடம் காணப்படும். "கார்முகில் வண்ணன்"[6] என்பதனால் ஔதார்யம் "சிரீவரமங்கலத்தவர் கைதொழ உறை வானமாமலையே"[7] என்பதனால் சிரீவரமங்கையில் எழுந்தருளியுள்ள வானமாமலை பக்கலில் கொழுந்துவிடும். "வந்தருளி என்னெஞ்கிடங் கொண்ட வானவர் கொழுந்தே"[8] என்கிறபடி தானே இடம் கொண்டு தன்னைக் கொடுக்கும்படி கொழுந்து விட்டு வளரும் என்கிறார்.

6. "களைகண் அற்றாரை உருக்கும் மாதுர்யம் குடமூக்கிலே பிரவஹிக்கும்."

திருக்குடந்தையில் விளங்கும் குணம் மாதுர்யம் (இனிமை). "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்"[9] என்கிறபடி வேறு புகல் இன்றி எம்பெருமானையே ரக்ஷகனாக நினைத்து இருப்பாரை "நீராயலைந்து

1 திருவாய்மொழி 5-5-11 2. மேலது 5-5-7 3. மேலது 5-5-6 4. மேலது 5-5-7
5. மேலது 5-7-10 5. மேலது 5-7-3 7. மேலது 5-7-6 8. மேலது 5-7-7
9. மேலது 5-8-8

கரைய உருக்குகின்ற நெடுமாலே"[1] என்று சொல்லுகிறபடி உருக்குலையச் செய்வது ஆராவமுதான மாதுர்யம் என்கிறார். "குடமூக்கில் கோயிலாக் கொண்டு"[2] என்கிற பாசுரத்தின்படி "குடமூக்கு" என்கிறார். குடமூக்கு – திருக்குடந்தை. ஆராவமுதன் என்பது அங்குள்ள எம்பெருமானின் திருநாமமாகையால் அதற்குச் சேர மாதுர்யம் என்கிறார். ஆராவமுது என்பதற்கிணங்க பிரவஹிக்கும் என்கிறார்.

7. "மெலிவிலும் சேமம் கொள்விக்கும் கிருபை தென்னகரிலே நித்யம்."

திருவல்லவாழில் விளங்கும் குணம் கிருபை. எல்லை இல்லாத இனிமையையுடைய ஆராவமுதைக் கிட்டி அநுபவிக்கப் பெறாமையாலே, "வினையேன்மெலிய"[3] என்று நாடோறும் மெலியும் பொழுதும், "அடிமேல் சேமங்கொள் தென் குருகூர்ச் சடகோபன்"[4] என்று அவனே ரக்ஷகன் என்று இருக்கும்படி செய்கின்ற "சுழலில் மலி சக்கரப் பெருமானது தொல்லருளே"[5] என்கிற கிருபை திருவல்லவாழிலே நித்தியமாயிருக்கும். "திருவல்லவாழ் சேமங்கொள் தென்னகர் மேல்"[6] என்ற பாசுரத்தை அடியொற்றித் "தென்னகரிலே" என்றும் "சுழலில் மலி சக்கரப் பெருமானது தொல்லருளே"[7] என்றவிடத்தில் கூறப்பட்டுள்ள 'தொன்மை' என்பது என்றும் உள்ள தன்மையைக் காட்டுவதால் 'நித்யம்' என்றும் கூறப்பட்டுள்ளது.

8. வ்யவஸாயஜ்ஞர் ரக்ஷண ஸ்தைர்யம் பம்போத்தர தேசஸ்தம்."

திருவண் வண்டூரில் பிரகாசிக்கும் குணம் உறுதி. "ராமஸ்ய வ்யவ ஸாயஜ்ஞா"[8] என்று சொல்லப்பட்ட பிராட்டியைப் போல" ஏறு சேவகனார்க்கு என்னையும் உளன் என்மின்களே"[9] என்று ஆர்த்தர்களை ரக்ஷிட்டதில் தன்னுடைய உறுதியான எண்ணத்தை உள்ளபடி அறிந்திருப்பவர்களைக் காப்பாற்றுவதில் உறுதி. "மித்ர பாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் சதஞ்சந"[10] (வெறுப்பு இல்லாதவனால் என்னை வந்து அடைந்த இவனைவிட மாட்டேன்) என்றும் "ஏதத்வரதம் மம"[11] (காப்பாற்றுதல் எனக்கு விரதம்) என்றும் சொல்லப்பட்டுள்ளபடி வேண்டியவர்களாலும் அசைக்க வொண்ணாதபடி யிருக்கும் அவனுடைய ஸ்தைர்ய குணம் (உறுதி) "தேறு நீர்ப்பம்பை வடபாலைத் திருவண்வண்டூர்"[12] என்கிறபடியே பம்பையாகிற ஆற்றுக்கு வடகரையான

1. திருவாய்மொழி 5-8-1
2. இரண்டாந்திரு. 97.
3. திருவாய்மொழி - 5-9-1
4. திருவாய்மொழி 5-9-11
5. திருவாய்மொழி 5-9-9.
6. திருவாய்மொழி-5-9-11
7. திருவாய்மொழி - 5-9-9.
8. ஸ்ரீராமா. சுந். 16-4
9. திருவாய்மொழி - 6-1-10
10. ஸ்ரீராமாயணம் யுத். 18.3
11. ஸ்ரீராமாயணம் யுத். 18.33.
12. திருவாய்மொழி - 6-1-10

திருவண்வண்டூரிலே நிலை பெற்றிருக்கும். "புணர்த்த பூந்தண் துழாய்முடி நம்பெருமானைக் கண்டு"[1] என்ற பாசுரத்தை அடியொற்றி "ரக்ஷண ஸ்தைர்யம்" என்றார். அடியார்களைக் காப்பதற்கென்றே தனிமாலை இட்டிருப்பவன் என்பது பொருள்.

9. "விளம்ப விரோதம் அழிக்கும் விருத்தகடநா ஸாமர்த்யம், நன்னகரிலே விஸ்தீர்ணம்"

திருவிண்ணகரிலே விளங்கும் குணம் விருத்தகடநா சாமர்த்தியம் (சேராதனவைகளைச் சேர்க்கும் ஆற்றல்). முறையிலே பெறுகிறோம் என்று நினையாமல் எம்பெருமானை விரைவில் கிட்டி அநுபவிக்க வேண்டும் என்று பதறுகிற பதற்றத்தின் காரணமாய் "வைகல் பூங்கழிவாய்" என்ற பதிகத்திலே பறவைகளைத் தூது விடுகிறார் ஆழ்வார். அப்பொழுதும் விரைவில் வந்து முகம் காட்டாமல் தாமதித்து வருகையாலே அடுத்த பதிகமான 'மின்னிடை மடவா'ரில் 'போகுநம்பீ'[2] என்றும் "கழகமேறேல் நம்பீ"[3] என்றும் கூறும்படி ஏற்பட்ட பிரணய கோபத்தால் பிறந்த விரோதத்தை "அழித்தாய் உன் திருவடியால்"[4] என்று அழிக்கும் விருத்தகடநா ஸாமர்த்தியம் "திருவிண்ணகர் நன்னகரே"[5] என்கிறபடி நன்னகராகிய திருவிண்ணகரிலே விளங்கும். எம்பெருமான் தன்னுடைய அகடிதகடநா ஸாமர்த்யத்தைக் காட்டியே பராங்குச நாயகியின் பிரணய ரோஷத்தைத் தவிர்த்தனனாகையால் அந்த பிரணய ரோஷத்தை அழிக்கும் விருத்தகடநா ஸாமர்த்தியம் திருவிண்ணகரிலே விளங்கும் என்கிறார். "பல்வகையும் பரந்த"[6] என்பதை அடியொற்றி 'விஸ்தீர்ணம்' என்கிறார்.

10. "கடிதகடக விகடநா பாந்தவம் அவ்வூரிலே த்விகுணம்"

துலைவில்லி மங்கலத்தில் விளங்கும் குணம் 'பாந்தவம்'. "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையாலும், தேவபிரானையே, தந்தை தாய் என்றடைந்த வண்குருகூர்ச் சடகோபன்"[7] என்ற பாசுரத்தின் படி எம்பெருமானே நமக்கு உண்மையான பந்து (உறவினன்). மற்றவர்கள் எல்லோரும் ஆபாஸ பந்துக்கள் (போலி உறவுகள்) என்பது காட்டப்பட்டது. ஆதலால் இத்திவ்யதேசத்தில் இறைவனுடைய பாந்தவகுணம் விளங்குகின்றது என்கிறார். அது எப்படி என்றால், பராங்குச நாயகியான நம்மாழ்வாரை எம்பெருமானோடு சேர்த்து வைத்த கடகர்களாகிற தோழிமார்களுக்கும், ஆழ்வாருக்கும் பரஸ்பரம் பெரருந்தாமையை

1 மேலது 6-1-5 2. மேலது 6-2-2 3. மேலது 6-2-6 4. மேலது 6-2-9
5. மேலது 6-3-2. 6. மேலது 5-3-1 7. மேலது 6-5-11

விளைத்திட்டது அந்த எம்பெருமானுடைய உறவு. "தொலைவில்லி மங்கலம் தொழும் இவளை உமக்காசையில்லை விடுமினோ"[1] என்ற பாசுரத்தினால் கடகரான (சேர்ப்பவர்கள்) தோழிகளுக்கும், கடிதரான (சேர்க்கப்படுகிறவர்கள்) ஆழ்வாருக்கும் பொருந்தாமை விளங்கும். இதை விளைத்தது அந்தப் பகவானுடைய உறவு. "அவ்வூர்த் திருநாமம் கேட்பது சிந்தையே"[2] என்றுள்ளதால் 'அவ்வூர்' என்றார். இத்தலம் இரட்டைத் திருப்பதி என்று வழங்கப் பெறுவதால் த்வி (இரட்டை) குணம் என்கிறார்.

11. "கைம்முதல் இழந்தார் உண்ணும் நிதியின் ஆபத்ஸகத்வம், புகும் ஊரிலே ஸம்ருத்தம்"

திருக்கோளூரில் விளங்கும் குணம் ஆபத்ஸகத்வம். "மாலுக்கு" என்கிற பதிகத்திலே "ஏலக்குழலி இழந்தது சங்கே"[3] என்று தொடங்கி, "கற்புடையாட்டி ஈழந்தது கட்டே"[4] என்று முடிக்கையாலே போலியான உபாய உபேயங்களான வளை, அழகியநிறம், பெருமை, நீர்மை, ஞானம், லாவண்யம், மாண்பு, அழகு, மரியாதை என்ற இவையெல்லாம் தன்னையே விட்டுக் கழிந்ததனால் கைம்முதல் அற்றவரான ஆழ்வாராலே உண்ணப்படுமதான நிதியாக திருக்கோளூர் எம்பெருமான் விளங்குகிறான். திருக்கோளூர் எம்பெருமானுக்கு வைத்தமாநிதிப் பெருமாள் என்பது திருப்பெயராதலாலும், நிதி ஆபத்திற்கு உதவும் தன்மையை உடையதாக இருப்பதாலும், முதல் திருப்பதிகத்தால் கைம்முதல் இழந்தமையைக் கூறி, அப்படிப்பட்ட ஆழ்வார் உண்ணும் நிதியாக எம்பெருமான் இருப்பதால் இந்த எம்பெருமானிடத்தில் விளங்குவது 'ஆபத் ஸகத்வம்' என்னும் குணம் ஆகும். இப்பதிகம் "உண்ணும் சோறு"[5] என்று தொடங்குவதால், "உண்ணும் நிதி" என்றும். "திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே"[6] என்றிருப்பதால் "புகுமூர்" என்றும் "செல்வம் மல்கி"[7] என்று இருப்பதால் 'ஸம்ருத்தம்' என்றருளிச் செய்துள்ளார்.

12. "சென்று சேர்வார்க்கு உசாத்துணை அறுக்கும் ஸௌந்தர்யம் மாநகரிலே கோஷிக்கும்."

தென் திருப்பேரையில் விளங்கும் குணம் ஸௌந்தர்யம். இத்திவ்யதேசத்தின் பதிகமான "வெள்ளைச் சுரிசங்கில்" உள்ள "செங்கனிவாயின் திறத்ததாயும், செஞ்சுடர் நீண்முடி தாழ்ந்ததாயும், சங்கொடு சக்கரம் கண்டுகந்தும் தாமரைக்கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்"[8] என்கிற பாசுரப் பகுதியைக் கொண்டு இத்திருப்பதியிலே விளங்கும் குணம்

1 திருவாய்மொழி - 6-5-1
2. மேலது 6-5-10
3. மேலது 6-6-1
4. மேலது 6-6-10
5. மேலது 6-7-1
6. மேலது 6-7-1.
7. மேலது 6-7-10
8. மேலது 7-3-3

'ஸௌந்தர்யம்' என்கிறார். அக்குணம் நெஞ்சை அபஹரிக்க வல்லது. "தென் திருப்பேரையில் சேர்வன் சென்றே"[1] என்கிற பாசுரத்தின்படி சென்று சேர்ந்தவர்கட்கு "உழந்தினியாரைக் கொண்டு என் உசாகோ"[2] என்கிறபடியே உசாத்துணையான நெஞ்சைக் கொள்ளை கொள்வது. "தென்திருப்பேரையில் மாநகரே"[3] என்ற பாசுரத்தைத் திருவுள்ளம் பற்றி "மாநகர்" என்றும் "எங்கும் எழுந்த நல்வேதத்தொலி நின்றோங்கு"[4] என்றிருப்பதைப் பற்றி 'கோஷிக்கும்' என்றும் கூறுகிறார்.

13. "ப்ரவண சித்தம் பரத்வவிமுகமாக்கும் ஆனந்தவ்ருத்தி நீணகரிலே".

திருவாறன் விளையில் விளங்கும் குணம் ஆனந்தப் பெருக்கம். அந்த ஆனந்தப் பெருக்கம் அந்தத் திருப்பதியிலே பிரவணரானாருடைய (அன்புடையவர்களுடைய) மனத்தினைப் பரத்வத்திலும் விமுககாம்படி (விரும்பாதபடி) செய்யும். இதை, "தீவினை உள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும் பேறலுற்றால் – திருவாறன் விளையதனை மேவி வலஞ் செய்து கை தொழக் கூடுங் கொலென்னும் என் சிந்தனையே"[5] என்கிறபடியே பரமபதமே கிட்டினாலும் என்னெஞ்சமானது திருவாறன் விளையாகிற அத்திருப்பதியை அடைந்து தொண்டுகளைச் செய்து கையாலே தொழுவதற்கு முடியுமோ என்று நிற்கும் என்கிற பாசுரம் மூலமாகவும், "சிந்தை மற்றொன்றின் திறத்ததல்லாம் தன்மை"[6] என்ற பாசுரத்தின் மூலமாகவும் அறியலாம். "மற்றொன்று" என்று பரமபதத்தின் பேர் சொல்லுகையும் பொறாதபடி பரத்வத்தில் விருப்பு இன்மையை உண்டாக்கும். இப்படிப் பட்ட ஆனந்த வளர்ச்சியானது "நீணகரமதுவே மலர்ச் சோலைகள் சூழ் திருவாறன் விளை"[7] என்று நீணகராகச் சொல்லப்பட்ட திருவாறன் விளையிலே விளங்கும் என்கிறார்.

14. "ஸாதரரைப் பரிசழிக்கும் சேஷ்டிதாச்சர்யம் குளத்தே கொடிவிடும்"

திருக்குளந்தையாவது பெருங்குளம் என்கிற திவ்யதேசம். இங்கு சேஷ்டிதாச்சரியம் (ஆச்சரியமான செயல்) என்னும் குணம் விளங்கும்.

"வைகல் பல்வளையார் முன் பரிசழிந்தேன், மாடக்கொடியின் தென்குளந்தை வண்குடபால் நின்ற மாயக் கூத்தன், ஆடற்பறவை உயர்த்த

---

1 திருவாய்மொழி 7-3-8 2 மேலது 7-3-4 3. மேலது 4-3-9 4. மேலது 7-3-4
5. மேலது 7-10-9 6. மேலது 7-10-10 7. மேலது 7-10-7

வெல்போர் ஆழிவலவனை ஆதரித்தே"[1] என்ற பாசுரத்தில், 'பரிசழிந்தேன்' என்கையாலே பெண்களுக்குரிய நாணம் முதலியவற்றை அழிக்கும் மாயக்கூத்தன் என்ற சேஷ்டிதாச்சரியம் இத்திருப்பதியில் விளங்கும் என்கிறார். "கொடிமதிள்" என்றிருப்பதனால் "கொடிவிடும்" எனப்பட்டது.

15. "ச்ரமமனம் சூழும் ஸௌகுமார்ய ப்ரகாசம் ஆய்ச்சேரியிலே"

திருவண்பரிசாரத்தில் விளங்கும் குணம் ஸௌகுமார்யம். இத்திருப்பதி விஷயமான பாசுரமான "வருவார் செல்வார்"[2] அமைந்துள்ள "அங்குமிங்கும்" என்கிற பதிகத்தில் "ஆளுமானார் ஆழியும் சங்கும் சுமப்பார் தாம்"[3] என்று – பூவேந்தினாற்போல் இருக்கும் திருவாழி திருச்சங்கை ஏந்துவதும் மலை சுமந்தாற்போல் வன்பாரமாகத் தோன்றுவதாக ஆழ்வார் அருளிச் செய்துள்ளார். எம்பெருமானுடைய சுகுமாரரான (மென்மையான) திருமேனியை நினைத்தே அப்படி அருளிச் செய்தாராதலால் இங்கு விளங்கும் குணம் ஸௌகுமார்யம் என்று நாயனார் திருவுள்ளம் பற்றுகிறார். "பணியா அமரர் பணிவும் பண்பும் தாமேயாம், அணியாராழியுஞ் சங்கமும் ஏந்துமவர் காண்மின், தணியா வெந்நோயுலகில் தவிர்ப்பான், திருநீலமணியார் மேனியோடு என் மனம் சூழ வருவாரே"[4] என்கிற பாசுரத்தின்படி நித்யசூரிகள் மிக்க அன்புடன் உபசரிக்கப் பரமபதத்திலே இருக்கிற எம்பெருமான் தன்னுடைய மென்மையான திருமேனியுடன், இவ்வுலக மக்களுடைய துன்பத்தைப் போக்குவதற்காக, தன் பெருமை அறியாத இந்த உலகத்தில் வந்து அவதரிக்கின்றானே என்று என் மனம் சுழற்சி அடைகின்றது என்று இப்பாசுரத்தில் கூறப்பட்டுள்ளதால் "மனம் சூழும் ஸௌகுமார்ய பிரகாசம்" எனப்பட்டது. "கொடியார் மாடக் கோளூரகத்தும், புளிங்குடியும், மடியாதின்னே நீதுயில்மேவி மகிழ்ந்தது தான், அடியார் அல்லல் தவிர்ந்த அசைவோ? அன்றேல் இப்படிதான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே"[5] என்ற பாசுரத்தில் "என்ன சிரமமோ" என்று ஆழ்வார் வினவுவதால் ஆழ்வாருடைய மனம் எம்பெருமானுடைய சிரமத்தை நினைத்தது. ஆய்ச்சேரி – ஆழ்வாருடைய திருத்தாயார் திருவவதரித்த திருவண்பரிசாரம்.

16. "மஹாமதிகள் அச்சம் கெட்டு அமரும் சௌர்யாதிகள் சிற்றாற்றிலே கொழிக்கும்."

திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு என்னும் திவ்யதேசத்தில் விளங்கும் குணம் சௌர்யவீர்ய பராக்ரமங்கள். இத்திருப்பதி விஷயமான

1 திருவாய்மொழி 8-2-4 2. மேலது 8-3-7 3. மேலது 8-3-3 4. மேலது 8-3-6
5. மேலது 8-3-5.

பதிகத்தில் முதற்பாசுரத்தில் "வார்கடாவருவி யானை மாமலையின் மருப்பிணைக் குவடிறுத்துருட்டி ஊர்கொள் திண் பாகனுயிர் செகுத்து அரங்கின் மல்லரைக் கொன்று சூழ்பரண்மேல், போர்கடா அரசர் புறத்திட மாடமீமிசைக் கஞ்சனைத் தகர்த்த"[1] என்று குவலயாபீடம், சாணூர முஷ்டிகர், கம்ஸன் முதலியவர்களை முடித்த வீரம் பேசப்படுகின்றது. அந்த வீரமானது மஹாமதிகளுடைய அச்சத்தைத் தொலைக்கும். மஹாமதிகள் என்றது விதுரர் ஆழ்வார் போல்வாரை. "வார்கடாவருவி" பதிகத்திற்கு முன் பதிகமான "அங்கும் இங்கும்" என்கிற திருவாய்மொழிக்கு அமைந்த திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரத்தில் "அங்கமரர் பேண அவர் நடுவே வாழ் திருமாற்கு இங்கோர் பரிவரில்லை என்றஞ்ச"[2] என்றிருப்பதால் ஆழ்வாருக்கு உண்டான பயம் தெளிந்தது. இப்பதிக விஷயமான நூற்றந்தாதி பாசுரத்தில் "வாராமல் அச்சம் இனிமால் தன் வலியினையும், சீரார் பரிவருடன் சேர்த்தியையும், பாருமெனத் தானுகந்த மாறன்"[3] என்றிருப்பதால் ஆழ்வாருடைய அச்சம் நீங்கியதும் புலப்பட்டது. எம்பெருமானுடைய சூர, வீர, பராக்ரமங்களை விளக்கிப் பேசிய ஆழ்வார், "கஞ்சனைத் தகர்த்த சீர்கொள் சிற்றாயன் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எங்கள் செல்சார்வே"[4] என்று அருளிச் செய்திருப்பதால், தங்களுக்கு அச்சம் இல்லாத இடமான புகலாக இத்திருப்பதி எம்பெருமாளை நினைத்து பயமற்றிருப்பது விளங்குகிறது. "திருச் சிற்றாற்றங்கரையானை முக்கணம்மானை நான்முகனை அமர்ந்தேனே"[5] என்றிருப்பதால் "அமரும்" என்றார். மஹாமதிகள் என்றது, "ஸம்ஸ்ப்ருசந் ஆஸநம் சௌரேர் விதுரஸ் ஸ மஹாமதி:"[6] என்கிற மஹாபாரத சுலோகத்தை ஒட்டியே. துரியோதனன் கண்ணபிரானுக்குப் பொய்யாசனமிட்டுத் தீங்கு விளைத்ததைக் கண்ட விதுரர் தன்னுடைய மாளிகையில் தாமிட்ட ஆஸனத்தையும், தடவித் தடவிப் பார்த்தார் என்பது இந்த சுலோகத்தின் பொருள். விதுரர் 'மஹாமதி' என்ற சொல்லால் குறிப்பிடப்பட்டுள்ளார். ஆறு என்பதனால் 'செழிக்கும்' என்றார்.

17. "ஸாத்ய ஹ்ருதிஸ்தனாயும் ஸாதநம் ஒருக்கடுக்கும் க்ருதஜ்ஞதா கந்தம் தாயப்பதியிலே"

திருக்கடித்தானத்தில் விளங்கும் குணம் க்ருதஜ்ஞத்வம் (செய்ந்நன்றி அறிதல்) என்னும் குணம் விளங்கும். ஆழ்வார் திருவுள்ளத்தில் வசித்தலாகிற ஸாத்யத்தைப் (பலத்தை) பெறுவதற்காகவே திருக்கடித்தானத்தில்

---

1 திருவாய்மொழி 8-4-1
2. திருவாய். நூற்றந்தாதி-73
3. மேலது 74
4. திருவாய்மொழி - 8-4-1
5. திருவாய்மொழி - 8-4-10 (
6. மஹாபாரதம்.

வசித்தலாகிற சாதனத்தை மேற் கொண்டான் எம்பெருமான். அப்பேற்றைப் பெற்ற பின்பும் அதற்கு சாதனமாக இருந்த திருக்கடித்தானத்திலும் விரும்பி எழுந்தருளி இருக்கிறான். "திருக்கடித்தானமும் என்னுடைச் சிந்தையும் ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் கண்மர்."[1] என்கிறபடி சாத்யமான ஆழ்வாருடைய உள்ளத்தில் இருப்புக் கிடைத்த பின்பும், சாதனத்திலும் சமமான பற்று வைத்திருப்பதால் எம்பெருமானுடைய செய்நன்றியறிதல் என்கிற குணம் இத்திருப்பதியில் விளங்குகின்றது என்கிறார். 'கடித்தானம்' என்பதற்கு மணத்தை உடைய இடம் என்பது பொருளாதலால் 'க்ருதஜ்ஞதா கந்தம்' என்கிறார். "திருக்கடித்தான நகரும் தனதாயப்பதியே"[2] என்றிருப்பதனால் 'தாயப்பதியிலே' என்கிறார்.

18. "அவகாஹித்தாரை அநந்யார்ஹம் ஆக்கும் நாயக லக்ஷணம் வளம்புகழும் ஊரிலே குட்டமிடும்."

திருப்புலியூரில் விளங்கும் குணம் நாயக லக்ஷணம். "முனைவன் மூவுலகாளி அப்பன் தன் திருவருள் மூழ்கினளே"[3] என்கிறபடி தன் திருவருளில் மூழ்குகிறவர்களை "திருப்புலியூர்ப் புகழன்றி மற்று – பரவாளிவன் நின்று இராப்பகல்"[4] என்றும், "அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்"[5] என்றும். "திருப்புலியூர் நின்ற மாயப்பிரான் திருவருளாம் இவள் நேர்பட்டது"[6] என்றும் கூறும்படி மற்றொருவர்க்கன்றித் தனக்கே அநந்யார்ஹமாக்கும் (உரித்தாக்கும்) 'நாயக லக்ஷணம்' விளங்கும் என்கிறார். "கருமாணிக்க மலைமேல் மணித்தடம் தாமரைக் காடுகள்போல், திருமார்புவாய் கண்கை உந்தி காலுடை யாடைகள் செய்ய பிரான்"[7] "மின்னு நீண் முடியாரம் பல்கலன் தானுடை எம்பெருமான்"[8] "புகழும் பொருபடை யேந்தி"[9] போன்ற பாசுரங்களில் அவயவ, ஆயுத, ஆபரண சோபை முதலான தலைவனுக்கு உரிய இலக்கணம் கூறப்பட்டு இருப்பதால் நாயக லக்ஷணம் என்றார். "திருப்புலியூர் வளம் புகழுமிவன்"[10] என்ற பாசுரத்தை ஒட்டி 'வளம் புகழுமூர்' என்கிறார். குட்ட காட்டுத் திருப்பதியைப் பற்றியதாகையால் 'குட்டமிடும்' என்றார்.

19. "போக்ய பாகத்வரை தெளிந்த சந்தைக்கு முன்னில் ப்ரகடம்"

திருப்புளிங்குடி, வரகுணமங்கை, ஸ்ரீவைகுண்டம் என்ற மூன்று திருப்பதிகளிலும் விளங்கும் குணம் த்வரை (பதற்றம்). மிக்க பசியையுடையவன் அன்னம் பக்குவமாவதற்கு முன்பே பதற்றத்தால் அதன் அருகே வந்து நிற்பது,

1 திருவாய். 8-6-2 2 மேலது 8-6-8 3. மேலது 8-9-5 4. மேலது 8-9-9
5. மேலது 8-9-1 6. மேலது 8-9-10 7. மேலது 8-9-1 8. மேலது 8-9-2
9. மேலது 8-9-3 10. மேலது 8-9-3.

இருப்பது, கிடப்பதைப் போன்று, போக்யபூதரான (இனியவரான) ஆழ்வார்க்குப் பரமபக்தியாகிற பாகம் பிறக்குமளவும் அவரை அனுபவிக்க இருக்கின்ற எம்பெருமானுக்கு உண்டான பதற்றம் திருப்புளிங்குடியிலும், வரகுணமங்கையிலும், ஸ்ரீவைகுண்டத்திலும் விளங்கும் என்கிறார். எம்பெருமான் ஆழ்வாரைப் பரமபோக்ய வஸ்து (இனிமையான பொருள்) ஆகக் கொண்டிருக்கிறான் என்பது "என்னில் முன்னம் பார்த்துத் தானென்னை முற்றப் பருகினான்"[1] என்பது போன்ற பாசுரங்களினால் விளங்கும்." தெளிந்த என் சிந்தை அகங்கழியாதே"[2] என்றதற்கு முன்னடியான "புளிங்குடிக் கிடந்து, வரகுணமங்கை யிருந்து வைகுந்தத்துள் நின்று"[3] என்பதில் கூறப்பட்டுள்ள மூன்று திருப்பதிகளிலும் இந்த பதற்றம் விளங்கும் என்றார்.

20."போகத்தில் தட்டுமாறும் சீலம் காட்கரையிலே கரையழிக்கும்."

திருக்காட்கரையில் விளங்குவது சீல குணம். இப்படி இனியவரான ஆழ்வாருடனே கலந்து பரிமாறுமிடத்தில் "ஆட்கொள்வான் ஒத்து என் உயிர் உண்ட மாயன்"[4] என்றும்" வாரிக் கொண்டு உன்னை விழுங்குவன் காணிலென்று ஆர்வுற்ற என்னை ஒழிய என்னில் முன்னம் பாரித்துத் தான் என்னை முற்றப் பருகினான் காகொக்கும் காட்கரையப்பன் கடியனே"[5] என்றும் சொல்லும்படி அத்தலை இத்தலையாய் சேஷ சேஷிபாவம் மாறாடிப் பரிமாறும் சீலகுணம் திருக்காட்கரையிலே கரையழியப் பெருகும். சீலமாவது பெரியவன் தாழ்ந்தவனோடு புரையேறக் கலக்கும் தன்மை. காட்கரை என்றதற்கு ஏற்ப 'கரையழிக்கும்' என்றார்.

21. "மஹாத்மாக்கள் விரஹம் ஸஹியாத மார்த்தவம் வளத்தின் கனத்தே கூடு பூரிக்கும்".

திருமூழிக் களத்தில் விளங்கும் குணம் மார்த்தவம் (ஸௌகுமார்யம்) "எங்கானலகங்கழிவாய்" என்ற திருவாய்மொழியினால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற திருமூழிக்களத்தில் எம்பெருமானுடைய ஸௌகுமார்ய குணம் விளங்கும். திவ்யமங்கள விக்ரஹ குணம், திவ்யாத்ம ஸ்வரூபகுணம் என்ற இரண்டிலும் ஸௌகுமார்ய குணம் சேரும். இங்கே கூறப்படும் ஸௌகுமார்யம் திவ்யாத்ம ஸ்வரூபத்தைப் பற்றியது. பாகவதர்களை விண்டடுப் பிரிந்திருக்க மாட்டாமல் இருக்கும் குணம் ஸௌகுமார்யம். "தமரோடு அங்கு உறைவார்க்கு"[6] என்கிறபடி எம்பெருமான் தன் பரிஜனங்களோடு அங்கு நித்யவாசம் பண்ணுவது விளங்குவதால் அடியவர்களை விட்டுப்

1 திருவாய்மொழி-9-6-10 2. மேலது 9-2-4 3. மேலது 9-2-4
4. மேலது 9-6-7. 5. மேலது 9-5-11 6. மேலது 9-7-2

பிரிந்திருக்கமாட்டாமை ஆகிற ஸௌகுமார்யம் இந்த திவ்ய தேசத்தில் விளங்குகிறது. "ஸக்ருத் த்வதாகார விலோக நாசயா த்ருணீக்ருதாறுத்தம புக்தி முக்திபி: மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத்விரஹோதி துஸ்ஸஹ:"[1] என்பது ஆளவந்தாருடைய ஸ்ரீஸூக்தி. தன்னுடைய திருமேனியை ஒருகால் காண வேண்டுமென்னும் ஆசையால் சிறந்த போகமோக்ஷங்களையும் வெறுத்திருக்கும் மஹாத்மாக்களை எம்பெருமான் ஒரு நொடிப் பொழுதும் விட்டுப் பிரிந்து தரித்து இருக்க மாட்டான் என்பது இந்த சுலோகத்தின் பொருள். "வானவர் தம் முன்னவனை மூழிக்களத்து வளத்தினை"[2] என்ற பாசுரத்தை அடியொற்றி "வளத்தின்" என்றார். 'களம்' என்பதற்குச் சேர 'கூடுபூரிக்கும்' எனப்பட்டது.

22. "பிரிந்த துன்பக் கடல் கடத்தும் விஷ்ணு போத ஆந்ருசம்ஸ்யம் நாவாயிலே நிழலெழும்."

திருநாவாயில் விளங்கும் குணம் பேரருள். "அன்புடையாரைப் பிரிவுறு நோய்"[3] என்கிறபடி பிரிவினால் விளைந்த துன்பமாகிய நோயை "துன்பக் கடல் புக்கு வைகுந்தன் என்பதோர் தோணி பெறாது உழல்கின்றேன்"[3] என்ற பாசுரத்தில் துன்பக் கடலைக் கடக்கிற தோணியாகவே எம்பெருமான் அருளிச் செய்யப்பட்டுள்ளான். "ஸம்ஸாரார்ணவ மக்நாநாம் விஷயாக்ராந்த சேதஸாம், விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்"[4] என்கிற பிரமாணத்திலும் 'விஷ்ணு போதம்' என்ற சொல்லால் எம்பெருமான் குறிப்பிடப்படுகின்றான். இதற்கு முன் திருவாய்மொழியில் "மிகமேனி மெலிவெய்தி மேகலையும் ஈடழிந்து, என் அகமேனி யொழியாமே திருமுழிக்களத்தார்க்கே – தகவு அன்று என்றுரையீர்கள்"[5] என்று மேன்மேலும் ஆள்விடவேண்டும்படி எம்பெருமானைப் பிரிந்ததால் வந்த துக்கத்தை ஆழ்வார் வெளிப்படுத்தினார். அதனைக் கடத்துவதற்காகவே திருநாவாயில் வந்து நின்றான். "நாவாயுறைகின்ற என் நாரணநம்பீ! ஆஆ அடியானிவன் என்றருளாயே"[6] என்று விரும்பும்படியாக இருக்கும் ஆந்ருஸம்ஸயம் (அடியவர்கள் விஷயத்தில் செய்கிற திருவருள்) விளங்கும்.

23. "சரண்ய முகுந்தத்வம் உத்பலாவதகத்திலே பிரஸித்தம்"

திருக்கண்ணபுரத்தில் விளங்கும் குணம் முகுந்தத்வம் (மோக்ஷத்தைக் கொடுக்கும் தன்மை) ஆகும். "சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்"[1] என்ற பாசுரத்தை அடியொற்றி 'சரண்யன்' என்றும் "மரணமானால் வைகுந்தம்

1 ஸ்தோத்ர ரத்னம்-55. 2. பெரியதிருமால்-129. 3. நாச்சியார் திரு. 5-4
4. விஷ்ணுதர்மம் 5. திருவாய்மொழி -9-7-10 6. திருவாய்மொழி -9-8-7

கொடுக்கும் பிரான்"[2] என்றிருப்பதனால் 'முகுந்தத்வம்' என்றும் அருளிச் செய்துள்ளார். "உத்பலாவதகே திவ்யே விமாநே புஷ்கரேக்ஷணம், சௌரிராஜமஹம் வந்தே ஸர்வாங்க ஸுந்தரம்" என்கிறபடி இந்த திவ்ய தேசத்திலுள்ள விமானத்திற்கு "உத்பலாவதகவிமானம்" என்று பெயர் உள்ளதால் 'உத்பலாவதகத்திலே' என்றார். உத்பலாவதம் என்பதற்கு முமுக்ஷுக்களைக் காப்பாற்றும் இடம் என்பது பொருள். இக்குணம் புராணங்களிலேயே விளக்கப்பட்டுள்ளதால் 'பிரஸித்தம்' என்றார்.

24. "மார்க்க பந்து சைத்யம் மோஹனத்தே மடுவிடும்".

திருமோகூரில் விளங்கும் குணம் சைத்யம் (குளிர்ச்சி). திருக்கண்ணபுரத்திலே கூறியபடி மோக்ஷத்தைக் கொடுப்பவனான தன்னுடைய திருவருளாலே மோக்ஷத்தை அடைபவர்களுக்கு "காளமேகத்தை அன்றி மன்றொன்று இலம் கதி"[3] என்றும் "ஆத்தன் தாமரையடியன்றி மற்றிலம் அரணே"[4] என்றும் சொல்லுகிறபடி நம்பத் தகுந்தவனாய்க் கூடக் கொண்டுபோம் வழித்துணையானவனுடைய "சுரிகுழல் கமலக் கண்கனிவாய்க் காளமேகம்"[5] என்றும் "அவனடி நிழல் தடம்"[6] என்றும் "மரகதமணித்தடம்"[7] என்றும் சொல்லும்படியிருந்துள்ள பிறப்பு இறப்புக்களில் உழன்று திரிவதால் உண்டாகும் எல்லாத் தாபங்களையும் போக்கும்படியான குளிர்ச்சி திருமோகூரிலே விளங்கும் என்கிறார். அமுதத்தைக் கொடுக்கும் சமயத்தில் அசுரர்களை மயங்கச் செய்த இடம் ஆகையாலே இத்தலம் மோஹன க்ஷேத்திரம் என வழங்கப்படுகிறது. "மரகதமணித்தடம்" என்பதற்குச் சேர "மடுவிடும்" என்கிறார்.

25. "ஸைந்ய புத்ர சிஷ்ய ஸாத்ய ஸித்த பூசுரார்ச்சனத்துக்கு முகநாபி பாதங்களை த்வாரத்யரத்தாலே காட்டும் ஸாம்யம் அநந்தசயநத்திலே வ்யக்தம்"

திருவனந்தபுரத்தில் விளங்கும் குணம் ஸாம்யம் (வேறுபாடுகருதாது ஒரே தன்மையாகப் பார்க்கும் குணம்). "கெடுமிடராய வெல்லாம்"[8] என்கிற திருவாய்மொழியில் கூறப்பட்டுள்ள திருவனந்தபுரத்தில் நித்யஸூரிகள் சம்சாரிகள் என்று வேறுபாடு பாராத ஸாம்ய குணம் விளங்கும். இத்தலம் திருமுகமும், திருநாபியும், திருவடிகளுமாகிற இவற்றைத் திருவாசல் மூன்றினால் காட்டும் தலம் ஆதலால் "முகநாபி பாதங்களை த்வார த்ரயத்தாலே காட்டும்" எனப்பட்டது. இத்திருப்பதியில் மூன்று வகைப்பட்ட

1 திருவாய்மொழி - 9-10-5 2. மேலது 9-10-5 3. மேலது 10-1-1 4. மேலது 10-1-6
5. மேலது 10-1-1 6. மேலது 10-1-2 7. மேலது 10-1-8 8. மேலது 10-2.

அதிகாரிகள் மூன்று வாயில்களில் வந்து பணிந்து அர்ச்சிப்பதாக ஆழ்வார் அருளிச் செய்துள்ளார். "அனந்தபுரத்து, அமரர்கோன் அர்ச்சிக்கின்று அங்ககப் பணி செய்வர் விண்ணோர்"[1] என்ற பாசுரத்தில் 'அமரர்கோன்' என்று நித்யசூரிகளின் தலைவராகிய சேனைமுதலியாராகிற சாத்யர் திருமுக வாசலிலும், "அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதி"[1] என்ற பாசுரத்தில், புத்திரர்களான பிரமன் முதலியவர்கள் திருநாபிக் கமல வாசலிலும் "படமுடை அரவில் பள்ளி பயின்றவன் பாதம் காண நடமினோ நமர்கள் உள்ளீர்"[2] என்ற பாசுரத்தில் இவ்வாழ்வாருடைய உபதேசம் கேட்ட சிஷ்யர்கள் திருவடி வாசலிலும் வந்து எம்பெருமானை அர்ச்சிப்பதாகக் கூறப்பட்டுள்ளது. நித்யசூரிகள் என்றும் இவ்வுலக மக்கள் என்றும் வேறுபாடு பாராத குணம் திருவனந்தபுரத்தில் வ்யக்தமாக (தெளிவாக) இருக்கும் என்கிறார்.

26. "மோக்ஷ தானத்தில் ப்ரணத பாரதந்த்ரியம் வளம்மிக்க நதியிலே கரை புரளும்"

திருவாட்டாற்றில் விளங்கும் திருக்குணம் ஆச்ரித பாரதந்திரியம். "அருள் பெறுவாரடியார்" என்கிற பதிகத்திலுள்ள "அருள் தருவான் அமைகின்றான் அது நமது விதிவகையே"[3] என்றும் "விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் விதிவகையே"[4] என்றுமுள்ள பாசுரங்களின்படியே எம்பெருமான் அடியவர்கட்கு மோக்ஷத்தைக் கொடுக்கும் பொழுது அவர்கள் விதித்தபடி செய்பவனாய் நிற்கிற அடியவர்கட்குப் பரதந்திரப்பட்டிருக்கும் தன்மை திருவாட்டாறில் விளங்கும். "மண்ணுலகில் வளம் மிக்க வாட்டாற்றான்"[5] என்ற பாசுரத்தைக் கருதி "வளம் மிக்க நதியிலே" என்றார். ஆறு என்பதற்குத் தகுந்தாற்போல் கரைபுரளும் என்றார்.

27. "த்யாஜ்ய தேஹ வ்யாமோஹம் மருள்கள் கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்."

திருமாலிருஞ் சோலையில் விளங்கும் திருக்குணம் வ்யாமோஹம் (கழிபெருங்காதல்). முமுக்ஷுக்களுக்குத் தியாஜ்யமான (விடத் தக்கதான) சரீரத்தில் "வஞ்சக் கள்வன் . . . நெஞ்சும் உயிரும் உள் கலந்து"[6] என்றும் "மாயவாக்கை இதனுள் புகுந்து"[7] என்றும் சொல்லுகிறபடியே இச்சரீரத்தின் இழிவினைப் பாராமல் உள் புகுந்து "திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே என் தலையே"[8] என்ற பாசுரத்தின்படி உகந்தருளின திவ்ய தேசங்கள் எல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இச்சரீரத்திலே செய்து

1 திருவாய்மொழி 10-2-6 2. மேலது0-2-8 3 மேலது 10-6-1 4. மேலது 10-6-3
5. மேலது 10-6-3. 6. மேலது 10-7-1 7. மேலது 10-7-3 8. மேலது 10-7-8

"மங்க ஒட்டு உன்மாமாயை"[1] என்கிறபடியே எம்பெருமானைக் கால்கட்டி விடுவிக்க வேண்டும்படி எம்பெருமானுடைய வ்யாமோஹம் ஆழ்வாருடைய சரீரத்தில் இருந்ததாக ஆழ்வார் அருளிச் செய்துள்ளார். "மருள்கள் கடியும் மணிமலை திருமாலிருஞ்சோலை மலையே"[2] என்றும் "மயல்மிகு பொழில் சூழ் மாலிருஞ்சோலை"[3] என்றும் உள்ள பாசுரங்களைச் சேர்த்து "மருள்கள் கடியும் மயல்மிகு பொழியிலே தழைக்கும்" என்று நாயனார் அருளிச் செய்துள்ளார். 'பொழில்' என்ற பதத்துக்கு ஏற்ப 'தழைக்கும்' என்றார்.

28. "அங்கீகரிக்க அவகாசம் பார்க்கும் ஸ்வாமித்வம், பெருநகரிலே பேர் பெற்றது"

திருப்பேர் நகரில் விளங்கும் குணம் ஸ்வாமித்வம். "திருமாலிருஞ் சோலைமலை என்றேன் என்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்"[4] என்றுள்ள பாசுரத்தின்படி தன்னுடைய அங்கீகாரத்துக்கு உறுப்பான புண்ணியம் சிறுதும் இல்லாதாரையும் மடிமாங்காய் இடுவதைப் போன்று "என்னூரைச் சொன்னாய்" என்றாற் போன்ற தன் நினைவின்றியே வரும் புண்ணியங்களை நம் மீது ஏற்றி அங்கீகரிப்பவனுடைய ஸ்வாமித்வம் திருப்பேர் நகரிலே விளங்கும். "பெருவரை மதில்கள் சூழ்ந்த பெருநகர்"[5] என்ற பாசுரத்திற்குச் சேர 'பெருநகர்' என்றார். இவ்வழியாலேயாகிலும் அங்கீகரிக்கப் பார்ப்பது தன்னுடைமையை (ஸ்வம்) விடமாட்டாமையாலே ஆகையால் "ஸ்வாமித்வம்" என்றார்.

இந்த அர்ச்சாவதார திவ்வியதேசங்களில் நம்மாழ்வாருக்கு பருவம் நிரம்புவதற்கு முன்பே அன்பு உண்டாயிற்றென்றும் ஆழ்வார் பதினாறு வயதில் பிரபந்தம் பாடத் தொடங்கினார் என்றும் இவரருளிய திருவாய்மொழி ஆழ்வார் தமக்கும், கற்பவர்களான சம்சாரிகளுக்கும், கேட்பவர்களான நித்தியசூரிகளுக்கும், எம்பெருமானுக்கும் இனிமை பயப்பது என்றும் கூறுகிறார். எம்பெருமானுடைய திருவருளால் பிறந்த பரபக்தியானது, பரஜ்ஞான பரமபக்திரூபமாய், அதனால் நிறைந்த ஞானமாகிற அமுதக் கடலானது சொற்களாகப் பெருக்கெடுத்து திருவாய்மொழியாக அவதரித்தது.

## திருவாய்மொழியில் சொல்லப்பட்டுள்ள அர்த்த விசேடங்கள்

திருவாய்மொழியில் சொல்லப்படுகின்ற அர்த்த விசேடங்களை எல்லாம் விரிவாக விளக்கப் புகுந்த நாயனார், இவ்வுலக மக்கள் உய்வு பெறும்

---

1 திருவாய். 10-7-10 2. மேலது 10-7-7 3. மேலது 2-10-3 4. மேலது 10-8-1
5. பெரிய திருமொழி 5-9-3

பொருட்டு ஆழ்வாரால் உபதேசிக்கப்பட்ட இப்பிரபந்தம், பொருள்களின் ஒப்புமையால் கீதைக்கு ஒப்பாகச் சொல்லப்படும் என்கிறார். கீதையில் சொல்லப்பட்டுள்ள தத்துவங்களெல்லாம் திருவாய்மொழியில் உள்ளதென்பதை திருவாய்மொழிப் பாசுரங்கள் கொண்டே காட்டுகிறார்.

| கீதை | திருவாய்மொழி |
|---|---|
| 1. 'நத்வேவாஹம்'[1] என்ற ச்லோகத்தில் ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக் கும் உள்ள வேறுபாடு, ஜீவாத்மாக்களுக்குள் ஒன்றுக் கொன்று வேறுபாடு முதலிய வைகளும், "தேஹிநோஸ் மின் யதா"[2] என்ற ச்லோகத்தில் சரீரத்துக்கும், ஆன்மாவிற்கு முள்ள வேறுபாடு முதலியவை சொல்லப் பட்டிருப்பதால் கீதையில் தத்வ விவேகம் சொல்லப் பட்டுள்ளது. | 1. 'அடியேனுள்ளான்'[1] என்ற பாசுரத் தில் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மா வுக்கும் உள்ள வேறுபாடும், அச் சொற்களின் பொருள் ஆற்றலால் ஜீவாத்மாக்களுக்குள் ஒன்றுக் கொன்று உள்ள வேறுபாடு, 'சென்று சென்று பரம்பரமாய்'[2] என்று பாசுரத்தில் ஆன்மாவுக்கும், சரீரத்திற்கு முள்ள வேறுபாடு முதலியவைகளும் அருளிச் செய்யப்பட்டிருப்பதால் இதில் தத்வவிவேகம் சொல்லப்பட்டு உள்ளது. |
| 2. 'அந்தவந்த:'[3] 'ந ஜாயதே'[4] முதலிய சுலோகங்களில் சரீரம் அழியக் கூடியது என்றும், சரீரம் கொல்லப் பட்டாலும் ஆன்மா அழிவதில்லை என்றும் சரீரத்தின் நிலையாமை யும் உயிரின் அழியாமையும் கூறப் பட்டுள்ளது. | 2. 'மின்னின் நிலையில மன்னுயி ஆக்கைகள்'[3], உள்ளதும் இல்லதும் ஆகிய பாசுரங்களின் உடலின் நிலையாமையும் உயிர்களின் நித்யத்வமும் கூறப் பட்டுள்ளது. |
| 3. 'ஈச்வர: ஸர்வபூதாநாம்'[5] என்கிற சுலோகத்தில், எல்லா உயிர் களுடைய மனங்களிலும் தங்கி யிருப்பவனாய், தொழில் செய்தல், செய்யாமைகளாகிற எல்லாக் காரியங்களையும் செய்வித்த | 3. 'நின்றனர்'[4] என்கிற பாசுரத்தில் உயிருள்ள, உயிரற்ற பொருட் களின் தொழில் செய்தல், செய்யாமை களாகிற அனைத்துச் செயல்களும் தனக்கு உரியதாம்படி இருக்கிற |

1 2-6 2 2-13 3. 2-18 4. 2-20 5. 18-61 | 1 8-8-2 2 8-8-5 3. 1-2-2 4. 1-2-8

லாகிற இறைவனுடைய நியமிக்கும் தன்மை சொல்லப்பட்டுள்ளது.

4. 'தஸ்யாயஹம்'[1] என்ற சுலோகத்தில், எம்பெருமானிடம் ஆசையுள்ளவர்களுக்கு அவன் எளியனாயிருக்குந் தன்மையும், 'பரித்ராணாய'[2] என்ற சுலோகத்தில் அவதாரத்தில் எம்பெருமானுடைய எளிமைத் தன்மையும் சொல்லப்பட்டுள்ளது.

5. 'ஸமோஹம் ஸர்வபூதேஷு'[3] என்கிற சுலோகத்தில் அவனை வணங்கும் முறையில் எம்பெருமான் எல்லோர்க்கும் சமமாக இருத்தல் சொல்லப் பட்டுள்ளது.

6. 'அஹங்கார'[4] என்ற சுலோகத்தில் அறிவில்லாத இந்த ஜீவன் அகங்காரத்தால் தான் செய்வதாக நினைக்கிறான் என்று அகங்காரத் தின் குற்றம் கூறப்பட்டுள்ளது.

7. 'யததோஹ்யபி'[5] என்ற சுலோகத்தில் 'மனிதனுடைய மனத்தை கலங்கச் செய்கின்ற இந்திரியங்கள் வலியனவாய் இழுத்துக் கொண்டு போகின்றன' என்று சொல்லப் பட்டுள்ளது.

8. 'சஞ்சலம்ஹிமந:'[6] என்ற சுலோகத்தில் காற்றினைப்

1 8-14 2. 4-8 3. 9-29
4. 3-27 5. 2-60 6. 6-34

எம்பெருமானுடைய நியமிக்கும் தன்மை சொல்லப் பட்டுள்ளது.

4. 'பத்துடையடியவர்க்குஎளியவன்'[1] என்ற பாசுரத்தில் பக்திமான் களிடத்தும், 'எளிவரும் இயல்வினன்'[2] என்ற பாசுரத்தில் அ வ தா ர த் தி லு ம் எம்பெருமானுடைய எளியனாம் தன்மை சொல்லப் பட்டுள்ளது.

5. 'பற்றிலனீசனும்'[3] என்ற பாசுரத்தில் எம்பெருமானை அடையும் முறையில் அவன் சமமாக உள்ள தன்மை சொல்லப்பட்டுள்ளது.

6. 'நீர்நுமதென்றிவை வேர் முதல் மாய்த்து'[4] என்ற பாசுரத்தில் பிறப்பிற்குக் காரணம் அதுவே யாகச் சொல்லி யிருக்கையாலே அகங்காரத் தில் குற்றம் கூறப்பட்டுள்ளது.

7. 'விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை'[5] என்ற பாசுரத்தில் இந்திரியங் களுடைய வலிமை சொல்லப் பட்டுள்ளது.

8. 'மனத்தை வலித்து'[6] என்கிற பாசுரத்தில் மனத்தை

1. 1-3-1 2. 1-3-2 3. 1-2-6
4. 1-2-3 5. 7-1-6 6. 5-1-4

போன்று மனத்தை அடக்குதலும் கடினமான காரியம் என்று மற்ற இந்திரியங்களைக் காட்டிலும் மனத்தினுடைய முதன்மை கூறப்பட்டுள்ளது.

9. 'தாநிஸர்வாணி'[1] என்ற சுலோகத்தில் இந்திரியங்களை எவன் தன் வசத்தில் வைத்துள்ளானோ அவனுக்குப் புத்தி யானது ஒரே நிலையில் இருக்கிறது என்று கரணங்களை அடக்குதல் சொல்லப்பட்டுள்ளது.

10. 'சதுர்விதா பஜந்தேமாம் ஜநா:'[2] என்கிற சுலோகத்தில் தன்னிடத்திலிருந்து நீங்கிய செல்வத்தை மீண்டும் விரும்புகிறவனும் கைவல்யத்தை விரும்புகிறவனும் வறியனாக இருந்து செல்வத்தை விரும்புகிறவனும், பகவானை அடைய விரும்புகிறவனும் ஆகிய நல்வினையையுடைய மக்களின் வேறுபாடு கூறப்பட்டுள்ளது.

11. 'த்வௌ பூதஸர்க்கௌ'[3] என்ற சுலோகத்தில் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் வேறுபாடு சொல்லப் பட்டுள்ளது.

12. 'ஹந்த தே கதயிஷ்யாமி'[4] என்ற சுலோகத்தில் எம்பெருமானுடைய

1 2-61 2. 7-16 3. 16-6
4. 10-19 5. 11-15

அடக்குதலின் அருமை சொல்லப்பட்டிருப்பதால் ஏனைய இந்திரியங்களை விட மனத்தின் முதன்மை கூறப் பட்டுள்ளது.

9. 'உள்ளம் உரை செயல் உள்ள மூன்றையும், உள்ளிக் கெடுத்து'[1] என்கிற பாசுரத்தில் கரணங்களை அடக்குதலைப் பற்றி அருளிச் செய்யப்பட்டுள்ளது.

10. 'இம்மையிலேபிச்சை தாம் கொள்வர்'[2] என்று நீங்கிய செல்வத்தை விரும்புகிற ஆர்த்தனும், 'இறுகல் இறப்பென்னும்'[3] என்று கைவல்யத்தை விரும்புகிற கேவலனும், 'குணங்கொள் நிறை புகழ்மன்னர்'[4] என்று புதிய செல்வத்தை விரும்புகிற அர்த்தார்த்தியும் 'திருநாரணன் தாள் காலம்பெற சிந்தித்து உய்மின்'[5] என்று பகவானை விரும்புகிற ஞானியும் ஆகியவர்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

11. 'நண்ணா அசுரர் – நல்ல அமரர்'[6] என்ற பாசுரத்தில் தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் வேறுபாடு சொல்லப் பட்டுள்ளது.

12. 'புகழுநல் ஒருவன்'[7] 'நல்குரவும்'[8], 'மாயா வாமனனே'[9] முதலிய

1. 1-2-8 2. 4-1-1 3. 4-1-10 4. 4-1-8
5. 4-1-1 6. 10-7-5 7. 3-4 8. 6-3 9. 7-8

| | |
|---|---|
| விபூதியோகம் (செல்வத்தின் சிறப்பு) சொல்லப்பட்டுள்ளது. | திருவாய்மொழிகளில் எம்பெருமானுடைய விபூதியோகம் சொல்லப்பட்டுள்ளது. |
| 13. 'பச்யாமி'[1] என்கிற சுலோகத்தில் எம்பெருமானுடைய விச்வரூப தர்சனம் சொல்லப்பட்டுள்ளது. | 13. 'நீராய் நிலனாய்'[1] என்பதனால் திருவாய்மொழியில் விசுவரூபம் சொல்லப்பட்டுள்ளது. |
| 14. 'மந்மநாபவ மத்பக்தோ'[2] என்ற சுலோகத்தில் அங்கத்தோடு கூடிய பக்தி சொல்லப்பட்டுள்ளது. | 14. 'வணக்குடைத்தவநெறி'[2], 'மேவித் தொழுது'[3] 'மாலை நண்ணி'[4] முதலிய பாசுரங்களில் அங்கத்தோடு கூடிய பக்தி சொல்லப்பட்டுள்ளது. |
| 15. 'தைவீ ஹயேஷா'[3] 'தமேவ சரணம் கச்ச'[4] முதலிய சுலோகங்களில் பக்திக்கு அங்கமாகச் செய்யப்படும் அங்கப் பிரபத்தியும் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய"[5] என்ற சுலோகத்தில் ஸ்வதந்திர பரபத்தியும் கூறப் பட்டுள்ளது. | 15. 'அவனுடைய உணர்வு கொண்டு உணர்ந்து'[5] என்கிற பாசுரத்தில் அங்கப் பிரபத்தியும், 'மற்றொன் றில்லை சுருங்கச் சொன்னோம்'[6], 'சரணமாகும் தனதாளடைந்தார்க் கெல்லாம்'[7] முதலிய பாசுரங்களில் ஸ்வதந்திர பிரபத்தியும் கூறப்பட்டுள்ளது. |

ஆக, இவ்விதம் மையைக் கூறிய நாயனார், இனி, கீதையைக் காட்டிலும் திருவாய்மொழிக்கு உண்டான ஏற்றம் சொல்கிறார்.

| கீதை | திருவாய்மொழி |
|---|---|
| 1. பரம் பொருளான இறைவன் தானே உபதேசித்தது. | 1. ஞானிகளில் தலைவரான ஆழ்வார் அருளிச் செய்தது. |
| 2. 'எல்லா உலகங்கட்கும் காரணன் நானே, நானே பரம்பொருள்' என்று எம்பெருமான் தன்னுடைய பெருமையைத்தானே அருளிச் செய்கிறான். அது சிற்றறிவு | 2. 'கண்ணனல்லால் தெய்வம் இல்லை'[8] என்றும் 'கண்ணன் அல்லால் இல்லை கண்டீர் சரண்'[8] என்றும் எம்பெருமா னுடைய பெருமையை ஆழ்வார் |

1. 11-15. 2. 9-34 3. 7-14 4. 18-62 5. 18-66

1. 6-9-1 2. 1-3-5 3. 5-2-9 4. 9-10-1 5. 1-3-5 6. 9-1-7 7. 9-10-5 8. 5-2-7

| | |
|---|---|
| உடையவர்களுக்கு நம்பமுடியாமையாலே ஆதரிக்கத் தக்கதாக இருக்காது. | நடுநிலையில் நின்று உபதேசிக்கையால் இது சிற்றறிவினருக்கும் நம்பி ஆதரிக்கத் தக்கதாக இருக்கும். |
| 3. இராச்சியத்தில் விருப்பமுள்ளவர்களாய் சரணம் புகுந்த பாண்டவர் ஐவரையும் வெல்வித்து, துரியோதனாதிகள் நூற்றுவரையும் முடிப்பதற்கு, போரிடவிரும்பாத அருச்சுனனை போரிலே மூட்டி வெற்றியடைய வைப்பதற்காக அவதரித்தது கீதை. | 3. 'பொங்கைம்புலனும்' என்ற பாசுரத்தில் சொன்ன இருபத்து நான்கு தத்துவ உருவமான சரீரத்திலும், தன்னுடைய இனிமையாலே தன் பக்கலில் கால்தாழப் பண்ணும் ஆன்மாவிலும் உண்டான பற்றினை முடிப்பதற்காக அவதரித்தது திருவாய்மொழி. |
| 4. கீதைக்கு, வெற்றி தோல்விகளாகிற காரணத்திற்காக அவதரித்த குற்றம் உண்டு. | 4. திருவாய்மொழிக்கு, மோட்சத்தின் பொருட்டே அவதரித்த ஏற்றம் உண்டு. |
| 5. கீதை அருச்சுனனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி மகிழ்ச்சியுடன் உபதேசிக்கத் தொடங்கி அவனுடைய மறதி கண்டு வருத்தத்துடன் முடிந்தது. | 5. திருவாய்மொழி, விருப்பமற்ற சம்சாரிகளைப் பார்த்து உபதேசிக்கையால் 'ஏபாவம்பரமே' என்று வருத்தத் துடன் தொடங்கி அவ்வுபதேசத் தைக் கேட்டு உலகம் முழுதும் திருந்துகையால் 'பொலிக பொலிக'[3] என்று மகிழ்ச்சியோடு முடிகிறது. |
| 6. உபதேசம் பயன்பெறவில்லை. | 6. உபதேசம் பயன் பெற்றது. |
| 7. கீதையில் 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்கிறபடி இறைவனைச் சரணமாகப் பற்றுக என்கிற விதி மாத்திரமே உள்ளது. | 7. 'திருநாரணன்தாள் காலம் பெற சிந்தித்து உய்ம்மினோ' என்று எம்பெருமானைப் பற்றுகிற விதியும், 'அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' என்ற அநுஷ்டானமும் (கடைப்பிடித்தல்) உண்டு. |
| 8. கீதைக்கு ஏற்றம் ஆழ்வாருடைய அங்கீகாரத்தைக் கொண்டு சொல்லப்பட்டுள்ளது. | 8. ஆழ்வார் திருவாக்கில் பிறந்த திருவாய்மொழிக்கு அதுவும் வேண்டா. |

புத்த முனியாயும், கபில முனியாயும் எம்பெருமான் அவதரித்து பௌத்த சாத்திரமும், சாங்கிய சாத்திரமும் அருளிச் செய்திருந்தபோதும், அவை வைதிகர்களால் ஆதரிக்கப்படாமையால் பிரமாணமாக ஆக முடியவில்லை. பரமவைதிகரான ஆழ்வார் கீதையைப் பிரமாணமாகக் கொள்ளுகையால்தான் கீதைக்கு ஏற்றம் உண்டாயிற்று என்கிறார்.

## ஆழ்வார் உபதேசிக்கும் முறை

வேதம் உபதேசிப்பதும், வேதத்தால் அறியப்படுபவனான எம்பெருமான் உபதேசிப்பதும், வைதிகர்களான முனிவர்கள் உபதேசிப்பதும் தத்வ ஹித புருஷார்த்தங்களில் அறிவில்லாதவர்களான சம்சாரிகள் அளவிலேயாம். ஆழ்வாரோ எனில், சம்சாரிகளுக்கும், எம்பெருமானே உபாயமென்று கொண்டிருக்கும் ஞானிகளுக்கும், எம்பெருமானுடைய சொரூப ரூப குண விபூதிகளை நேரே அறிந்து எம்பெருமானுடைய அநுபவமே பொழுது போக்காகக் கொண்டிருக்கும் விசேடமான ஞானத்தையுடையவர்களுக்கும், எம்பெருமானுக்கும் அவரவர்களுக்கு வேண்டுவனவற்றை உபதேசித்துத் திருத்துவர்.

பகவானைப் பற்றிய ஞானம் இல்லாதவர்க்கு (சம்சாரிகளுக்கு) பிறவிப் பெருங்கடலைத் தாண்டுவதற்கு உபாயம் அறிவிப்பர். எம்பெருமான் ஒருவனே உபாயம் என்றிருப்பவர்களுக்கு பேற்றின் சிறப்பினை அறிவிப்பர். பேற்றிலே ஊன்றினவர்களுக்கு "செஞ்சொற்கவிகாள்"[1] என்று எம்பெருமானுடைய சீலகுணமாகிற ஆழங்காலை அறிவிப்பர். பேற்றினைக் கொடுக்கும் எம்பெருமானுக்கு 'பொங்கைம்புலனும் பொறியைந்தும்'[2] என்ற பாசுரத்தின்படி விடத்தக்கனவற்றை அறிவிப்பர்.

## ஆழ்வார் அதிகம் உபதேசிப்பது ஸம்ஸாரிகளுக்கும் எம்பெருமானுக்கும்

சாதனமான உபாயம் கைப்பட்டவர்களுக்கும் சாத்யமான பேறு கைப்பட்டவர்களுக்கும் அறிவிக்க வேண்டியது குறைவாகையாலே மேலே குறிப்பிட்ட நால்வரில் ஞானிகளையும், விசேடமான ஞானத்தையுடையவர்களையும் விட்டு, இறைவனை அடைதற்குரிய வழி இன்னதென்றறியாத இவ்வுலக மக்களுக்கு, முதற்பத்தில் " வீடுமின் முற்றவும்"[3] என்று தொடங்கி , பத்தாம் பத்தில் "கண்ணன் கழலிணை"[4]

. திருவாய்மொழி 10-7-1  2. மேலது 10-7-10  3. மேலது 1-2-1  4. மேலது 10-5-1

எனும் திருவாய்மொழியில் "சுனை நன்மலரிட்டு நினைமின் நெடியானே"[1] என்பது வரை, விடத்தக்கவையும், பற்றத்தக்கவையும் எவை என்று உபதேசிப்பர்.

ஆழ்வார், தம்மைத் தாழ்ந்தவர் என நினைத்து நம்மைவிட்டு நீங்கி விடுவாரோ என்று கலங்கும் எம்பெருமானுக்கு, ஆழ்வார் "உன்னை நான் பிடித்தேன் கொள்சிக்கனவே"[2] என்றும் "உன்னை நான் அடைந்தேன் விடுவேனோ"[3] என்றும் உபதேசித்துக் கலக்கத்தைத் தீர்ப்பார். மேலும் "ஆன்பின் போகேல்"[4] "என் கை கழியேல்"[5] என்று செய்யத்தகாத காரியங்களைச் செய்யாதே என்றும், "நீ உகக்கும் நல்லவரொடும் உழிதராய்"[6] என்றும், "அவத்தங்கள் விளையும், என் சொற்கொள்"[7] என்றும் செய்யத் தகுவனவற்றைச் செய் என்றும் எம்பெருமானுக்குப் பலகாலும் நன்மை தீமைகளை உபதேசிப்பர்.

## இவர்கள் இருவர்க்கும் உபதேசிப்பதற்குக் காரணம்

ஆழ்வார் எம்பெருமானுக்கு உபதேசிப்பது அவனிடத்துள்ள அன்பினாலே. அறிவின்மையால் மூடப்படுகின்ற இவ்வுலக மக்களுக்கு உபதேசிப்பது அவர்களையும் தம்மைப் போன்று எம்பெருமானை அனுபவிப்பவர்களாக ஆக்கவேண்டும் என்கிற ஞானத்தினாலே. மேற்சொன்ன ஞானம், பக்தி இரண்டிலும் பிறருடைய துக்கம் பொறாமையாகிற குணமும் உண்டு என்று நாயனார் கூறுகிறார்.

"கொண்டாட்டும் குலம் புனைவும் தமருற்றார் விழுநிதியும், வண்டார் பூங்குழலாளும் மனை ஒழிய உயிர் மாய்தல் கண்டு ஆற்றேன்"[8] என்று இவ்வுலக மக்கள் பாரிக்கிற பாரிப்பும், முடிந்து போகிறபடியும் கண்டு அவர்களுடைய துக்கம் பொறாமையும், "அசுரர்கள் தலைப்பெய்யில் எவன்கொல் என்று ஆழும் என்னாருயிர்"[9] என்று பரனான சர்வேச்வரனுடைய துக்கம் பொறாமையும் ஞானம், பக்தி என்ற இரண்டிலும் உண்டு.

## எம்பெருமானுக்குச் சீடனுக்குரிய தகுதிகள் உண்டு

ஆழ்வார் எம்பெருமானுக்கு உபதேசித்தாலும் எம்பெருமானுக்குச் சீடனாயிருக்கும் தகுதிகள் உண்டோ? என்ன, அதற்கும் திருவாய்மொழிப் பாசுரங்களைக் கொண்டே நாயனார் விடையளிக்கிறார். உத்தம சீடனானவன், தன் ஆசாரியனை அவனுக்கு விருப்பமான இடத்திலே வைத்து, அவனுடைய

---

1. திருவாய்மொழி 10-5-10 2. மேலது 2-6-1 3. மேலது 2-6-10 4. மேலது 10-3-8
5. மேலது 10-3-8 6. மேலது 10-3-8 7. மேலது 10-3-10 8. மேலது 4-9-3
9. மேலது 10-3-8

விருப்பப்படி நடந்து, அவனுடைய திருமேனியிலே விருப்பமுடையவனாய், எல்லா சிநேகத்தையும் அவன் பக்கலிலே பண்ணி, வேறு விஷயங்களில் பற்றற்று, தரித்திரன் செல்வத்தைப் பெற்றாற்போலேயும், பசியன் சோறு பெற்றாற்போலேயும், நீர்வேட்கையுடையவன் தண்ணீர் பெற்றாற்போலேயும், மிக்க காதலோடே அவனை அனுபவித்து, தன்னுடைய உயிரையும் பொருளையும் ஆசார்யனுக்குக் கொடுத்து எல்லாம் செய்தாலும் ஆசார்யன் செய்த மிகப் பெரிய உபகாரத்துக்கு ஈடாகமாட்டாமையாலே குறைவாளனாய், ஆசாரியன் தன்னுடைய குடும்ப பாரத்தை எல்லாம் தன்மேல் பொகட்டிருக்கத் தான் அப்பாரத்தை எல்லாம் சுமந்து, பகல் இரவு எந்நேரத்திலும் அவனைப் பிரியாமல், அவன் சீற்றம் கொண்டு போ என்றாலும் போகாதவனாய், அவனுக்கு விருப்பமில்லையானால் தனக்கு உகந்தவற்றையும் விட்டு, ஆசாரியன் விதித்தபடியே நடத்துபவனாக இருப்பன்.

நல்லசீடர் ஆசாரியனிடத்தில் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டுமோ, அவ்விதமாகவே ஆழ்வாரிடத்தில் எம்பெருமான் நடந்து கொண்டதாக பாசுரங்களைக் கொண்டே நாயனார் காட்டுகிறார்.

"இருந்தும் வியந்து என்னைத் தன் பொன்னடிக்கீழ்"[1] என்கிறபடியே எம்பெருமான் இவர்க்கு விருப்பமான இடத்தே இவரை இருத்தினான். "என் எண்தானானான்"[2] என்கிறபடியே இவர் நினைவில்நின்றான். "பொய்கலவாது என் மெய் கலந்தானே"[3] என்கிறபடியே இவர்திருமேனியில் செய்த விருப்பத்தில் புரையின்றிக்கே "அந்தாமத்தன்பு செய்து"[4] என்று பரமபதத்தில் பண்ணும் விருப்பத்தை இவர் பக்கலிலே செய்தான். "பற்றிலன் ஈசனும் முற்றவும் நின்றனன்"[5] என்கிறபடியே இவர் பக்கல்வைத்த அன்பினால் பரமபதத்திலுள்ளார் பக்கல் அன்பையும் விட்டான். "நாளும் நாள் வந்து என்னை முற்றவும் தான் உண்டான்"[6] என்கிறபடியே பசித்தவன் சோறு கண்டாற்போலவும், "தான் என்னை முற்றப் பருகினான்"[7] என்கிறபடியே நீர்வேட்கை கொண்டவன் தண்ணீரைக் கண்டாற் போலவும், "இருந்தான் கண்டு கொண்டு"[8] என்கிறபடியே செல்வமில்லாதவன் நிதியினைக் கண்டாற் போலவும் மிக்க காதலோடே இவரை அனுபவித்தான். "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்"[9] என்கிறபடியே தன்னுடைய செல்வத்தையும், தன்னையும் இவருக்குக் கொடுத்து "உன் அடியார்க்கு என் செய்வனென்றே இருத்தி"[10] என்கிறபடியே இவர்க்கு எல்லாம் செய்தாலும் தான் ஒன்றும் செய்யப்

---

1. திருவாய்மொழி 8-7-1 2. மேலது 1-8-7 3. மேலது 1-8-5 4. மேலது 2-5-1
5. மேலது 1-2-6 6. மேலது 9-6-8 7.மேலது 9-6-10 8. மேலது 8-7-2
9. மேலது 2-7-11 10. பெரி. திருவந். 53

பெற்றிலேன் என்று இழவாளனாயிருந்தான். ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருட்களாகிய எல்லா பாரத்தையும் நம: என்ற சொல்லின் மூலம் ஆழ்வார் சமர்ப்பிக்க, "வேங்கடத்துறைவார்க்கு நம என்னலாம் கடமை அது சுமந்தார்கட்கே"[1] என்னும்படி, அச்சொல் கனத்துத் தோன்றுகையாலே அவ்வழியாலே அந்த பாரத்தை எல்லாம் சுமந்தான். "அல்லு நன்பகலும் இடைவீடின்றி நல்கி, என்னைவிடான்"[2] என்று இவரிடத்தில் வைத்த அன்பாலே இரவு பகல் இவரை விடமாட்டாதே, "போகு நம்பீ"[3] என்று சீறிப் போகச் சொன்னாலும் "அகல்வானுமல்லன் இனி"[4] என்கிறபடியே அகலாதவனாய் இருந்தான். "ஆன்பின் போகேல்"[5] என்று இவர் விலக்கினால் "திவத்திலும் பசுநிரைமேய்ப்பு உவத்தி"[6] என்கிறபடி தனக்கு உகப்பைத் தரும் செயலான பசு மேய்க்கையையும் விட்டு, "அருள் தருவான் அமைகின்றான் அது நமது விதிவகையே"[7] என்று இவர் விதித்தபடியே நடத்துகிற எம்பெருமான் உபதேசத்திற்குச் சிறந்த பாத்திரம் என்று அருளிச் செயல்களைக் கொண்டே நாயனார் காட்டுகிறார்.

## சம்சாரிகளுக்கு உபதேசிக்கக் காரணம்

இவ்வுலக வாழ்வில் விரக்தராய், ஆன்ம குணங்களை உடையவராய் அணுகி வந்து ஆதரத்தோடு விரும்புகிறவர்களுக்கு மட்டுமே உபதேசிக்கத் தகுந்த உயர்ந்த பொருளை, எம்பெருமானிடத்தில் பக்தியில்லாதவர்களாய், வேறு பயன்களை விரும்புகின்றவர்களாய், விரும்பி அருகிலும் வராதவர்களுக்கு வலுவில் உபதேசிக்கக் காரணம் என்ன என்று நாயனார் கூறுகிறார்:–

பரமபதத்தில் உள்ளவர்களைப் போன்று இவ்வுலகில் உள்ளவர்கட்கும் அவனோடு (எம்பெருமானோடு) சம்பந்தம் ஒத்திருக்க, இவர்கள் இழந்து கிடக்க ஒண்ணாது என்கிற சம்பந்த ஞானமும், "கண்டு ஆற்றேன் உலகியற்கை கடல் வண்ணா"[8] என்கிறபடியே இவர்கள் இவ்வுலக வாழ்க்கையில் படும் கேட்டினைக் கண்டு பொறுக்க மாட்டாத தன்மையும், "அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே"[9] என்கிறபடியே எம்பெருமான் கை விட்டவர்களையும் திருத்த வேண்டும் என்ற ஆழ்வாருடைய பேரருளுமே சம்சாரிகளுக்கு உபதேசிக்கக் காரணம் என்கிறார்.

---

1. திருவாய். 3-3-6
2. மேலது 1-10-8
3. மேலது 6-2-2
4. மேலது 2-6-7
5. மேலது 10-3-8
6. மேலது 10-3-10
7. மேலது 10-6-1
8. மேலது 4-9-3
9. கண்ணிநுண். 8

## ஆழ்வாரைப் போலே உபதேசித்தவர்கள்

ஆழ்வாரைப் போலே உபதேசித்தவர்கள் 1. சீதைப்பிராட்டி, 2. பிரஹ்லாதன், 3.விபீஷணன் 4. எம்பெருமானார் ஆகியோராவர் என்கிறார்.

சீதைப் பிராட்டி, தன்னிடத்தில் தீய எண்ணத்தைக் கொண்ட இராவணனுக்கும் உபதேசம் செய்தாள்.

திருநாமம் சொன்னதுவே காரணமாகச் சீறி மிகக் கொடிய தண்டனைகளைத் தனக்குக் கொடுத்த இரணியனுக்கும், அசுர புத்திரர்களுக்கும் ப்ரஹ்லாதன் உபதேசம் செய்தான்.

தனக்கு நலம் சொன்னது பொறாமல் தன்னை வெறுத்த இராவணனுக்கு அவன் தம்பியான விபீஷணன் உபதேசம் செய்தான்.

எம்பெருமானார், ஓராண் வழியாக முன்னோர் உபதேசித்துப் போந்த பொருள்களைப் பலரையும் பலர்க்கும், உபதேசிக்கும்படி பண்ணியும், திருக்கோட்டியூர் நம்பி பக்கல் பலகால் நடந்து கேட்ட உயர்ந்த உண்மைப் பொருளை ஓலக்கமாக வைத்தும் உபதேசித்தார்.

## ஆழ்வாருடைய பிரபந்தங்கள் ரஹஸ்யத்ரயத்தின் விளக்கம்

நம்மாழ்வாருடைய பிரபந்தங்களான திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கும் திருமந்திரம், துவயம், சரமச்லோகம், ஆகிய இரகசியங்கள் மூன்றினுடைய பொருள்களைச் சொல்லுகின்றன. ரகசியங்கள் மூன்றிலும் சுருக்கமாகவும், நுட்பமாகவும், சொல்லப்பட்ட பொருள்களே ஆழ்வாருடைய பிரபந்தங்களில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன என்று அருளிச் செயல்களைக் கொண்டே நாயனார் விளக்கியுள்ளார்.

திருவிருத்தமும், திருவாசிரியமும் திருமந்திரத்தின் பொருளை விளக்க வந்தன என்கிறார். எல்லோரையும் காக்குந் தன்மை உடையவனான எம்பெருமானுக்கே அடிமையாய் ஞான ஆனந்த வடிவமாய், அவனுடைய அடியார்களுக்கு அடிமை என்னுமளவாய் இருக்கும் ஆன்மாவின் தன்மையையும், பிறப்பு இறப்புகட்குக் காரணமாயிருக்கின்ற அறியாமை முதலிய விரோதி நீக்கத்தையும் சொல்லுகிற திருவிருத்தம், திருமந்திரத்தில் "ஓம் நம:" என்னும் முதல் இரண்டு பதங்களின் பொருள்களோடு சேர்ந்திருக்கும் என்பதை நாயனார் திருவிருத்தப் பாசுரங்கள் கொண்டு காட்டுகிறார்.

பரம்பொருள், பரம் பொருளுக்குச் செய்யப்படும் கைங்கரியம் என்னும் இரண்டையும் சொல்லுகிற திருவாசிரியம், திருமந்திரத்தில் மூன்றாம் பதமான நாராயண பதத்தோடு சேர்ந்திருக்கும் என்பதை நாயனார் திருவாசிரியப் பாசுரங்கள் கொண்டு காட்டுகிறார்.

இறைவனையொழிந்த உபாயங்களை நீக்குதலையும், எம்பெருமானை மனத்தால் பற்றுதலாகிற சரணடைதலையும், உபாயமாக இருக்கும் கண்ணன் எல்லாப் பாவங்களிலிருந்து விடுவித்தலையும், பாவங்கள் தன்னடையே தொலைந்ததையும், பாரம் அற்றிருத்தலையும் சொல்லுவதால் உபாயத்தைச் சொல்லுகிற பெரிய திருவந்தாதி, சரமச்லோகத்தின் பொருளோடு சேர்ந்திருக்கும் என்று பெரிய திருவந்தாதிப் பாசுரங்கள் மூலம் நிரூபிக்கிறார்.

கடைசிப் பிரபந்தமான திருவாய்மொழியில் துவயத்தின் பொருள் சொல்லப்படுகிறது. இதற்கு நாயனாருடைய திருத்தமையனாரான பிள்ளைலோகாசாரியார் அருளியுள்ள 'ஸாரஸங்கிரஹம்' என்ற பிரபந்தம் விளக்கமாக அமைந்திருப்பதால் இவர் அதைத் தனியாக விளக்கவில்லை.

## திருவாய்மொழியில் அர்த்த பஞ்சகம்

திருமந்திரத்திலும், சரமசுலோகத்திலும் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள அர்த்தங்களை துவயத்தில் விவரிப்பது போல திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற மூன்று பிரபந்தங்களிலும் சுருக்கமாகச் சொல்லப்பட்ட அர்த்த பஞ்சகத்தைத் திருவாய்மொழியில் இருபது பதிகங்களிலே தெளிவாக அருளிச் செய்து மற்றை எண்பது பதிகங்களாலும் அவற்றை விரித்து உரைக்கின்றபடியால் அர்த்த பஞ்சகம் ( ஐம்பொருள்) இத்திருவாய்மொழியில் சொல்லப்பெறுகிறது என்ற பூருவாசாரியர்களுடைய கருத்தை நாயனார் விளக்கியருளியுள்ளார்.

திருவாய்மொழியின் தொடக்கத்தையும், முடிவையும் நோக்கி உபாயமும் (நெறியும்) உபேயமும் (பலமுமே) ஆகிய இரண்டுமே இதில் சொல்லப்பட்ட பொருள்கள் என்றும் கூறுவர். திருவாய்மொழியில் "மயர்வற மதிநலம் அருளினன்" என்று தொடங்கியுள்ளதால் எம்பெருமானருளே உபாயமென்று காட்டப்பட்டது. "அவாவற்று வீடு பெற்ற" என்று முடித்துள்ளமையால் வீடு பெறுகை உபேயமென்று காட்டப்பட்டது. இவை இரண்டுமே திருவாய்மொழியில் முக்கிய பொருளாகக் காட்டப்பட்டதாகக் கூறுவர். உபாய உபேயங்களுக்கு அதிகாரி இன்னார் என்பதற்காக ஆத்மஸ்வரூபமும், உபாயமாகவும், பலத்துக்கு விஷயமாகவும் இருப்பது இன்னார் என்பதற்காக பரம்பொருளின்

ஸ்வரூபமும், பலத்துக்கு இடையூறாய், உபாயத்தினால் விலக்கக் கூடியது இன்னது என்பதற்காக விரோதி ஸ்வரூபமும் சொல்லப்படுகிறது என்றும் கூறுகிறார்.

மேலும் உபாய உபேயங்களிரண்டினுள்ளும் உபேயமான பலன் ஒன்றே திருவாய்மொழியின் திரண்டபொருள் என்றும் சொல்லுவர்கள். கைங்கரியமே முக்கியம். மற்றை நான்கினையும் சொன்னது கைங்கரியத்தை ஏற்றுக் கொள்ளுகிறவனையும், அதற்குத் தடையாக இருப்பவைகளையும், அத்தடையை நீக்குகிற வழியையும் அறிவிப்பதற்காகவே ஆகையால் உபேயமான பலன் மட்டுமே சொல்லப்பட்டுள்ளது என்கிறார்.

## அர்த்த பஞ்சகம்

திருவாய்மொழியில் அமைந்துள்ள பதிகங்கள் அர்த்த பஞ்சகத்தை விளக்கவந்தவையே என்று நாயனார் பொருளுடன் எடுத்துக்காட்டுகிறார்.

1. பரஸ்வரூபம் (அடையத் தக்க இறைவனது நிலை): 1. 'உயர்வற உயர்நலம்' (1–1) பரத்வத்தில் பரத்வத்தை அருளிச்செய்தது. 2. 'திண்ணன் வீடு' (2–2) அவதாரத்தில் பரத்வத்தை அருளிச்செய்தது. 3. 'அணைவது அரவணைமேல்' (2–8) மோக்ஷம் தருவதில் பரத்வத்தை அருளிச்செய்தது. 4. 'ஒன்றும் தேவும்' (4–8) அர்ச்சாவதாரத்தில் பரத்வத்தை அருளிச்செய்தது.

2. ஜீவஸ்வரூபம் (ஜீவாத்மாவின் நிலை): 1. 'பயிலும் சுடரொளி' (3–7) அடியவர்களுக்கு ஆட்பட்டிருத்தலே ஆன்மாவிற்கு உரியது என்றது. 2. 'ஏறாளும் இறையோனும்' (4–8) அவனுக்குப் பயன்படாதவை எல்லாம் விடத்தக்கன என்றது. 'கண்கள் சிவந்து' (8–8) ஆத்மா எம்பெருமானுக்கு உடலாகஇ அடிமையாக, ஞான ஆனந்தமயமாக இருக்கும் என்றது. 4. 'கருமாணிக்க மலை' (8–9) ஆத்மா அவன் ஒருவனுக்கே உரியது என்றது.

3. விரோதி ஸ்வரூபம் (எம்பெருமானை அடையவிடாமல் தடுக்கும் விரோதிகளின் நிலை): 1. 'வீடுமின் முற்றவும்' (1–2) அகங்கார மமகாரங்கள் விடத்தக்கவை. 2. சொன்னால் விரோதம்' (3–9) எம்பெருமானைத் தவிர, பிறர்க்கு அடிமைப்பட்டிருத்தல் தகாது. 3. 'ஒரு நாயகமாய்' (4–1) ஐச்வர்ய கைவல்யங்கள் விடத்தக்கவை என்றது. 4. 'கொண்ட பெண்டிர்' (9–1) உடல் தொடர்பு காரணமாக வரும் உறவினர்கள் விடத் தக்கவர்கள் என்றது.

4. உபாய ஸ்வரூபம் (எம்பெருமானை அடையும் வழியின் நிலை): 1. 'நோற்ற நோன்பு' (5–7) கைம்முதல் இல்லாமையைக் கொண்டு பற்றுதல். 2.

'ஆராவமுதே' (5–8) வேறு கதி இல்லாமையைக் கொண்டு பற்றுதல். 3. 'மானேய் நோக்கு' (5–9) பக்தியின் வசப்பட்டமையைக் கொண்டு பற்றுதல். 4. 'பிறந்தவாறும்' (5–10) அவன் குணங்களை நினைக்க முடியாத அளவு உருக் குலைந்ததனால், அது நீங்கிப் பற்றுதல்.

5. பலஸ்வரூபம் (உபாயத்தால் அடைகின்ற பேற்றின் நிலை): 1. 'எம்மாவீடு' (2–9) தமக்காகச் செய்யும் கைங்கர்யமும் வேண்டா என்றது. 2. 'ஒழிவில் காலம்' (3–3) எல்லாக் கைங்கர்யங்களையும் செய்யவேண்டும் என்று பாரித்தது. 3. 'நெடுமாற்கடிமை' (8–10) அவ்வடிமை அடியவர்களுக்குச் செய்யும் தொண்டளவாக விரும்பியது. 4. 'வேய்மரு தோளிணை' (10–3) அவனுடைய மனநிறைவே பேறாக இருத்தலைக் கூறியது.

இவ்வாறு திருவாய்மொழியின் இருபது பதிகங்களிலே தெளிவுபடுத்தப்பட்ட இந்த அர்த்தங்கள் மற்றை எண்பது பதிகங்களாலும் விளக்கிச் சொல்லப்படுகின்றன. ஆகவே அர்த்த பஞ்சகமே திருவாய்மொழியில் சொல்லப்பட்டுள்ள பொருளாக நம்பிள்ளை முதலிய மற்றைய ஆசாரியர்கள் அருளிச் செய்தமையை நாயனார் விளக்கிக் காட்டியுள்ளார்.

## திருவிருத்தம், திருவாய்மொழி முதற்பாசுரங்கள்

நம்மாழ்வாருடைய முதற்பிரபந்தமான திருவிருத்தத்திலும், கடைசி பிரபந்தமான திருவாய்மொழியிலும் உள்ள முதற்பாசுரங்களில் அர்த்த பஞ்சகம் சுருக்கமாக அருளிச் செய்யப்பட்டிருப்பதையும், வேறு சில அர்த்தங்களும் சுருக்கமாக அருளிச் செய்யப்பட்டிருப்பதையும் நாயனார் நிரூபிக்கிறார்.

| அர்த்தபஞ்சகம் | திருவிருத்தம் | திருவாய்மொழி |
|---|---|---|
| 1. பரஸ்வரூபம் | இமையோர்தலைவா | அயர்வறுமமரர்களதிபதி |
| 2. ஆத்மஸ்வரூபம் | அடியேன் | என்மனனே |
| 3. விரோதிஸ்வரூபம் | பொய்ந்நின்ற ஞானம் | மயர்வு (அறிவின்மை) |
| 4. உபாயஸ்வரூபம் | பிறந்தாய் | அருளினன் |
| 5. பலஸ்வரூபம் | விண்ணப்பம் | தொழுதெழு |

## 1. அறிவின்மை முதலியவற்றின் சொரூபமும் தன்மையும்

"பொய்ந்நின்ற ஞானம்" என்று தொடங்கி அறிவின்மை முதலியவற்றைச் சொல்லும் பொழுது சரீரத்தில் ஆத்ம புத்தியும், அதனடியாக தீவினைகளைச் செய்தலும், அதனால் உண்டான உடலின் சம்பந்தமும் ஆகிய

அறிவின்மை முதலிய விரோதியின் சொரூபம் சொல்லப்பட்டுள்ளது. விபரீத ஞானத்திற்குக் காரணமாயிருத்தல், இவ்வுலக வாழ்க்கைக்குக் காரணமாயிருத்தல், சொரூபத்தை மறைத்தல் , "இனியாமுறாமை" என்கையாலே அநாதியாக இருக்கும் தன்மை "மயர்வற மதிநலம்" என்கையாலே நன் ஞானத்தினால் அவை விலகக் கூடியனவாக இருத்தல் முதலான விரோதியின் தன்மைகள் சொல்லப்பட்டுள்ளன.

## 2.ஆன்மாவிற்கும் எம்பெருமானுக்குமுள்ள தொடர்பு

திருவிருத்தத்தில் "இமையோர் தலைவா – அடியேன்" என்றும் திருவாய்மொழியில் "அதிபதி – அடிதொழுது" என்றும் ஆன்மாவிற்கும் ஈச்வரனுக்கும் உண்டான சேஷ–சேஷிபாவ சம்பந்தம் கூறப்பட்டுள்ளது.

## 3. இறைவனுடைய பாதுகாக்கும் முறை

திருவிருத்தத்தில் "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாயப் பிறந்தாய்" என்று எம்பெருமான் பல அவதாரங்களைப் பண்ணி அடியார்களைக் காப்பாற்றும் தன்மை சொல்லப்பட்டுள்ளது. "மயர்வற மதிநல மருளினன்" என்று திருவாய்மொழியில் பிறப்பிறப்புக்குக் காரணமான அறிவின்மையைப் போக்கி உய்வதற்குக் காரணமான ஞானபக்திகளைத் தன் அருளாலே தந்த படியைச் சொல்லியிருப்பதால் எம்பெருமானுடைய காக்கும் தன்மை சொல்லப்பட்டுள்ளது.

## 4. குணங்களை, திருமேனியை உடையவனாயிருத்தல்

"உயர்வற உயர் நலம்", "துயர் அறுசுடரடி" என்று குணமும் திருமேனியும் உடையவனாயிருக்கும் தன்மை சொல்லப்பட்டுள்ளது.

## 5. உலகங்களை உடையவனாயிருத்தல்

"இமையோர் தலைவா" என்றும், "அயர்வறும் அமரர்கள் அதிபதி" என்றும் உள்ளதால் விபூதியோகம் (உலகங்களை உடையனாம் தன்மை) சொல்லப்பட்டுள்ளது.

## 6. உபதேசத்திற்கு விஷயம்

"நின்று கேட்டருளாய்" என்றும் "தொழுது எழு என் மனனே" என்றும் சொல்லுகையாலே தன்னுடைய நெஞ்சைப்போலே தனக்கு அடங்கியுள்ள எம்பெருமானும், அவ்வாறு அடங்கியிருக்கும் மற்ற ஜீவர்களும் உபதேசத்திற்கு விஷயம் என்று காட்டப்பட்டுள்ளது.

## 7. அந்யாபதேசப் பேச்சுக்களுக்குக் காரணம் பக்தி

"நலமருளினன்" என்று பக்தியைத்தந்தமை சொல்லப் பட்டிருக்கையாலே, தாய் பாசுரமாகவும், தலைவி பாசுரமாகவும், தோழி பாசுரகமாகவும் அந்யாபதேச முறையில் பாசுரங்கள் அவதரிக்கக் காரணம் பக்தி என்னப்பட்டது.

## திருவாய்மொழி பத்துப் பத்தாக அவதரித்ததன் பயன்

திருவாய்மொழி பத்துப் பத்தாக அவதரித்த விதத்தை நாயனார் அழகுற விளக்குகிறார். எம்பெருமான் உலகத்தைக் காக்கப் பத்து அவதாரங்கள் எடுத்ததைப் போல, இத்திருவாய்மொழியும் உலகோரைக் காக்க, அவர்கள் உய்யும் வகையைக் கூறப் பத்துப் பத்தாக அவதரித்தது என்கிறார். எம்பெருமானுடைய பத்து அவதாரங்களுக்கு உண்டான பலன் திருவாய்மொழி அவதரித்ததற்கும் உண்டு என்பதை ஆழ்வாரருளிச் செயல்களைக் கொண்டே நிரூபிக்கிறார்.

| எம்பெருமான் | திருவாய்மொழி |
|---|---|
| 1. "சாதுசனத்தை நலியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு"[1] என்றும் "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதாம்"[2] என்றும் சொல்லியபடி எம்பெருமான் நல்லவர்களைக் காப்பதற்கும், தீயவர்களை அழிப்பதற்கும் அவதரித்தான். | 1. "நண்ணா அசுரர்நலிவெய்த நல்ல அமரர்பொலிவெய்த"[1] என்கிற படியே எம்பெருமானிடத்தில் பக்தி இல்லாத அசுரத் தன்மை வாய்ந்த வர்கள் அழியவும், எம்பெருமா னிடம் பக்தி உள்ளவ தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள் வாழவும் திருவாய்மொழி அவதரித்தது. |
| 2. "மயர்வறமதிநலம் அருளினன்"[3] என்கையால் அறிவின்மையைப் போக்கி ஞானத்தையும், பக்தியையும் கொடுப்பான் என்பது விளங்கும். | 2. "இப்பத்து உள்ளத்தை மாசறுக் குமே"[2] என்ற பாசுரத்தினால் அறிவின்மையைப் போக்குதலும், "தெருள்கொள்ளச் சொன்ன ஓராயிரம்"[3] என்பதால் ஞானத் தைக் கொடுத்தலும், "தூயவாயிரத் திப்பத்தால் பத்தராவர்"[4] |

1 திருவாய்மொழி 3-5-5 2. கீதை 4-8
3. திருவாய்மொழி 1-1-1

1. திருவாய்மொழி 10-7-5 2. மேலது 5-2-11
3. மேலது 2-10-11 4. மேலது 6-4-11

3. "அடிமை அறக் கொண்டாய்"[1] என்கிறபடியே எம்பெருமான் நம்மை வேறு ஒருவர்க்கன்றித் தனக்கே உரிய அடியவனாக ஆக்குவான்.

4. "அரியை வணங்கி அறிந்தனர் நோய்களறுக்கும்மருந்தே"[2] என்கிறபடி எம்பெருமான் பிறவியென்னும் நோய்க்கு மருந்தாவான்.

5. 'ஏற்றரும்வைகுந்தத்தையருளும்'[3] என்கிறபடி எம்பெருமான் பரமபதத்தை அளிப்பான்.

6. "தன்தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யும் சேமம்"[4] என்கிறபடி நம்மைத் தன் திருவடிகளின் கீழ்ச் சேர்த்துக் கொள்வான்.

7. "இன்பக்கதி செய்யும் தெளிவுற்ற கண்ணனை"[5] என்கிறபடியே தன்னையடைந்தவர்களுக்குத் தன்னுடைய அநுபவமாகிற எல்லை யில்லாத ஆனந்தத்தோடு கூடிய பேற்றினைக் கொடுப்பான்.

8. "ஊடுபுக்கு எனதாவியை உருக்கி யுண்டிடுகின்ற நின்தன்னை"[6]

1. மேலது 4-9-6
2. மேலது 9-3-3
3. மேலது 7-5-10
4. மேலது 7-5-10
5. மேலது 7-5-11
6. மேலது 5-10-10

என்பதனால் பக்தியைக் கொடுத்தலும், திருவாய்மொழிக் கும் உண்டு என்பது விளங்கும்.

3. "தெரியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்து, உரிய தொண்டராக்கும் உலகமுண்டாற்கே"[1] என்கிற படி மற்றொருவர்க்கன்றி எம்பெருமா னுக்கே அடியவனாக ஆக்கு ம்.

4. "மிடைந்த சொல் தொடை ஆயிரத்துள் இப்பத்து உடைந்து நோய்களை ஒடுவிக்குமே"[2] என்கிறபடி திருவாய்மொழியும் சம்சாரமாகிற நோய்க்கு மருந்து.

5. 'வானின் மீதேற்றி அருள் செய்து"[3] என்கிறபடியே திருவாய் மொழி பரமபதத்தைக் கொடுக்கும்.

6. "அருளி அடிக் கீழிருந்தும்"[4] என்கிறபடியே இத் திருவாய்மொழியும் எம்பெருமான் திருவடிக்கீழ் நம்மைச் சேர்விக்கும்.

7. "ஓராயிரத்துளிப்பத்து எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்குமே"[5] என்கிறபடியே திருவாய்மொழியும் தன்னைக் கற்பவர்களுக்கு எம்பெருமானுடைய அனுபவமான ஆனந்தத்தை உண்டாக்கும்.

8. "ஒன்பதோடு ஒன்றுக்கும் மூவுலகும் உருகுமே"[6] என்கிறபடி

1. மேலது 6-9-11
2. மேலது 1-7-11
3. மேலது 8-4-11
4. மேலது 8-8-11
5. மேலது 7-9-11
6. மேலது 9-5-11

| | |
|---|---|
| என்கிறபடி எம்பெருமானை அநுபவிக்க இழிந்தவர் களை நீர்ப்பண்டமாக உருக்குவான். | இத்திருவாய் மொழியும் தன்னை அநுபவிக்க இழிந்தவர்களை நீர்ப் பண்டமாக உருக்கும். |

இத்தகைய ஒப்புமைகளால் இத்திருவாய்மொழியில் சொல்லப்பட்ட பொருளான எம்பெருமானுடைய பத்து அவதாரங்கள் போல "தோற்றங்களாயிரம்" என்கிறபடி திருவாய்மொழியினுடைய பத்துப் பத்தான தோற்றம் உண்டாயிற்று.

## நிகமனப் பாசுரங்களின் கருத்து

திருவாய்மொழியின் ஒவ்வொரு பதிகத்தின் முடிவிலும், 'ஐந்தினோடு ஐந்தும்', 'ஒன்பதோடு ஒன்று' என்பன போன்று அருளிச் செய்துள்ள ஆழ்வாருடைய திருவுள்ளக் கருத்தையும் நாயனார் விளக்குகிறார்.

"ஐந்தினோடு ஐந்தும் வல்லார்"[1] என்பதற்கு, அப்பதிகத்தின் முன் ஐந்து பாசுரங்களுக்கு ஒரு கருத்தும், பின் ஐந்து பாசுரங்களுக்கு ஒரு கருத்தும் அமைந்து உள்ளது என்பது பொருள். "ஒன்பதோடு ஒன்றுக்கும்"[2] என்பதற்கு அப்பதிகத்தின் ஒன்பது திருப்பாசுரங்களுக்கு ஒரு கருத்தும், ஒரு பாசுரத்திற்கு ஒரு கருத்தும் அமைந்துள்ளதென்பது பொருள். 'பாடல் ஓராயிரத்துள் இவையும் ஒரு பத்து"[3] என்பதற்கு அப்பதிகத்திலுள்ள பத்துப் பாசுரங்களுக்கும் ஒரே கருத்து என்றும் "நூறே சொன்ன ஓராயிரம்"[4], "பத்து நூற்றுள் இப்பத்து"[5] என்றதற்கு, பத்துக்கள் தோறும் வெவ்வேறு கருத்து என்றும், "மிக்க ஓராயிரம்"[6] என்பதற்கு ஆயிரம்பாசுரங்களுக்கும் ஒரே கருத்து என்றும் பொருள் என்றும் காட்டுகிறார்.

## உபதேசப் பதிகங்கள்

ஒவ்வொரு பாசுரத்திற்கும் வினைமுற்று முக்கியமாக இருப்பதைப் போலவும், ஒவ்வொரு பதிகத்திற்கும் ஒவ்வொரு பாட்டு முக்கியமாக இருப்பதைப் போலவும், ஒவ்வொரு நூறு பாசுரங்களுக்கும் பரோபதேசமான பத்துப் பாசுரங்கள் முக்கியமானவையாக இருக்கும் என்கிறார்.

எம்பெருமானுடைய பரத்வம் முதலான குண விசேஷங்களைத் தனித்துத் தம்மால் அனுபவித்து முடிக்க வொண்ணாமையாலே "அடியார் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ"[7] என்று தம்மோடு கூட

1. திருவாய்மொழி 10-2-11 2. மேலது 9-5-11 3. மேலது 3-4-11 4. மேலது 9-4-11
5. மேலது 6-7-11 6. மேலது 7-6-11 7. மேலது 2-3-9

அநுபவிப்பாரைத் தேடி, கிடைக்காமையாலே இவ்வுலக மக்களுடைய குற்றம் குறைகளைப் பார்க்காமல் பகவானுடைய குணங்களிலே ஈடுபடுத்தித் திருத்தி அவர்களைச் சேர்த்துக் கொள்வதற்காக உபதேசத்திலே ஈடுபடுகிறார். அதனால் நூற்றுக்கு உபதேசப்பத்து முக்கியம் என்கிறார்.

அவ்வாறு உபதேசமாக அமைந்த பதிகங்கள் எனையெவையென்னில்: முதற்பத்தில் – வீடுமின் முற்றவும்,[1] இரண்டாம் பத்தில் – கிளரொளியிளமை,[2] மூன்றாம்பத்தில் – சொன்னால்விரோதம்,[3] நாலாம் பத்தில் – ஒன்றுந்தேவும்,[4] ஐந்தாம் பத்தில் – பொலிக பொலிக,[5] ஆறாம்பத்தில் – நல்குரவுஞ்செல்வும்,[6] ஏழாம் பத்தில் – இன்பம் பயக்க,[7] எட்டாம் பத்தில் – எல்லியும் காலையும்,[8] ஒன்பதாம் பத்தில் – மாலை நண்ணி,[9] பத்தாம் பத்தில் – கண்ணன் கழலிணை[10] ஆகியவையாகும்.

## பாகவதர்களைப் பற்றிக் கூறப்பட்டிருப்பதன் கருத்து

எம்பெருமானைப் பற்றிய பிரபந்தமாகிய திருவாய்மொழியில் 'பயிலுஞ் சுடரொளி'[11] முதலான பாகவதர்களைப் பற்றிக் கூறுகிற திருவாய்மொழிகள் அமைந்ததற்கான காரணத்தை நாயனார் கூறுகிறார். "திருநாரணன்தாள் காலம் பெறச் சிந்தித்துய்ம்மினோ'[12] முதலான பாசுரங்களினால் ஆராதிக்கப்படுகிற எம்பெருமானை அடைதலானது பாகவதர்களை அடிபணிந்தாலல்லது முடியாததாகையாலே, பாகவதர்களை வணங்க வேண்டும் என்கிற விதியானது எம்பெருமானை அடைவதற்கு உரிய அங்கமாகக் கொள்ளவேண்டும்.

## ஒவ்வொரு பத்திலும் அருளிச் செய்யப்பட்டுள்ள குணங்கள்

ஆழ்வார் ஒவ்வொரு பத்திலும் அருளியுள்ள எம்பெருமானுடைய திருக் கல்யாண குணங்களை நாயனார் எடுத்துக் காட்டுகின்றார். முதற்பத்தில் – பரத்வம் (மேலானவனாதல்), இரண்டாம்பத்தில்–காரணத்வம் (காரணனாதல்), மூன்றாம் பத்தில் – வியாபகத்வம் (பரந்திருத்தல்), நாலாம்பத்தில் – நியந்த்ருத்வம் (நியமிக்கின்றவனாதல்), ஐந்தாம்பத்தில்–காருணிகத்வம் (பேரருளாளனாதல்), ஆறாம் பத்தில்–சரண்யத்வம்(புகலிடமானவனாதல்), ஏழாம்பத்தில் – சக்தத்வம் (பேராற்றலை யுடையவனாதல்), எட்டாம்பத்தில் – சத்யகாமத்வம் (அனுபவத்திற்குரிய பொருள் எல்லாம் நித்யமாக அமையப்பெற்றவனாதல்), ஒன்பதாம்பத்தில் – ஆபத்ஸகத்வம் (ஆபத்திலே

---

1. திருவாய்மொழி 1-2 | 2. மேலது 2-1 | 3. மேலது 3-9 | 4. மேலது 4-10
5. மேலது 5-2 | 6. மேலது 6-3- | 7. மேலது 7-10 | 8. மேலது 8-6
9. மேலது 9-10 | 10. மேலது 10-5 | 11. மேலது 3-7 | 12. மேலது 4-1-1

துணை செய்யுமவனாதல்), பத்தாம் பத்தில் – ஆர்த்தி ஹரத்வம் (பிறவித் துன்பத்தை நீக்குமவனாதல்) என்றிவ்வாறு பத்துப் பத்துக் களாலும் பத்து குணங்களோடு கூடியவனாக அருளிச் செய்யப்பட்ட எம்பெருமான் ஆழ்வாருக்கு பக்திரூபமான ஞானத்தை அருளி அறிவின்மையைப் போக்கினான் என்கிறார்.

## ஆழ்வார் அடைந்தபேறு

எம்பெருமானால் அருளப்பெற்ற ஆழ்வார், தாம் பெற்ற பேற்றை ஒவ்வொரு பத்திலும் வெளியிட்டுள்ளமையை பாசுரங்களைக் கொண்டே காட்டுகிறார்.

1. எம்பெருமானைப் பற்றிய ஞானமாகிற உண்மை அறிவைப் பெற்றபின் "மறப்பனோ இனியான் என் மணியை"[1] என்கிறபடியே மறப்பு இல்லாமையாகிற பேற்றைத் தாம் பெற்றவிதத்தை ஆழ்வார் முதற் பத்தில் வெளியிட்டார்.

2. அந்த ஞானத்தின் பலமான மோக்ஷத்தை "நின் செம்மாபாத பற்புத் தலை சேர்த்து"[2] என்கிறபடியே தம் பாரதந்த்ரிய சொரூபத்திற்குத் தகுதியாக அறுதியிடுகிற பேற்றைப் பெற்றதை இரண்டாம் பத்திலே தெரிவித்தார்.

3. கீழே அறுதியிட்ட அந்த மோட்சத்திற்குப் பலமான கைங்கரியத்தை "வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்"[3] என்ற பிரார்த்திக்கும் பேற்றைப் பெற்றதை மூன்றாம் பத்தில் அருளினார்.

4. அந்தக் கைங்கரியத்திற்குப் பலன் உலக வாழ்க்கையிலே உள்ள மற்றைப் பொருட்களில் ருசி (விருப்பம், ஆசை) நீங்குதலாகையாலே அப்பேறு பெற்றதை "ஐங்கருவி கண்ட இன்பம் – சிற்றின்பம் ஒழிந்தேன்"[4] என்று நான்காம் பத்திலே காட்டியருளினார்.

5. மேலே குறிப்பிட்ட உலக வாழ்வில் விரக்திக்குப் பயனாய் எம்பெருமானிடத்தில் உண்டாகும் பக்தி மிகுதலாகிய பேற்றை, "கழிய மிக்கதோர் காதலளிவள்"[5] என்று ஐந்தாம் பத்தில் கூறியருளினார்.

6. எல்லை இல்லாத பக்திக்குப் பயன் உபாயமாக இறைவனைப் பற்றுத லாகையால் "அலர்மேல்மங்கை உறைமார்பா–உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே"[6] என்று உபாயஸ்வீகாரமாகிற பேற்றைப் பெற்றபடியை ஆறாம் பத்தில் வெளியிட்டார்.

---

1. திருவாய்மொழி 1-10-10 2. மேலது 2-9-1 3. மேலது 3-3-1 4. மேலது 4-9-10
5. மேலது 5-5-10 6. மேலது 6-10-10

7. உபாயமாக இருக்கிற இறைவனாலே கிடைத்த பலனாய்த் திருவாய்மொழி பாடுதலாகிய உபகாரத்திற்குக் கைம்மாறாக "உதவிக் கைம்மாறு என்னுயிர்"[1] என்று ஆத்மாவினைக் கொடுக்கத் தேடி அவ்வாத்மாதானும் தம்மதன்றாய், அவனுடையதே யென்று அறிகையாலே, "எதுவும் ஒன்று இல்லை செய்வது இங்கும் அங்கே"[1] என்று கைம்மாறு காணாது தடுமாறுதலாகிய பேறு பெற்றதைச் சொன்னார் ஏழாம் பத்தில்.

8. செய்ந்நன்றியறிதலுக்குக் கைம்மாறாக, பக்தியால் முன்பு கலங்கிக் கொடுக்க நினைத்த ஆன்மாவின் உண்மைத்தன்மையறிதலாகிற பேற்றைப் பெற்றதை எட்டாம்பத்தில் தெரிவித்தார்.

9. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டதான ஆன்மாவின் தன்மையை அறிந்ததற்குப்பயன் எம்பெருமானை அடைவதாகையால் "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்"[2] என்கிறபடியே சரீரத்தின் முடிவில் செய்கிறோம் என்று அவன் அப்பயனுக்கு நாளிட்டுக் கொடுக்கப் பெறுதலாகிற பேற்றைப் பெற்றமையை ஒன்பதாம் பத்தில் தெரிவித்தார்.

10. அவனை அடையும் நாள் அணித்தானதற்குப் பயன் அர்ச்சிராதி மார்க்கத்தால் போவதாகையால் அந்த அர்ச்சிராதி மார்க்கத்திற்கு "காளமேகத்தை அன்றி மற்றொன்றிலம் கதி"[3] என்று அந்த எம்பெருமானையே துணையாகக் கூட்டிக் கொண்ட பேற்றை பத்தாம் பத்தில் வெளியிட்டார்.

இதனால், பரத்வம் முதலான குணங்களோடு கூடின எம்பெருமான் ஆழ்வாருக்குச் செய்த பேற்றைப் பிறரறிந்து உய்யும்படி பத்துப் பத்துக்களிலும் ஆழ்வார் வெளியிடுவதாக நாயனார் காட்டுகிறார்.

திருவாய்மொழியின் பத்துப் பத்திலும் எம்பெருமானுடைய பரத்வம் முதலான பத்து குணங்கள் சொல்லப்பட்டுள்ளதாகக் கூறிய நாயனார் ஆசார்யஹ்ருதயத்தின் நான்காம் பிரகரணத்தில் ஒவ்வொரு பத்துப்பதிகங்களுக்கும் ஒவ்வொரு சூர்ணையாக பத்து சூர்ணைகளால் எம்பெருமானுடைய பத்து குணங்களையும் பல பாசுரங்களைக் கொண்டு விளக்கிக் காட்டுகிறார். "நூறே சொன்ன"[4], "பத்து நூறு"[5] என்கிறபடியே நூறு பாசுரங்களுக்கும் ஒரே கருத்தை விரிவாகக் கூறியுள்ளார்.

---

1. திருவாய்மொழி 7-9-10 2. மேலது 9-10-5 3. மேலது 10-1-1 4. மேலது 9-4-11
5. திருவாய்மொழி 6-7-11

## ஆழ்வார் பிரார்த்தித்தபோதே மோட்சமளிக்காமைக்குக் காரணம் :

ஆழ்வார் முதன்முதலில் திருவிருத்தத்தில் "இந்நின்ற நீர்மை இனியா முறாமை"[1] என்று சரணம் புகுந்தபொழுதே, எம்பெருமான் விரோதிகளைக் கழித்து ஆழ்வாரைத் தன் திருவடித் தாமரைகளில் சேர்த்துக் கொள்ளாமல் இவ்வுலகில் துடிக்கவிட்டதற்கான காரணங்களை நாயனார் காட்டுகிறார்.

1. எம்பெருமான், தன்னுடைய படைப்பினாலும் அவதாரங்கள் முதலியவற்றாலும் திருந்தாத இவ்வுலகம் இவருடைய உபதேசத்தாலே, "ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல் அவனுடைய பேரும் தார்களுமே பிதற்ற"[2] என்னும்படி திருந்துகைக்காக ஆழ்வாரை இவ்வுலகில் வைத்தான்.

2. பிரபத்தி செய்த உடன் மோட்சம் கொடுத்தால் உலகத்தார்கள் பிரபத்தியை நச்சுப் பொய்கையாக நினைத்து அஞ்சி ஒருவரும் அதில் ஈடுபடமாட்டார்களாகையாலே, அப்படி ஆகாமைக்காக ஆழ்வாரை இந்நிலவுலகில் வைத்தான்.

3. தானும் தன் உலகமும் வாழும்படி இவரைக் கொண்டு கவிபாடுவிக்கத் தொடங்கிய பிரபந்தம் முடிவுபெறுவதற்காக வைத்தான்.

4. வேர்சூடுமவர்கள் அதன் வாசனையில் உள்ள விருப்பத்தாலே மண் பற்றுக் கழற்றாமல் சூடுவது போலே ஞானிகளைச் சரமசரீரத்தோடே வைத்து அநுபவிக்கையில் எம்பெருமான் மிகவும் ஆசையுடையவனாகையாலே ஆழ்வாருடைய ஞானம் பக்தி என்னும் வாசனை எல்லாம் தோற்றும்படி இருக்கிற திருமேனியில் தனக்கு உண்டான விருப்பத்தாலே வைத்தான்.

இவையெல்லாம் காரணங்களாகச் சொல்லப்பட்டாலும் இவற்றைவிட மிக முக்கியமான காரணத்தை நாயனார் அருளிச் செய்கிறார். "இனி இனியென்று இருபது முறை கூப்பிடும்படியான ஆர்த்தியை விளைத்துப் பரமபக்தி முடிய உள்ள அதிகார பூர்த்தியை உண்டாக்குகைக்காகவே எம்பெருமான் ஆழ்வாருக்கு உடனே மோட்சமளிக்காமல் இவ்வுலகில் வைத்தான் என்று நாயனார் கூறுகிறார். ஆழ்வார் திருவாய்மலரத் தொடங்கியவுடன் முதன் முதலில் அருளிச்செய்த திருவிருத்தத்தின் முதற்பாசுரத்தில் "இந்நின்ற நீர்மை இனியாமுறாமை"[1] என்று தொடங்கி, நான்காவது பிரபந்தமான திருவாய்மொழியின் கடைசி பதிகத்தில் "பெற்று

1. திருவிருத்தம் -1 2. திருவாய்மொழி 6-7-2 3. திருவிருத்தம் - 1

இனிப் போக்குவனோ"[1] என்பது முடிவாக இனி என்று சரியாக இருபது இடங்களில் அருளிச் செய்துள்ளமையை நாயனார் கணக்கிட்டுக் கூறுவது குறிப்பிடத்தக்கது.

## ஆழ்வாருடைய பக்திநிலை

"கமலக் கண்ணன் என் கண்ணினுள்ளான்"[2] என்று தாமரைக் கண்ணனானவன் என் கண்ணுக்குப் புலப்புடலானான் என்று தொடங்கி "கண்ணுள் நின்றகலான்"[3] என்று எனது கண்வட்டத்தில் நின்றும் அகலமாட்டான் என்னுமதுவரை பத்துத் திருப்பாசுரங்களிலும் கூறிய காணுதல் "நெஞ்சு என்னும் உட்கண்"[4] என்கிற அகக்கண்ணான மனத்தாலே உண்டானதாய், புறக் கண்களாலே அவனைக் காண ஆசைப்பட்டுக் கூப்பிட்ட திருப்பாசுரங்கள் இருபது உண்டு. ஆகையாலே "கண்டு களிப்பக் கண்ணுள் நின்றகலான்"[5] என்கிற திருப்பேர்நகர்ப் பாசுரம் வரையில் ஆழ்வாருக்கு பரஜ்ஞானத்தை உள்ளே கொண்டிருக்கிற பரபக்தி நிலை.

"அடியார்கள் குழாங்களை – உடன்கூடுவது என்று கொலோ"[6] என்று ஆசைப்பட்டபடியே "அந்தமில்பேரின் பத்து அடியரோடு இருந்தமை"[7] என்று அர்ச்சிராதி நெறியாலே பரமபதத்திற்குச் சென்று எம்பெருமானுடைய சொரூபம் முதலியவற்றை அனுபவிக்கிற நித்யசூரிகள் திரளிலே கூடியிருந்தாராகக் கண்டு பேசிய "சூழ்விசும்பணி முகில்"[8] என்ற பதிகத்தில் முழுமையான பரஞான நிலை.

## பரமபக்தி நிலை

"அந்தமில் பேரின் பத்து அடியரோடு இருந்தமை"[9]யாகக் கண்ட அதுதான் மனத்தின் அனுபவமாய் வெளியில் அனுபவிக்கும் அனுபவத்திற்குத் தக்கதாக இல்லாமையால் பெருவிடாய் பிறந்து அரற்றித் தரிக்கமாட்டாமல் திருவாணை யிட்டுத் தடுத்துப் பேற்றோடே தலைக்கட்டின "முடிந்த அவாவிலந்தாதி இப்பத்து"[10] என்கிற "முனியே நான்முகனே"[11] என்ற கடைசித் திருவாய்மொழி, பக்தியினுடைய முடிந்த நிலமான பரமபக்திநிலை.

எம்பெருமானைக் கூடுதலும் பிரிதலுமே இன்பதுன்பங்களாம்படியான பரமபக்தியானது ஞான அவஸ்தையாகவும், எம்பெருமானுடைய சொரூப ரூப

---

1. திருவாய்மொழி 10-10-8
2. மேலது 1-9-9
3. மேலது 10-8-8
4. பெரிய திருவந். 28
5. திருவாய்மொழி 10-8-7
6. மேலது 2-3-10
7. மேலது 10-9-11
8. மேலது 10-9
9. திருவாய்மொழி 10-9-11
10. மேலது 10-10-11
11. மேலது 10-10

குண விபூதிகளை மிகத் தெளிவாகக் கண்டால் கண்டது போல் அறிகிற பரஞானமானது தரிசன அவஸ்தையாகவும், அப்படி அறிந்த பொருளை அப்பொழுதே கிட்டி அனுபவிக்கப் பெறாவிடில் முடிந்து போகும்படியான பரமபக்தியானது பிராப்தி அவஸ்தையாகவும் சொல்லப்படும்.

### திருவாய்மொழியின் திரண்ட பொருள்

பிறப்பு இறப்புகட்குக் காரணமான அஞ்ஞானத்தைப் போக்குவதான ஞானத்தின் நிறைவினைக் கொடுத்த ஞானம் முதலான குணங்கள் நிறைந்தவனான எம்பெருமானுடைய திருவருளாலே, இவ்வுலக வாழ்வினை நீக்குதல் முதல் எம்பெருமானை அடைதலாகிற மோட்சத்தினுடைய லாபம் என்று சொல்லுதல் "மயர்வற மதிநலம் அருளினன்"[1] என்று தொடங்கி "அவாவற்று வீடு பெற்ற"[2] என்று தலைக்கட்டின இப்பிரபந்தத்துக்கு ஒன்றான கருத்துப் பொருள் என்று கூறி நாயனார் ஆசார்யஹ்ருதயத்தைத் தலைக்கட்டுகிறார்.

# அருளிச் செயல் ரஹஸ்யம்

இந்நூலில் திருமந்திரம், சரமச்லோகம், த்வயம் முதலிய மூன்று ரஹஸ்யங்களுக்கும் நாயனார் விளக்கம் அருளியுள்ளார். இந்நூல் ஆசார்யஹ்ருதயம் போல் சூர்ணைகள் வடிவில் அமையவில்லை. ஆயினும் ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்யப்பிரபந்தப் பாசுரங்களின் சொற்களைக் கொண்டே எழுதப்பட்டுள்ளமையால் இந்நூலுக்கு அருளிச்செயல் ரஹஸ்யம் என்ற பெயர் ஏற்பட்டது. மேலே குறிப்பிட்ட மூன்று மந்திரங்களின் விளக்கமாகப் பிள்ளை லோகாசாரியர் அருளியுள்ள நூல்களின் அடிப்படையிலேயே இந்நூலும் அமைந்திருந்தாலும் பல புதிய விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன.

### தில் அருளிச் செய்யப்பட்ட விஷயங்களின் தொகுப்பு

ஜீவாத்மாக்கள் பக்தர், முக்தர், நித்யர் என மூவகைப்பட்டிருப்பர். நாயனார் இவர்களை முத்து மாணிக்கங்களோடு ஒப்பிடுகிறார். தானாகவே ஒளியையுடைய சில முத்து மாணிக்கங்களைப் போல நித்யர்கள் இயற்கையாகவே சுத்தி உடையவர்கள் என்றும், சுத்தப்படுத்தப்பட்டு நல்லவற்றோடு சேர்க்கப்பட்ட முத்துமாணிக்கங்கள் போல முத்தர்கள்

1. மேலது 1-1-1
2. மேலது 10-10-11

கர்மத்தின் வயப்பட்டிருந்து, அதிலிருந்து விடுபட்டவர்கள் என்றும், அசுத்தங்களாகவே உள்ள முத்து மாணிக்கங்கள்போல பத்தர்கள் கர்மத்திலேயே உழன்றுகொண்டிருப்பர்கள் என்றும் நாயனார் ஒப்பிட்டுக் காட்டுகிறார். ஆத்மாவின் தன்மை மாறுபடாதது; ஜீவாத்மாக்களுக்குச் சிறுமை, பெருமை தர்மபூத ஞானத்தினால் வந்தது என்கிறார்.

நித்யசூரிகளைப் போலே சம்சாரிகளும் எம்பெருமானை அனுபவிக்க வேண்டியிருக்க அவர்கள் எம்பெருமானுடைய சொரூபத்தையும், தங்களுடைய சொரூபத்தையும் மறந்து பகவதனுபவத்தை இழந்து கிடக்கின்றனர். அவர்கள் உய்யும் பொருட்டு எம்பெருமான் வேதாந்த தாத்பர்யமான திருமந்திரத்தை நரநாரயணனாய்த் தானே பத்ரிகாச்ரமத்தில் வெளியிட்டருளினான்.

## திருமந்திரத்தின் பெருமை

திருமந்திரம் அர்த்தபூர்த்தியை உடையதாக இருப்பதாலும், மற்ற மந்திரங்களிலும் ஏற்றத்தை உடையதாக இருப்பதாலும், ஆழ்வார்களும், ஆசாரியர்களும் இதையே விரும்புகையாலும் "குலந்தரும்" என்கிறபடியே அவரவர் விரும்பும் பலன்களை அளிப்பதாலும், எம்பெருமான் "தெய்வத்துக்கரசு" என்னப்படுவது போல இத் திருமந்திரமும் "மந்த்ராணாம்ராஜா மந்த்ர ராஜ:" என்கிறபடியே எல்லா மந்திரங்களிலும் மேலானதாக இருக்கும். இத் திருமந்திரத் திலும், இதற்குப் பொருளான எம்பெருமானிடத்திலும் இம்மந்திரத்தை நமக்கு உபதேசித்த ஆசார்யனிடத்திலும் அன்பு மிகுந்திருந்தால் இம்மந்திரம் பயனளிக்கும்.

## திருமந்திரத்தில் அர்த்த பஞ்சகம்

முமுக்ஷுவுக்கு அறிய வேண்டியவையான அர்த்த பஞ்சகமும் இத் திருமந்திரத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. பிரணவத்தாலே சேதநனுடைய சொரூபம், நமஸ்ஸாலே விரோதி சொரூபம், உபாய சொரூபம், நாராயண பதத்தாலே எம்பெருமானது சொரூபம், அதில் சதுர்த்தியாலே பல சொரூபம் ஆகியவை தெரிவிக்கப்படுகிறது.

## திருமந்திரத்தின் பொருள்

எம்பெருமானே உபாயமும் உபேயமுமென்றிருக்கையாகிற சேதநனுடைய தன்மையும், அந்யசேஷத்வம் (மற்றவர்களுக்கு அடிமைப்பட்டிருக்கை) ஸ்வ ஸ்வாதந்திரியம் (சுதந்திரமாக இருக்கும் நிலை) ஒழிந்து இருக்கையாகிற பேறும் திருமந்திரத்தில் கூறப்படுகிறது.

## ப்ரணவத்தின் பொருள்

இதில் முதல் பதமான பிரணவம் 'அ' என்றும், 'உ' என்றும், 'ம' என்றும் மூன்று திருவெழுத்தாயும் மூன்று பொருளை வெளியிடக் கடவதாகவும் இருக்கும். ஓரெழுத்தாய் ஒரே பொருளை வெளியிடக் கடவதாகவும் இருக்கும்.

## அகாரத்தின் பொருள்

அகாரத்தில் அவ–ரட்சணே என்கிற தாதுவால் (வினையடியால்) எம்பெருமானுடைய காப்பாற்றும் தன்மை பெறப்படும். அகாரம் எல்லாச் சொற்களுக்கும் காரணமாயிருப்பது போல் எம்பெருமான் எல்லா உலகுக்கும் காரணமாயுள்ளான். இதனால் காரணத்வமும் பெறப்படும். செல்வத்தை விரும்புபவர்களுக்கு அவற்றை அளித்தும், கைவயல்யத்தை விரும்புபவர்களுக்கு உடம்பைக் கழித்தும், தன்னைச் சரணமடைந்தவர்களைத் தன் தாளிணைக் கீழ்ச் சேர்த்தும் அவாவர் நிலைக்கேற்றவாறு எம்பெருமான் அருள் புரிவான்.

## அகாரத்தில் ஸ்ரீசப்தம்

எம்பெருமான் அடியவர்களைக் காப்பாற்றும் இடத்தில் பிராட்டியின் தொடர்பு வேண்டுகையாலே இதில் ஸ்ரீ சம்பந்தமும் அனுசந்திக்கப்படும்.

## நான்காவது வேற்றுமையின் பொருள்

எம்பெருமானுக்கு ஜீவாத்மா அடிமை என்பதையும் காப்பாற்றப்படுகிற பொருட்களெல்லாம் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவை என்பதையும் தெரிவிக்கிறது.

## உகாரத்தின் பொருள்

உகாரம் அறுதிப்பாட்டைக் காட்டுகையாலே ஜீவாத்மா எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டவன் என்பதைத் தெரிவிக்கிறது. மற்றவர்களுக்கு அடிமைப்படுமதான நிலையைக் கழிக்கிறது.

## மகாரத்தின் பொருள்

மகாரம் இருபத்தைந்தாம் எழுத்தாய் இருப்பதால் இருபத்தைந்தாம் தத்துவமான ஜீவாத்மாவைக் குறிக்கிறது. மந–ஜ்ஞானே என்கிற தாதுவினால் ஆத்மா ஞான சொரூபனாக சொல்லப்பட்டுள்ளது. ஆத்மாவின் தன்மைகளாக ஜ்ஞான ஆனந்தங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன்மையே முதன்மையாகக்

கூறப்பட்டுள்ளது. மகாரம் ஆத்மாக்கள் திரளையும் அவர்களுக்கு அடிமைப்பட்டதான அசித்தையும் காட்டும்.

## நம: என்ற சொல்லின் பொருள்

எம்பெருமானுக்கே அடிமைப்பட்டவன் என்ற உறவை அறிய முடியாமல் தடுக்கிற விரோதியை நம: என்று கழிக்கிறது. ம: என்பதற்கு எனக்கு நான் உரியன் என்று பொருள். ந என்று அது கழிக்கப்பட்டு எனக்கு நான் உரியேனல்லன் என்று பொருள்படுகிறது. தனக்கு என்றும் தன்னுடையது என்றும் நினைக்கிற அஹங்கார மமகாரங்களை அடியோடு கழிப்பதைக் குறிக்கிறது. தனக்கும் பிறர்க்கும் உரியவனல்லனானால் எம்பெருமானுக்கும் அவனடியார்களுக்கும் உரியவனாக ஆகவேண்டுகையால் பாகவதர்களுக்கு அடிமைப்படுகை என்பதுவும் நமச்சப்தத்தில் கிடைக்கும் பொருளாகும். "நின் திருவெட்டெழுத்தும் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்று திருமங்கையாழ்வார் அருளிள்ளபடியே எம்பெருமானை எண்ணாதே இருப்பாரோடு உறவற்றிருக்கையும், எம்பெருமானை எண்ணும் பாகவதர் களுக்கு அடிமைப்படுகையுமே சொரூபம் என்பதை உகாரமும் நமஸ்ஸும் அறிவிப்பதாக அருளிச் செய்கிறார். மேலும், பாண்டவர்கள் எம்பெருமானைச் சரணம் புகுதலாகிற "நமஸ்ஸைப் பண்ணினார்கள்" என்று கூறப் பட்டுள்ளமையால் இது உபாயத்தைக் காட்டுகிறதாகவும் நாயனார் கூறுகிறார்.

## நாராயணபதத்தின் பொருள்

நாரா: என்பது அழியாத பொருள்களின் திரளைக் காட்டுகிறது. அயநம் என்பதற்கு இருப்பிடம் என்று பொருள் கொண்டு எம்பெருமான் நாரங்களுக்கு இருப்பிடமானவன் என்றும், நாரங்களை இருப்பிடமாக உடையவன் என்றும் பொருள் காட்டுகிறார். இதில் எம்பெருமானுடைய மேன்மையும், நீர்மையும், அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமும் தோன்றும்.

நாராயண பதத்தின் மேல் ஏறிக் கிடக்கிற நான்காவது வேற்றுமையானது எல்லா தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும் எல்லா அடிமைகளும் செய்ய வேணுமென்கிற பிரார்த்தனையைக் காட்டுகிறது.

## திருமந்திரத்தின் திரண்டபொருள்

ஆக, இத்திருமந்திரம், ஸர்வரட்சகனான திருமகள் கேள்வனுக்கே அடிமைப்பட்டவனாய், சரீரம் இந்திரியம் இவைகளினின்றும் வேறுபட்டு, ஜ்ஞானந்தமயனாய், ஸ்வதந்த்ரனன்றிக்கே பரதந்திரனான நான் உபயவிபூதி நாயகனான நாராயணனுக்கே எல்லாவித கைங்கரியங்களும் செய்யப்

பெறுவேனாக வேணும்; இப்படியிருக்கையே ஆத்மாவுக்கு சொரூபம் என்கிறது.

"மூன்றெழுத்து"[1], "ஆன்விடையேழன்றடத்தார்க்கு"[2], "யானே என்னை"[3] "எண்பெருக்கந்நலம்"[4], "எம்பிரானெந்தை"[5], "ஒழிவில்காலம்"[6], "வேங்கடங்கள்"[7], "நாட்டினாயென்னை"[8] என்கிற பாட்டுக்களைத் திருமந்திரத்திற்கு அர்த்தமாக பூர்வர்கள் அநுசந்திப்பதாக நாயனார் அருளிச் செய்கிறார்.

## சரமச்லோக ப்ரகரணம்

நர நாராயணனாய்த் தானே திருமந்திரத்தை வெளியிட்ட எம்பெருமான், கிருஷ்ணனான நிலையிலே நரனுடைய அம்சமான சீடனான அர்ச்சுனனுக்கு உபதேசித்தது சரமசுலோகம் எனப்படும். திருமந்திரத்தில் அறுதியிட்ட பேற்றுக்குத் தகுந்த உபாயத்தை இதில் விதிக்கிறான். ஆத்ம பரமாத்ம சம்பந்தத்தை உணராதே உடம்பைப் பற்றி வருகிற பந்துக்களிடத்து உள்ள அன்பினால் தன்னுடைய தர்மத்தைப் பாவமென்று கலங்கின அர்ச்சுனனுக்குக் கண்ணன், உடம்பையும் ஆத்மாவையும் பற்றி வருகின்ற ஐச்வர்ய கைவல்யங்களின் தீமைகளையும் தன்னைப் பற்றி வருகின்ற மோட்சத்தினுடைய நன்மையையும் அறிவித்து, அதை அடைவதற்கு உரிய வழிகளாகக் கர்ம ஞான பக்திகளை உபதேசித்தான். அந்த உபாயங்களைக் கடைபிடிப்பதன் அருமையை உணர்ந்து அர்ச்சுனன் வருத்தமுற, கிருஷ்ணன் அர்ச்சுனனைப் பார்த்து "கீழ்ச் சொன்ன உபாயங்களை விட்டு என்னையே உபாயமாகப் பற்று; நானுன்னை விரோதிகளில் நின்றும் விடுவிக்கிறேன்; நீ துன்பப்படாதே" என்று, சொரூபத்திற்குத் தகுந்த உபாயத்தை விதிக்கிறான்.

## சரமசுலோகார்த்தம் பரமரஹஸ்யம்

ஐந்தாம் வேதமான மஹாபாரதத்துக்கு உபநிஷத்துப் போலே அமைந்த ஸ்ரீ கீதையிலே இந்தச் சரம சுலோகத்தை உபதேசித்து, இதை ஒருவருக்கும் சொல்லாதே கொள் என்று மறைத்ததனால் இது மிகவும் இரகசியமாக அநுஸந்திக்கப்படவேண்டியதென்று தோன்றும்.

## சரமசுலோகத்தின் பொருள்

முதலில் கர்ம ஞான பக்தியாகிற உபாயங்களை வெளியிட்டு, பிறகு அவற்றுக்குள்ளீடாய் நின்று கார்யம் செய்கிற தன்னை உபாயமாகச் சொல்லி,

---

1. பெரியாழ். திரு. 4-7-10 2. பெரிய திரு. 11-7-9 3. திருவாய். 2-9-9
4. மேலது 1-2-10 5. பெரிய திரு. 1-1-6 6.திருவாய். 3-3-1
7. மேலது 3-3-6 8. பெரிய திரு. 8-10-9

அதற்கு மேற்பட்ட உபாயம் ஒன்று கூறாமையால் சரமச்லோகம் என்று இதற்குப் பெயர் வந்தது. இதில் இவ்வுபாயத்துக்கு இவன் செய்யவேண்டுவதும் இந்த உபாயம் இவனுக்கு செய்வதும் சொல்லப்பட்டுள்ளது. பதினொருபதமான இதில் முதல் பதம் விடப்படுகிற உபாயங்களைச் சொல்லுகிறது.

ஸர்வ தர்மாந் – எல்லா தர்மங்களையும். தர்மமாவது நாம் விரும்புமவற்றை அடைவதற்குப் பின்பற்றவேண்டிய (சாஸ்த்ரங்களில் கூறப்பட்டுள்ள) நெறிகள். இவ்விடத்தில் தர்மமென்பது மோட்சமாகிற பேற்றைப் பெறுவதற்கு சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள கர்மஞானங்களுடன்கூடிய பக்தியாகிற நெறியாகும்.

பரித்யஜ்ய என்று எல்லா உபாயங்களையும் விடும்படியைச் சொல்லுகிறது. அதாவது பற்றற விடுகை. உபாயமல்லாதவற்றை உபாயமாக நினைத்தோமேயென்று எண்ணி அவற்றை விடுகை, விட்டோம் என்கிற நினைவையும் கூட விடவேணுமென்கிறது. பரித்யஜ்ய என்பதனால் விட்டாலல்லது பற்றவொண்ணது என்பது பெறப்படுகையாலே எம்பெருமானையே உபாயமாகப் பற்றுபவன் மற்றைய தர்மங்களை விடுவது தவறல்ல என்பது பெறப்படுகிறது.

மாம் என்று பற்றப்படும் உபாயத்தைச் சொல்லுகிறது. வேதத்தில் நல்லறமாகச் சொல்லப்படுவது புண்ணியனான கிருஷ்ணனையே ஆகும். தர்மங்களை நிலைநிறுத்தப் பிறந்தவன்தானே எல்லா தர்மங்களையும் விட்டு, தன்னைப் பற்றச் சொன்னபடியால், நேரே தர்மம் தானென்னுமிடத்தை வெளியிட்டானாயிற்று.

சரணம் என்பதற்குப் பல பொருள்களுண்டேயாகிலும் இவ்விடத்தில் அது விரோதியைக் கழித்துப் பலத்தைத் தரும் உபாயத்தைக் காட்டுகிறது. "மாமேகம் சரணம்" என்கையாலே உபேயமே உபாயமென்பது தோன்றும். வ்ரஜ என்று செய்– அதாவது அறுதியிடு என்கிறார்.

ஆக, சரமசுலோகத்தின் முதல் பாதியால், 'உன் தலையில் உள்ளவற்றை உதறிவிட்டு என்னையே தஞ்சமாக நினை' என்று சேதனன் செய்யவேண்டியவற்றை எம்பெருமான் விதித்தானாயிற்று.

இவ்வாறு தன்னைப் பற்றினவனுக்குத் தான் செய்யுமவற்றைப் பிற்கூற்றால் கூறுகிறான். அஹம் – நான். "மாம்" என்று சாரத்ய வேஷத்தோடே நிற்கிற தன்னை எளிமையாக நினைத்து அஞ்சுகிற அர்ச்சுனன் தேறும்படி "அந்தமிலாதியம் பகவனான" தன் நிலையை 'நான்' என்று

வெளியிடுகிறான். "மாம்" என்றால் பற்றுகைக்குறுப்பான வாத்ஸல்யாதிகள் நாலும் தோன்றுமாபோலே "அஹம்" என்றால் கார்யம் செய்கைக்கு உறுப்பான ஜ்ஞாநமும், சக்தியும், கிருபையும், பிராப்தியும் தோன்றும். மாம் என்றால் சௌலப்யமும் , அஹம் என்றால் பரத்வமும் தோன்றும் என்கிறார்.

"த்வா"– உன்னை. 'த்வா' என்று உபாயத்தைப் பற்றினவனுடைய சொரூபத்தைச் சொல்லுகிறது. 'உன்னுடைய அஜ்ஞானத்தையும், அசக்தியையும், அப்ராப்தியையும், அபூர்த்தியையும் முன்னிட்டுக் கொண்டு என்னையே உபாயமாகப் பற்றுகிற உன்பற்றை உபாயம் என்றிராமல், என்னுடைய ஜ்ஞான சக்திகளில் கலக்கமற்றிருக்கிற உன்னை" என்று பொருள்.

ஸர்வபாபேப்ய: – எல்லாப் பாவங்களிலிருந்தும். முமுக்ஷுவுக்குப் பாபம் போலே புண்ணியமும் துயரமே தருகையாலே இவையிரண்டையுமே பாபமென்கிறது.

"மோக்ஷயிஷ்யாமி" என்று பாபங்களிலிருந்து விடுவித்து முக்தனாக்கும் படியைச் சொல்லுகிறது. பாபங்கள் உன்னைக் கண்டு அஞ்சிப் போனவிடம் தெரியாதே போம்படி பண்ணுகிறேன் என்று கூறுகிறான்.

வருந்தாமைக்கு வேண்டுவதெல்லாம் சொல்லி "மாசுச:" என்று – வருந்தாதே என்கிறான். "வினைபற்றறுக்கும் விதி நாமிட்ட வழக்காயிருக்க உன்னுடைய வினைகளைக் கண்டு நீ துன்பப்படுவதென்?" என்கிறான்.

## *சரமசுலோகத்தின் திரண்டபொருள்*

"விடுமது இன்னது. அவற்றை இன்னபடி விடு; பற்றுமது இன்னது. அவற்றை இன்னபடிபற்று; விடுவித்துப் பற்றுவித்த நான் விட்டுப் பற்றினவுன்னை பாபங்களில் நின்றும் விடுவிக்கிறேன். நீ கலங்காதே கொள்" என்று கண்ணன் அர்ச்சுனனைத் தேற்றுவதாக சரமசுலோகத்திற்கு நாயனார் உரையிட்டருளியுள்ளார்.

## *த்வயப்பிரகரணம்*

திருமந்திரம், த்வயம், சரமசுலோகம் என்ற ரஹஸ்யங்கள் முன்றிலும் திருமந்திரமானது மந்த்ரராஜமென்றும், த்வயமானது மந்திர ரத்னமென்றும் பெருமை பெற்றிருக்கும். ஆசாரியர்கள் அனைவரும் திருமந்திரத்திற்காட்டிலும் த்வயத்தில் அதிகமாக ஊன்றியிருப்பர்கள். திருமந்திரத்தில் பிராட்டியைப் பற்றிய சப்தம் குறிப்பிட்டுச் சொல்லப்படவில்லை. திருமந்திரத்தில்

அகாரத்திற்கு ரக்ஷகன் (காப்பாற்றுபவன்) என்று பொருள் சொல்லி, எம்பெருமான் பிராட்டியோடு கூடி நம்மைக் காப்பாற்றுபவன் ஆகையால் இதில் ஸ்ரீஸம்பந்தமும் அனுசந்திக்கப்பட வேணுமென்றே சொல்லப்பட்டுள்ளது. சரமசுலோகத்திலும் பிராட்டி சொல்லப் படவில்லை. எம்பெருமானுடைய திவ்ய அவயவங்களிலே "வண்புகழ் நாரணன் திண்கழல்சேரே"[1] என்கிறபடி நமக்கு மிகவும் பற்றத் தக்கதான திருவடியைப் பற்றி இரண்டிலுமே சொல்லப்படவில்லை. இவ்விரண்டு குறைகளும் த்வயத்துக்கு இல்லையாதலால் இந்த த்வயத்துக்கு மிகுந்த ஏற்றம் உண்டு என்கிறார்.

திருமந்திரத்தை சாத்திரங்கள் அங்கீகரித்தன. சரம சுலோகத்தை சாத்திரத்திற்கு உள்ளீடான எம்பெருமான் அங்கீகரித்தான். த்வயத்தை அந்த எம்பெருமானுக்கு உள்ளீடான ஞானிகள் ஆதரித்தனர். பிரமாணங்களான சாஸ்திரங்களினுடைய அங்கீகாரத்தையும், பிரமேயமான எம்பெருமானுடைய அங்கீகாரத்தையும் விட பிரமாதாக்களான வைதிகர்களுடைய அங்கீகாரம் உயர்ந்ததாகையாலே மற்ற இரண்டு இரகசியங்களை விட த்வயம் பெருமை வாய்ந்தது என்று நாயனார் அருளிச் செய்கிறார்.

"வளங்கொள் மந்திரமாகிய"[1] திருமந்திரத்தையும் "மெய்ம்மைப் பெருவார்த்தை"[2]யான சரம சுலோகத்தையும், எம்பெருமான் தானே அருளியிருந்த போதிலும், "த்வயமர்த்தாநுஸந்தானேந"[3] என்று த்வயத்தை அர்த்தத்துடன் அனுசந்தித்துக் கொண்டு இருக்குமாறு எம்பெருமானார்க்கு அவ்வெம்பெருமானே அருளிச் செய்தான். இதிலிருந்து த்வயத்தின் பெருமை வெளிப்படும்.

## த்வயத்தின் பொருள்

இரண்டு கூறாக அமைந்திருக்கும் இந்த த்வயத்தில் முதற்பகுதினால் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றி எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றுவது சொல்லப்படுகிறது. அடுத்த பகுதியால் பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே அடிமை செய்ய வேணுமென்கிற பிரார்த்தனை காட்டப்படுகிறது.

ஸ்ரீ என்று புருஷகாரமான பெரிய பிராட்டியாருக்குத் திருநாமமாகும். 'ஸ்ரீயதே' என்பதால் பிராட்டி எல்லோராலும் சேவிக்கப் படுகின்றாள் (பற்றப்படுகிறாள்) என்பதும், 'ச்ரயதே' என்பதால் பிராட்டி தான் நிழல் போலே எம்பெருமானைச் சேவிக்கின்றாள் என்பதும் காட்டப்படுகின்றது. 'ச்ருணோதி'

1. பெரிய திருமொழி 5-8-9 2. நாச். திரு. 11-10 3. கத்யத்ரயம்

என்பதால் தன்னைக் கிட்டினவர்களின் முறையீட்டைக் கேட்கின்றாள் என்ற பொருளும், 'ச்ராவயதி' என்பதால் சேதனனையும், எம்பெருமானையும் உபதேசத்தாலே தன் சொல் கேட்கச் செய்கிறாள் என்ற பொருளும் பெறப்படுகின்றது.

'மதுப்' – பிராட்டியும் எம்பெருமானுமான இருவருடைய சேர்த்தியும் எப்பொழுதும் உண்டென்பது பொருள். புருஷகாரம் செய்யும் பிராட்டியானவள் எப்பொழுதும் எம்பெருமானோடு கூடியிருப்பதால் சேதநன் எம்பெருமானைப் பற்றுவதற்கு, அவன் பிராட்டியோடு கூடியிருக்கும் காலத்தை எதிர் பார்த்திருக்காமல் எந்தச் சமயத்திலும் பற்றலாம் என்கிறார்.

புருஷகாரத்துக்குத் தேவையான கிருபையும், பாரதந்திரியமும், அநந்யார்ஹத்வமும் ஸ்ரீமத் சப்தத்தாலே பெறப்படுகிறது.

"ஈறில வண்புகழ்"[1] என்கிற "எண்ணில் பல் குணங்களும்"[2] நாராயண பதத்துக்குப் பொருளாக இருந்தாலும் இவ்விடத்தில் வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், கிருபை ஆகிய குணங்களை நாராயண பதத்துக்கு அர்த்தமாக நாயனார் காட்டுகிறார்.

"நல்கித்தான் காத்தளிக்கும்"[3] என்று வாத்சல்யமும், "முழுவேழுலகுக்கும் நாதன்"[4] என்று ஸ்வாமித்வமும், "நங்கள்பிரான்"[5] என்று ஸௌசீல்யமும், "நாவாய் உறைகின்ற"[6] என்று ஸௌலப்யமும், "ஞாலமுண்டாய் ஞானமூர்த்தீ"[7] என்று ஞான சக்திகளும், "நல்லருள் நம்பெருமான்"[8] என்று கிருபையும், நாராயண சப்தத்துக்கு அர்த்தமாக ஆழ்வார் அருளிச் செய்துள்ளதாக நாயனார் காட்டுகிறார். இப்பாசுரங் கள் அனைத்திலும் நாராயணன் என்ற சொல் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

சரணௌ – என்று திருவடிகளைச் சொல்லுகிறது. பிராட்டியும் எம்பெருமானும் விடிலும் விடாது "திண்கழலாய்"[9] இருக்கும் 'இணைத்தாமரையடி'[10] என்னும்படி சேர்த்தியழகையுடைத்தான திருவடிகளைச் சொல்லுகிறது. எம்பெருமான் 'மாம்' என்று தன்னைப் பற்றச் சொன்னாலும் அவனடியார்கள் "கண்ணன்கழலிணை நண்ணும் மனமுடையீர்"[11] என்று எம்பெருமானுடைய திருவடிகளையே பற்றுவர்கள். சரணம் – என்று

---

1. திருவாய். 1-2-10  2. மேலது 4-3-5  3. மேலது 1-4-5  4. மேலது 2-7-2
5. மேலது 7-3-3  6. மேலது 9-8-7  7. மேலது 4-7-1  8. மேலது 5-9-10
9. மேலது 1-2-10  10. மேலது 7-1-10  11. மேலது 10-5-1

உபாயத்தைச் சொல்கிறது. வேண்டியவற்றைப் பெறுவதற்கும் வேண்டாதவற்றைத் தவிர்க்கைக்கும் தப்பாத உபாயமாகத் திருவடிகளைப் பற்ற வேணும் என்கிறார். உபேயமாக (பேறாக)ப் பெறவேண்டிய திருவடிகளே இங்கு உபாயமாக (நெறியா)ச் சொல்லப்பட்டுள்ளது. இதனால் பெறவேண்டிய பேறும் அதைப் பெறுவதற்குண்டான நெறியும் ஒன்றே என்று நாயனார் கூறுகிறார்.

ப்ரபத்யே – இந்த ப்ரபத்தி உபாயமாகாமல், சேதநனுடைய விலக்காமையைத் தெரிவிக்கிறது. மனமொழிமெய் மூன்றாலும் பற்ற வேண்டியிருந்தாலும் "சரணல்லால்சரணில்லை"[1] என்று நெஞ்சாலே துணிந்திருத்தலே வேண்டுவது.

பிராட்டியும் எம்பெருமானுமாகிற சேர்த்தியிலே பண்ணும் கைங்கரியத்தைப் பிரார்த்திப்பதே பிற்பகுதியின் திரண்ட பொருள். ஶ்ரீமதே – பெரிய பிராட்டியாரோடே கூடியிருக்கிறவனுக்கு என்பது பொருள். நாராயண பதம் அடிமை கொள்கிறவனுடைய சொரூபத்தைச் சொல்லுகிறது. இந்த நாராயண பதத்துக்கு ஸ்வாமித்வமும், போக்யதையும் பொருளாகக் கொள்ளப்படும். 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமை "முகப்பேகூவிப்பணி கொள்ளாய்"[2] என்கிறபடி கைங்கரியத்தைப் பிரார்த்திப்பது கூறப்படுகிறது.

நம: – என்று அடிமைக்குக் களையான அஹங்காரமமகாரங்களாகிற விரோதியைக் கழிக்கிறது. கைங்கரியத்தை தன்னுடைய உகப்புக்காக என்று நினைத்துப் பண்ணுவதே இங்கு விரோதியாகும். நம: பதம் அவ்விரோதியைக் கழிக்கிறது. எம்பெருமானுடைய உகப்பையே தனக்குப் பேறாக நினைக்க வேண்டும் என்கிறது. கைங்கரியம் செய்யும் பொழுது எம்பெருமான் – சேஷனாகிய தன்னைச் சேஷியாக வைத்து அடிமை செய்யப்புக்கால் அதனைத் தடுப்பதற்கு உறுப்பான சேஷத்வமாகிய தன் சொரூபத்திலும், எம்பெருமானுடைய அழகிலும் நெஞ்சு போகாமல் அடக்க வேண்டும்.

## த்வயத்தின் திரண்டபொருள்

ஶ்ரீயான பெரியபிராட்டியைப் புருஷகாரமாக முன்னிட்டுக் கொண்டு, நாரயணனுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறேன். ஶ்ரீமந் நாராயணனுக்கு எல்லாவித கைங்கரியங்களையும் அவர்களிருவருடைய சேர்த்தியில் அவர்களுடைய மகிழ்ச்சிக்குறுப்பாகச் செய்யப் பெறுவேனாக வேணும் என்று பிரார்த்திப்பதாகும்.

---

1 பெருமாள் திருமொழி 5-1 2. திருவாய்மொழி 8-5-7

"ஏழையேதலன்"[1], "அகலகில்லேன்"[2] என்கிற பாட்டுக்கள் முதல் வாக்கியத்துக்குப் பொருளாகவும், "எனக்கேயாட்செய்"[3], சிற்றஞ்சிறுகாலே"[4] என்கிற பாட்டுக்கள் இரண்டாம் வாக்கியத்துக்குப் பொருளாகவும் அருளிச் செய்கிறார்.

## ரகசிய நூல்களின் தனித் தன்மைகள்

அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருக்கு முன்பாகவே ஆசாரியர்கள் பலர் ரகசிய நூல்களை அருளியுள்ளனர். அஷ்டச்லோகி, பரந்த ரஹஸ்யம், அஷ்டாதச ரஹஸ்யம் முதலிய நூல்கள் திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்கிற மூன்று ரகசியங்களையும் விளக்க வந்த நூல்களாகும். ஆனால் இவை எல்லாவற்றிலிருந்தும் நாயனார் அருளியுள்ள ஆசார்யஹ்ருதயம், அருளிச்செயல் ரஹஸ்யம் ஆகிய இருநூல்களும் தனித்து விளங்குகின்றன. அவற்றின் தனித்தன்மைகளாவன:

### 1. திவ்யப்பிரபந்தப் பாசுரங்களை மிகுதியாகக் கையாளுதல்

நாயனார் அருளியுள்ள சூர்ணிகை (சூத்திர) வடிவில் அமைந்த ஆசார்ய ஹ்ருதயமும், வாக்கியவடிவில் அமைந்துள்ள அருளிச்செயல் ரகசியமும் முழுவதும் பாசுரங்களின் தொகுப்பாகவே அமைந்துள்ளன. ஆழ்வார்கள் அருளிச் செய்துள்ள கருத்துக்களை ஒட்டியே ஆசாரியர்கள் அனைவரும் தமது நூல்களை அருளிச் செய்திருந்தாலும், ஆழ்வார்கள் பாசுரங்களைக் கையாண்டு நாயனார் நூல்களை இயற்றியுள்ள விதம் வியத்தற்குரியது. பாசுரங்களில் ஒரே சொல் பல இடங்களில் காணப்பட்டாலும் நாயனார், தாம் கூறவந்த கருத்துக்கு ஒத்த பொருளையுடையதாக அச்சொல் எந்த இடத்தில் காணப்படுகிறதோ அந்தப் பாசுரத்திலிருந்து மட்டுமே மேற்கோள்களை எடுத்துக் கையாண்டுள்ளார். தாம் கூற வந்த கருத்தைப் பாசுரங்களிலுள்ள சொற்களின் வாயிலாகவே வெளியிடுகிறார். அருளிச்செயல் சொற்றொடர்களையே முழுவதும் கொண்டு சூர்ணிகைகளையும், வாக்கியங் களையும் அழகுற அமைத்துள்ளார். உதாரணமாக ஒருசிலவற்றைப் பார்ப்போம்.

ஸம்சாரிகளுக்குப் பிறவிகள் காரணமாக வருகின்ற எல்லை இல்லாத துன்பத்திற்குக் காரணம் அர்த்த பஞ்சக ஞானமில்லாமையும், எம்பெருமானை அனுபவித்தலாகிற இன்பத்திற்குக் காரணம் அர்த்தபஞ்சக ஞானம்

1. பெரிய திருமொழி 5-8-1
2. திருவாய்மொழி 6-10-10
3. திருவாய்மொழி 2-9-4
4. திருப்பாவை - 29

(ஐம்பொருள்களை அறிதல்) பெற்றிருத்தலுமே என்ற கருத்தை, பாசுரங்களைக் கொண்டே நாயனார் காட்டுகிறார்.

"அநந்தக்லேச நிரதிசயாநந்த ஹேது – மறந்தேன் அறியகிலாதே உணர்விலேன் ஏணிலேன் அயர்த்து என்றும், உய்யும்வகை நின்றவொன்றை நன்கறிந்தனன் உணர்வினுள்ளே ஆம்பரிசு என்றும் சொல்லுகிற ஜ்ஞாதவ்ய பஞ்சக ஜ்ஞான அஜ்ஞானங்கள்" என்பது ஆசார்யஹ்ருதயத்திலுள்ள சூர்ணிகை (5). இதிலுள்ள பதங்கள் எல்லாம் ஆழ்வாரருளிச் செயல்களில் இருந்து எடுக்கப்பட்டவையாகும்.

| | |
|---|---|
| மறந்தேன் | 'மறந்தேன் உன்னை முன்னம்' (பெரிய திருமொழி 6–2–2) என்கிறபடியே பரம்பொருளைப் பற்றிய அறிவில்லாமையும், (இப்பாசுரத்தில் திருமங்கை ஆழ்வார் எம்பெருமானை மறந்திருந்ததாகவும் அதனால் மேன்மேலும் துக்கங்களை விளைவிக்கக் கடவதான சம்சாரத்திலே பிறப்பதும் இறப்பதுமாயொழிந்ததாகவும் கூறுகிறார்.) |
| அறியகிலாதே | 'யானே என்னை அறியகிலாதே' (திருவாய்மொழி 2–9–9) என்கிறபடியே பரம்பொருளைப் பற்றிய அறிவில்லாமையும் (இதில் நம்மாழ்வார் ஆத்மாவினுடைய உண்மை சொரூபத்தை அறியாமல் தேஹத்தை ஆத்மாவாக எண்ணியிருந்ததாகக் கூறுகிறார். |
| உணர்விலேன் | 'ஒடியும் உழன்றும் உயிர்களே சொன்றேன்' உணர்விலேன் (பெரிய திருமொழி 1–6–6) என்கிறபடியே விரோதியை அறியும் அறிவின்மையும், |
| ஏணிலேன் | 'பிறவிநோய் அறுப்பான் ஏணிலேன் இருந்தேன்' (பெரிய திருமொழி 1–6–1) என்கிறபடியே பிறவியை அறுக்கும் உபாயத்தை அறியும் அறிவின்மையும், |
| அயர்த்து | 'ஆழி அம்கை அம்மானை ஏத்தாது அயர்த்து' (பெரியதிருவந்தாதி 82) என்கிறபடியே பேற்றினை அறியும் அறிவின்மையும் முறையே கூறப்பட்டன. |

இதனால் அர்த்தபஞ்சகம் என்னும் ஐம்பொருள்களான இறைநிலை, உயிர்நிலை, தடை, நெறி, பேறு முதலியவைகளைப் பற்றிய அறிவின்மையே பிறவிக்குக் காரணம் என்பதைப் பாசுரங்களைக் கொண்டே நாயனார் காட்டுகிறார்.

அடுத்து மோக்ஷமாகிற எல்லையில்லாத சுகத்திற்குக் காரணம் அர்த்த பஞ்சக ஞானம் பெற்றிருப்பதே என்பதையும் பாசுரங்கள் மூலம் தெளிவுபடுத்துகிறார்.

உய்யும் வகை

'நின்னை நெஞ்சில் உய்யும் வகை உணர்ந்தேன் "(பெரிய திருமொழி 6–3–6) என்கிற படியே பரம்பொருளின் விஷயமான ஞானமும்,

நின்ற ஒன்றை

'நின்ற ஒன்றை உணர்ந்தேன்' (திருவாய்மொழி 8–8–4) என்கிறபடியே ஆன்மாவாகிய தன்னை உணரும் ஞானமும்,

நன்கறிந்தனன்

'அகற்ற நீ வைத்த மாயவல்லைம்புலன்களாமவை நன்கு அறிந்தனன்' (திருவாய் 5–7–8) என்கிறபடியே விரோதியை அறியும் ஞானமும்,

உணர்வினுள்ளே

'அவனது அருளால் உறற்பொருட்டு என் உணர்வினுள்ளே இருத்தினேன்' (திருவாய்மொழி 8–8–3) என்கிறபடியே அவனை அடையும் நெறியை அறியும் ஞானமும்,

ஆம்பரிசு

'ஆம்பரிசு அறிந்து கொண்டு' (திருமாலை 3–8) என்கிறபடியே பேற்றினை அறியும் ஞானமும்

பெற்றிருத்தலே மோக்ஷத்திற்குக் காரணம் என்கிறார். இவ்வாறு பாசுரங்களிலுள்ள சொற்களைக் கொண்டே சூர்ணிகைகளை அமைத்துள்ளது குறிப்பிடத்தக்கது.

நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழி வேதமே என்பதை நாயனார் பல பிரமாணங்களால் நிரூபிக்கிறார். வேதத்திற்கு உண்டான சிறப்புகள் அனைத்தும் திருவாய்மொழிக்கும் உண்டு என்பதை ஆழ்வார்களுடைய பாசுரங்களைக் கொண்டே ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

"வேதநூல் இருந்தமிழ்நூல், ஆஜ்ஞை ஆணை, வசையில் ஏதமில், சுருதி செவிக்கினிய ஓதுகின்றதுண்மை பொய்யில் பாடல் பண்டை நிற்கும் முந்தை அழிவில்லா என்னும் லக்ஷணங்கள் ஒக்கும்" என்பது ஆசார்யஹ்ருதயத்தில் உள்ள (45) சூர்ணிகையாகும்.

சாத்திரமாக இருத்தல், எம்பெருமானுடைய ஆணையாக இருத்தல், குற்றமில்லாததாக இருத்தல், செவி வழியாகக் கேட்கப்பட்டுவருதல்,

மெய்ம்மையாய் இருத்தல், அநாதியாக இருத்தல், அழிவில்லாது இருத்தல் என்னும் தன்மைகளால் வேதம் சிறப்பு பெற்று விளங்குகிறது. அதே பெருமைகள் திருவாய்மொழிக்கும் உண்டு என்பதை ஆழ்வார் பாசுரங்கள் மூலம் ஒப்பிடுகிறார்.

| | |
|---|---|
| வேதநூல் | 'வேதநூற்பிராயம் நூறு' (திருமாலை–3) என்ற பாசுரத்தில் வேதம் சாத்திரமாக சொல்லப்பட்டுள்ளது. |
| இருந்தமிழ்நூல் | 'இருந்தமிழ்நூல்' என்று திருவாய்மொழியும் ஒருபாசுரத்தில் (திருவாய்மொழி 10–6–4) பெரிய திராவிட சாத்திரமாகச் சொல்லப் பெற்றுள்ளது. |
| ஆஜ்ஞை | 'ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவ ஆஜ்ஞா' (சுருதிகளும் ஸ்ம்ருதிகளும் என்னுடைய கட்டளைகள்) என்று கூறப்பட்டுள்ளபடி வேதம் எம்பெருமானுடைய ஆணையாகச் சொல்லப்பட்டுள்ளது. |
| ஆணை | 'ஆணையாயிரம்' (திருவாய்மொழி 6–3–11) என்று திருவாய் மொழியும் எம்பெருமானுடைய ஆணையாகச் சொல்லப் பெற்றுள்ளது. |
| வசையில் | 'வசையில் நான்மறை' (பெரிய திரு–5–3–2) என்று வேதம் வஞ்சித்தல் முதலிய குற்றங்கள் இல்லாததாகச் சொல்லப் பட்டுள்ளது. |
| ஏதமில் | 'ஏதமிலாயிரம்' (திருவாய்மொழி 1–6–11) என்று இதுவும் குற்றம் இல்லாததாகச் சொல்லப்பட்டுள்ளது. |
| சுருதி | வேதம் 'சுடர்மிகு சுருதி' (திருவாய்மொழி 1–1–7) என்று கேட்கப்பட்டே அறியப்படுவதாகச் சொல்லப்பட்டுள்ளது. |
| செவிக்கினிய | திருவாய்மொழியும் 'கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே' (திருவாய்மொழி 10–6–11) என்று கேட்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. |
| ஓதுகிறதுண்மை | 'வேதநூல் ஓதுகின்றதுண்மை' (திருச்சந்தவிருத்தம் –72) என்று வேதம் பொய்சொல்லாதது எனப்பட்டுள்ளது. |
| பொய்யில்பாடல் | 'பொய்யில்பாடலாயிரம்' (திருவாய்மொழி 4–3–11) என்கிறபடியே திருவாய்மொழியும் பொய் சிறிதும் சொல்லாதது எனப்பட்டது. |

பண்டைநிற்கும் — வேதம் 'பண்டை நான்மறை' (பெரியதிருமொழி 5–7–1) என்று அநாதியாகவும், 'நிற்கும் நான்மறை' (திருவாய்மொழி 6–5–4) என்று அழிவில்லாததாகவும் சொல்லப்பட்டுள்ளது.

முந்தைஅழிவில்லா — திருவாய்மொழியும் 'முந்தை ஆயிரம்' (திருவாய்மொழி 6–5–11) என்கிறபடியே அநாதியாயும், 'அழிவில்லா ஆயிரம்' (திருவாய்மொழி 9–7–11) அழிவில்லாததாகவும் சொல்லப்பெற்றுள்ளது.

மேற்கூறிய தன்மைகளால் வடமொழி மறையாகிய வேதமும், தமிழ் மொழி மறையாகிய திருவாய்மொழியும் தம்முள் ஒக்கும் என்று நாயனார் காட்டியுள்ளார். தாம் கூறவந்த கருத்தை அருளிச் செயல் சொற்றொடர்களைக் கொண்டே அமைத்திருக்கும் அழகு நாயனாருக்கே உள்ள ஒரு தனிச் சிறப்பாகும்.

அருளிச் செயல் ரகசியத்தில் த்வய பிரகரணத்தில் 'சரணௌ' என்கிற சொல்லுக்கு நாயனார் உரையருளிச் செய்யும்பொழுது, பிராட்டியும் எம்பெருமானும் விடிலும் விடாது திண்கழலாய் இருக்கும் திருவடிகளின் மேன்மையைக் கூறுகிறார்.[1]

1. இணைத்தாமரைகட்கு அன்புருகி நிற்கும் அது நிற்க –

   'உன்இணைத்தாமரைகட்கு அன்புருகிநிற்கும் அது நிற்க' (திருவாய்மொழி 7–1–10) என்கிறபடியே எம்பெருமானுடைய திருவடிகளிலே அன்போடு இருப்பதைவிட்டு;

2. சிலம்படியிலே மண்டுகிறவனுக்கு –

   'சிலம்படியுருவில் கருநெடுங்கண்ணார் திறத்தனாயறத்தையே மறந்து' (பெரியதிருமொழி 1–6–2) என்கிறபடியே பெண்களின் அழகிலே மண்டியிருந்தவர்களை;

3. அன்னமென்னடையை அருவருக்கும்படி –

   'அன்னமென்னடையினார்கலவியை அருவருத்தஞ்சினாயேல்' (பெரிய திருமொழி 9–7–2) என்கிறபடி அவர்களுடைய கலவியை வெறுக்கும்படி செய்து;

---

1. அருளிச்செயல் ரஹஸ்யம் ப. 156

4. சேவடிக்கே மறவாமையை (உண்டாக்கும்படி) –

'நின் மன்னு சேவடிக்கே மறவாமை வைத்தாயால்' (பெரிய திருமொழி 3–5–4) என்கிறபடியே எம்பெருமானுடைய திருவடிகளையே மறவாமல் தினம் நினைக்கும்படி செய்து;

5. அன்பு சூட்டப் (பண்ணி) –

'இணையடிக்கே அன்பு சூட்டிய சூழ்குழற்கே' (திருவிருத்தம் 20) என்கிறபடியே திருவடிகளிலே அன்பை உண்டாக்கி;

6. பாதமேசரணாகக் (கொடுத்து) –

'ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்' (திருவாய்மொழி 5–7–10) என்கிறபடியே திருவடிகளை உபாயமாகக் கொடுத்து;

7. கழல்காண்டுங்கொல் –

'திருவல்லவாழ் நீடுறைகின்ற பிரான் கழல் காண்டுங்கொல் நிச்சலுமே' (திருவாய்மொழி 5–9–3) என்கிறபடியே திருவடிகளைக் காணவும்,

8. தலைக்கணியாய் –

'நின்பாத பங்கயமே தலைக்கணியாய்' (திருவாய்மொழி 9–2–2) என்கிறபடி அவற்றைத் தலைக்கணியாகப் பெறவும்,

9. சரணம் தந்தென்சன்மம் களையாய் (என்றிருக்கிற அபேக்ஷைகளை யுண்டாக்கி)–

'தரியேன் இனி உன் சரணம் தந்தென் சன்மம் களையாயே' (திருவாய்மொழி 5–8–7) என்கிறபடித் திருவடிகளைத் தந்து என் பிறவியை நீக்காயென்னும் ப்ரார்த்தனையை உண்டாக்கி;

10. தாள் கண்டு கொண்டு என் தலைமேல் புனைந்தேன் –

'பின்னைதன்கேள்வன் தாள் கண்டுகொண்டு என் தலைமேல் புனைந்தேன்' (திருவாய்மொழி 10–4–3) என்கிறபடி திருவடிகளைத் தலைமேல் தரித்துக் கொள்ளுதலும்;

11. காண்டலுமே விண்டேயொழிந்த (என்கிற பேறுகளைக் கொடுத்து)–

'கண்டேன்கமலமலர்ப் பாதம் காண்டலுமே விண்டேயொழிந்த வினையாயினஎல்லாம்' (திருவாமொழி 10–4–9) என்கிறபடி தீவினைகள் நீங்குதலுமாகிற பேறுகளைக் கொடுத்து;

12. அங்கோர் நிழலில்லை நீருமில்லை (என்கிற விடாயை) –

'காதம் பலவும் திரிந்து உழன்றேற்கு அங்கோர் நிழலில்லை நீரூமில்லை உன் பாதநிழலல்லால்' (பெரியாழ்வார் திருமொழி 5–3–4) என்கிறபடி திருவடிகளை அனுபவிக்க வேணுமென்றவிடாயை;

13. அடிநிழல் தடத்(தாலேயாற்றி) –

'அவனடிநிழல் தடம் அன்றியாமே' (திருவாய்மொழி 10–1–2) என்கிறபடி திருவடிநிழலாகிய தடாகத்தாலே தீர்த்து;

14. பாதபோதையுன்னி(வழிநடத்தி) –

'அன்று பாரளந்த பாதபோதையுன்னி' (திருச்சந்தவிருத்தம் 66) என்கிறபடி பூமியளந்த திருவடிகளை நினைப்பித்து வழிநடத்தி;

15. தாளிணைக்கீழ்ப்புகும் காதலுக்(கீடாக) –

'அவன் தாளிணைக் கீழ்ப்புகும் காதலன்' (திருவாய்மொழி 3–9–8) என்கிறபடி திருவடிகளில் பிரபத்தி பண்ணும் விருப்பத்துக்கீடாக.

16. தாளின் கீழ்ச் சேர்த்து –

'பெருந்துன்பம் வேரற நீக்கித் தன்தாளிணைக் கீழ்ச் சேர்த்து' (திருவாய்மொழி 7–5–10) என்கிறபடி தன் திருவடிகளிலே நித்யமான கைங்கர்யத்தைக் கொடுத்து;

17. வேறேபோக(விடாதே) –

'என்னை உன் பொன்னடிச் சேர்த்து ஒல்லை வேறேபோக எஞ்ஞான்றும் விடலே' (திருவாய்மொழி 2–9–10) என்கிறபடி வேறுபயன்களில் போகவிடாதே;

18. அடிக்கீழ் (இருத்தி) –

'அடிக்கீழ் புகுவார் பொலிந்தே' (திருவாய்மொழி 5–1–11) என்கிறபடி திருவடிக்கீழிருத்தி;

19. திருவடியே சுமந்துழலப்(பண்ணி)–'

'என்னை உன் திருவடியே சுமந்துழல (திருவாய்மொழி 4–9–9) என்கிறபடி திருவடிகளைத் தலையால் சுமந்து திரியும்படி பண்ணி;

20. அடிக்கீழ்க்குற்றேவலிலே (மூட்டி ருசி ஜநகத்வம் முதலாக நித்யகைங்கர்யம் எல்லையாக நடத்துவது திருவடிகளைக் கொண்டிறே) –

'திருவடிக்கீழ்க் குற்றேவல் (திருவாய்மொழி 1–4–2) என்கிறபடி திருவடிகளிலே கைங்கர்யம் செய்வதற்கு ஆசையை விளைவித்து,

எம்பெருமான் நித்ய கைங்கரியத்தைக் கொள்ளுவதும் திருவடிகளைக் கொண்டு தான் என்கிறார். இதில் எடுத்துக்காட்டாகக் கையாண்டுள்ள பாசுரங்கள் எல்லாம் திருவடியைப் பற்றியவையே என்பது குறிப்பிடத்தக்கது.

சரமசுலோகத்தில் 'அஹம்' என்ற பதத்திற்குப் பொருளாக நாயனார் எம்பெருமானுடைய நான்கு குணங்களான ஞானம், சக்தி, கிருபை, பிராப்தி முதலியவைளைக் கூறுகிறார்.

'அஹம் ' என்றால் காரியம் செய்கைக்கு உறுப்பான ஜ்ஞானமும், சக்தியும், கிருபையும், ப்ராப்தியும் தோன்றும். 'நிறைஞானத்தொரு மூர்த்தி ', 'ஆற்றல் மிக்கான்', 'அருள் செய்த நெடியோன்' 'இருநிலத்தவித்த எந்தாய்' என்று தேர்த்தட்டின் நிலையிலே இந்நாலு குணத்தையும் முறையே ஆழ்வார் அநுஸந்தித்தருளினார்' என்றருளியுள்ளார்.

எம்பெருமானுடைய ஞானம், சக்தி, கிருபை, பிராப்தி முதலிய குணங்களைப் பாசுரங்களைக் கொண்டு விளக்குகிறார்.

1. நிறைஞானத்தொரு மூர்த்தி –

    'அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி' (திருவாய்மொழி 4–8–6) என்கிறபடி, எம்பெருமான் – கர்மயோகம் முதலிய எல்லா உபாயங்களையும் அருளிச் செய்த் பரிபூர்ண ஞானத்தை உடையவன்.

2. ஆற்றல் மிக்கான் –

    'ஐவர்க்காய்க் கொடுஞ்சேனை தடிந்து ஆற்றல் மிக்கான்' (திருவாய்மொழி 7–6–10) என்கிறபடி மிகுந்த சக்தி (ஆற்றல்) உடையவன்.

3. அருள்செய்த நெடியோன் –

    'அடியோங்கு நூற்றுவர்வீய அன்றைவர்க்கருள் செய்த நெடியோனை' (திருவாய்மொழி 3–7–11) என்றபடி பாண்டவர்களுக்கு கிருபை செய்தவன்.

4. இருநிலத்தவிந்த எந்தாய் –

    'கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப் போர் எல்லாச் சேனையும் இருநிலத்தவித்த எந்தாய்' (திருவாய்மொழி 3–2–3)

என்கிறபடி பாரத யுத்தத்தில் எல்லாப் படைகளையும் அவித்த ஸர்வஸ்வாமியானவன்.

என்று எம்பெருமானுடைய நான்கு குணங்களையும் ஆழ்வார் கூறுவதாக நாயனார் அருளியுள்ளார். எல்லாப் பாசுரங்களுமே கிருஷ்ணாவதாரத்தைப் பற்றியும், அதிலும் குறிப்பாக, பாரதயுத்தத்தைப் பற்றியுமே அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

## 2. அழகிய உதாரணங்களுடன் பொருளை விளக்குதல்

1. நாயனார் திருவாய்மொழியை திராவிட வேதம் என்று அருளிச் செய்துள்ளார். வேதத்துக்குண்டான எல்லா சிறப்புக்களும் திருவாய்மொழிக்கும் உண்டு என பிரமாணங்கள் மூலம் நிரூபிக்கிறார். வேதத்தை அத்யயனம் செய்வதற்குக் கால வரம்பும் அதிகாரி வரம்பும் உள்ளது போல் திருவாய்மொழிக்கு அவை இல்லாமைக்குக் காரணம் கூறி அதை ஒரு உதாரணம் மூலம் விளக்குகிறார்.[1]

"மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடல் சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" – உப்புத்தன்மை வாய்ந்ததாய், பௌர்ணமி முதலிய பருவ காலங்களில் தவிர மற்ற காலங்களில் தீண்டலாகாது என்று கால நியதியையும் உடைத்தான கடல் நீரானது, மேகத்தால் பருகப்பட்டு மழையாகப் பொழியப்படும் பொழுது அம்மேகத்தின் சம்பந்தத்தாலே உப்புத்தன்மை நீங்கி எப்பொழுதும் எல்லோர்க்கும் பயன்படும் தன்மையை அடைகின்றது. அதைப்போல வேதமும், ஓதுவதற்குக் காலநியதியையும், முதல் மூன்று வருணத்தாரே அதிகாரிகள் என்று அதிகாரி நியதியையும் உடைத்தாயிருக்கும். அவ்வேதமே 'இவள் வாயனகள் திருந்தனவே'[2] என்கிறபடி நம்மாழ்வார் திருவாக்கில் வெளிவந்ததால் கால நியதி, அதிகாரி நியதிகளில்லாதபடி எக்காலத்திலும் எல்லோரும் கற்றற்குரியதாயிற்று.

மேகத்தின் சம்பந்தத்தாலே கடல் நீர் உப்புத் தன்மை நீங்கி எல்லோர்க்கும் எப்பொழுதும் பயன்படுவது போல் ஆழ்வார் சம்பந்தத்தாலே வேதமும் எவ்வித நியதியுமின்றி எக்காலத்திலும் எல்லோருக்கும் பயன்படும்.

2. அருளிச்செயல்ரகசியத்தில் பிரணவத்திற்குப் பொருளுரைக்கும் பொழுது 'சப்தார்த்தங்களிரண்டாலும் ஜீவபரப்ராதாந்யம் கொள்ளக் கடவதிறே. "ஓங்கார ரதம் பார்த்தன் செல்வத் தேர் போலேயிறே இருப்பது"[3] என்று

1. ஆசார்யஹ்ருதயம் - 72 2. திருவாய். 6-5-7 3. அருளிச்செயல் ரஹஸ்யம் ப. 17

நாயனார் அருளிச் செய்துள்ளார். பிரணவத்தில் ஜீவாத்மா, பரமாத்மா என்னும் இருவருடைய முதன்மையும் தோன்றும் என்றருளியுள்ளார். பிரணவத்தின் திரண்ட பொருள் 'பரமாத்மாவுக்கே ஜீவாத்மா அடிமைப் பட்டவன்' என்பது. இவ்வாக்கியத்தில் ஜீவாத்மாவாகிய சொல் எழுவாயாதலின், அதற்கே முக்கியத்துவம் கிடைக்கும். (அதாவது இந்த வாக்கியம் ஜீவாத்மாவின் தன்மையையே தெரிவிக்கிறது என்றபடி.) ஆக, சொல் அமைப்பின்படி ஜீவாத்மாவுக்கு முதன்மை கிடைக்கிறது. ஆனால் பொருள் அமைப்பின்படி பார்த்தால், ஜீவாத்மா பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டவன் என்று இவ்வாக்கியத்தில் கூறியுள்ளபடியால் அடிமையான ஜீவாத்மாவைக் காட்டிலும், தலைவனான பரமாத்மாவுக்கே முதன்மை கூறப்பட்டதாகிறது. ஆக, பிரணவத்தில் சொல் அமைப்பினால் ஜீவாத்மாவுக்கு முதன்மையும், பொருள் ஆற்றலால் பரமாத்மாவுக்கு முதன்மையும் பெறப்படுகிறது. இதை விளக்குகின்ற நாயனார் அர்ச்சுனனுடயதேரை இதற்கு உவமையாகக் கூறுகிறார். தேரில் ரதியாக (அரசனாக) அமர்ந்திருந்தவன் அர்ச்சுனன் என்பதையும் அவனுக்குச் சாரதியாக இருந்தவன் கண்ணன் என்பதையும் கொண்டு, வேஷங்களைப் பார்க்கும் பொழுது, ரதியான அர்ச்சுனனுக்கே முதன்மை கூறப்படுகிறது. ஆனால் அதே சமயத்தில் கண்ணன், ஆசார்யனாக இருந்து கீதையை உபதேசித்தான் என்பதையும், அர்ச்சுனன் அவனுடைய சீடனாக இருந்து கொண்டு உபதேசங்களைக் கேட்டான் என்பதையும் கொண்டு, செயல்களைப் பார்க்கும்போது கண்ணனுக்கே முதன்மை கூறப்பட்டதாகிறது. இவ்வாறு பிரணவத்தை அர்ச்சுனனுடைய தேருக்கு ஒப்பிட்டு அதன் பொருளை விளக்குகிறார்.

## 3. திவ்யப் பிரபந்தப் பாசுரங்களுக்கு சிறப்புப் பொருள் கொள்ளுதல்

நாயனார் ஆழ்வாரருளிச் செயல்களின் சொற்களுக்குப் பூருவாசாரியர்கள் கொண்ட பொருள்களையே தம்முடைய நூல்களிலும் கைக்கொண்டாலும் சில இடங்களில் அப்பதங்களுக்கே வேறு சிறப்புப் பொருளையும் கொண்டுள்ளார்.

'வீட்டின்பவின்பப் பாக்களில் திரவ்ய பாஷா நிரூபண ஸமம் இன்ப மாரியிலாராய்ச்சி' என்பது நாயனார் திருவாக்கு.[1]

1. ஆசார்ய ஹ்ருதயம் - 75

1. வீட்டின்பம் –

'கனிவார் வீட்டின்பமே' என்ற திருவாய்மொழிப்பாசுரம் (2–3–5) இங்கு கையாளப் பெற்றுள்ளது. இவ்விடத்தில் வீட்டின்பம் என்ற சொல்லை நம்மாழ்வார் எம்பெருமான் மோக்ஷ சுகமே வடிவெடுத்தாற் போன்றவன் என்ற பொருளில் அருளிச் செய்துள்ளதாக நம்பிள்ளை முதலிய ஆசார்யர்கள் உரையிட்டுள்ளனர். ஆனால் நாயனார் 'வீட்டின்பம்' என்பதற்கு அடியவர்களினுடைய வீடுகளிலே அவர்களுகந்த ஒரு பொருளைத் திருமேனியாகக் கொண்டு, அவர்களுக்கு இன்பத்தை விளைக்கின்ற அர்ச்சாவதாரம் என்று பொருள் கொண்டுள்ளார்.

2. இன்பமாரி –

'அடியார்க்கின்பமாரியே' என்று திருவாய்மொழியில் (4–5–11) ஆழ்வார் 'இன்பமாரி' என்ற சொல்லால் திருவாய்மொழியைக் குறிப்பிட்டுள்ளார். எம்பெருமானுடைய அடியார்க்கு இத்திருவாய் மொழியானது ஆனந்த மழை பொழியும் மேகமாக உள்ளது என்று நம்பிள்ளை முதலானோர் உரையருளிச்செய்துள்ளனர். ஆனால் நாயனார், 'இன்பமாரி' என்ற சொல்லால் இங்கு நம்மாழ்வாரையே குறிப்பிடுகிறார். ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் திருவாய்மொழி முகத்தாலே பேரானந்தமாகிய மழையினைப் பொழியும் மேகமான ஆழ்வார் என்று நாயனார் பொருள் கொண்டுள்ளார்.

3. இன்பப்பா–

'அந்தமிழினின்பப் பாவினை' என்று பெருமாள் திருமொழியில் (1–2) குலசேகரழ்வார் 'இன்பப்பா' என்ற சொல்லை – மிகவும் இனிமையான அருளிச்செயல்களைப் போல் இனியவனான எம்பெருமான் என்ற பொருளில் அருளிச் செய்துள்ளார். நாயனார் 'இன்பப்பா' என்பதற்கு, எம்பெருமானுடைய கல்யாண குணங்களை இனிய தமிழில் கூறுவதனால் அடியவர்கட்கு இன்பத்தை விளைவிக்கும் திருவாய்மொழி என்று பொருள் கொண்டு அருளிச் செய்துள்ளார்.

## 4. நாயனாருடைய ரகசிய நூல்களில் ஒன்று போலவே அமைந்துள்ள பகுதிகள்

1. நாயனார் அருளியுள்ள ரகசிய நூல்களான ஆசார்யஹ்ருதயத்திலும் அருளிச் செயல் ரகசியத்திலும் சில பகுதிகள் ஒன்று போலவே

காணப்படுகின்றன. எம்பெருமான் வேதத்தின் சுருக்கமான திருமந்திரத்தை எடுத்த விதத்தையும், வெளியிட்ட விதத்தையும் இரு நூல்களிலும் ஒருபடியாகவே நாயனார் விளக்கியுள்ளார்.

"வேதஸார உபநிஷத்ஸாரதராநுவாகஸாரதம காயத்ரியில் முதலோதுகிற பொருள் முடிவான சுருக்கைத் தெய்வவண்டாய் அன்னமாய் அமுதங் கொண்டவன் சாகைகளிலும் ஒதம் போல்கிளர் நால் வேதக்கடலிலும் தேனும் பாலும் அமுதுமாக எடுத்துப் பெருவிசும்பருளும் பேரருளாலே சிங்காமை விரித்தது" என்பது ஆசார்யஹ்ருதயத்திலுள்ள பகுதியாகும்.[1]

"ஒத்தின் பொருள் முடிவை ஒத்தின் சுருக்காயிருப்பதொன்றாலே அறிவிக்க வேண்டுமென்று தெய்வவண்டாய் அன்னமாய் அமுதங் கொண்ட மைத்த சோதி எம்பெருமான் வேதசாகைகளிலும் ஒதம் போல் கிளர் நால் வேதக் கடலிலும் தேனும் பாலும் அமுதுமாகச் சேர்த்துப் பிரித்தெடுத்து "அறநூல் சிங்காமை விரித்தவன்" என்னும்படி . . . . . . . பெருவிசும்பருளும் பேரருளாலே பெரிய திருமந்திரத்தை வெளியிட்டருளினான்" என்பது அருளிச்செயல்ரஹஸ்யத்திலுள்ள ஒரு பகுதியாகும்.[2]

வண்டானது கிளைகளில் திரிந்து தேனை எடுப்பது போல "தூவியம் புள்ளுடைத் தெய்வ வண்டான" எம்பெருமான் வேதசாகைககளிலே தேனாகச் சொல்லப்பட்ட திருமந்திரத்தை எடுத்தான். அன்னமானது நீரிலே இருந்து பாலைப் பிரித்து எடுப்பதுபோல் "அன்னமாயன்றங்கருமறை பயந்த எம்பெருமான்" பாலாகிய திருமந்திரத்தை எடுத்தான். பாற்கடலைக் கடைந்து அமுதங்கொண்ட எம்பெருமான் வேதக் கடலினின்றும் அமுதமாகிய திருமந்திரத்தை எடுத்தான் என்று எம்பெருமான் வேதத்தை எடுத்த விதத்தையும், திருமந்திரத்தை வெளியிட்ட விதத்தையும் நாயனார் இவ்விருநூல்களிலும் ஒருபடியாகவே விளக்கியுள்ளார்.

## 5. பிள்ளைலோகாசாரியருடைய ரகசிய நூல்களைப் போலவே அமைந்துள்ள பகுதிகள்

நாயனாருடைய திருத்தமையனரான பிள்ளைலோகாசாரியருடைய ரகசிய நூல்களில் அமைந்துள்ளதைப் போலவே பல பகுதிகள் நாயனாருடைய நூல்களிலும் காணப்படுகின்றன.

1. பிள்ளைலோகாசாரியர், எம்பெருமானுக்கே உரியதான ஆத்மாவை சம்சாரிகளுக்கு அடிமைப்படுத்துவது மிகவும் இழிவான செயல் என்பதை ஒரு

1. ஆசார்யஹ்ருதயம் 16 2. அருளிசெயல் ரஹஸ்யம் ப. 9

உதாரணம் மூலம் விளக்குகிறார். "தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈச்வர சேஷமான ஆத்மவஸ்துவை சம்சாரிகளுக்கு சேஷமாக்குகை" என்று பிள்ளைலோகாசார்யர் அருளிச் செய்துள்ளார்.[1] இந்திரன் முதலிய தேவர்களுக்காக வைக்கப்பப்பட்ட ஹவிஸ்ஸை (யாகத்தில் சேர்க்கப்படும் உணவுப் பொருளை) மிகத் தாழ்ந்த பிறவியான நாய்க்கு இடுவதைப் போன்றதே எம்பெருமானுக்கே அடிமைப்பட்ட ஆத்மவஸ்துவை சம்சாரிகளுக்கு அடிமை ஆக்குவது என்கிறார். இக்கருத்தை அப்படியே உட்கொண்ட நாயனாரும் அருளிச் செயல் ரகசியத்தில் "எம்பெருமானுக்கு வாய்புகு சோறான ஆத்மாவைப் பிறர்க்காக்குகையாவது மறையவர் வேள்வியில் புரோடாசத்தை நாய்க்கிடுமாபோலே இருப்பதொன்றிறே" என்றருளிச்செய்துள்ளார்.[2]

2. பிள்ளைலோகாசாரியர் முமுக்ஷுப்படியில் சரமசுலோகப் பிரகரணத்தில் "தர்மஸம்ஸ்தாபநம் பண்ணப் பிறந்தவன் தானே ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப் பற்று என்கையாலே ஸாக்ஷாத் தர்மம் தானேயென்கிறது"[3] என்றொரு சூத்திரத்தை அருளியுள்ளார். 'தர்ம ஸம்ஸ்தாப நார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே' என்கிறபடியே உலகில் தர்மங்களை நிலை நிறுத்தப் பிறந்த ஸ்ரீகிருஷ்ணனே 'மோக்ஷத்துக்குச் சாதனமான எல்லா தர்மங்களையும் விட்டு என் ஒருவனையே பற்று' என்று சொன்னபடியால் மற்றவை தர்மங்களன்று; 'கிருஷ்ணம் தர்மம் ஸநாதநம்' என்கிறபடியே உண்மையான தர்மம் தானே என்பதை வெளியிட்டான் என்பது இதன் கருத்தாகும். இதை அடியொற்றியே நாயனாரும் அருளிச்செயல் ரகசியத்தில், "தர்மங்களை நிலை நிறுத்தப் பிறந்தவன்தானே தர்மங்களை விடுவித்து, அவற்றின் நிலையிலே தன்னை நிறுத்துகையாலே நேரே தர்மம் தானென்னுமிடத்தை வெளியிட்டானாயிற்று" என்றருளியுள்ளார்.[4]

3. ஸ்ரீவசனபூஷணத்தில் பிள்ளைலோகாசாரியர் "க்ராம குலாதிகளால் வரும் பேர் அநர்த்த ஹேது, ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்ய:"[5] என்ற சூத்திரங்களை அருளியுள்ளார். எம்பெருமானடியார்கள் அவர்கள் பிறந்த கிராமங்களையும் குலங்களையும் இட்டு அழைக்கப்படுவது அகங்காரத்தைப் பிறப்பிக்கும் என்பதால் அதைப் பழியாகக் கருதுவர்கள். எம்பெருமான் தங்கியிருக்கும் தேசத்தின் சம்பந்தத்தையிட்டே அவர்கள் வழங்கப்படுபவர்கள் என்று அடியவர்களின் பெருமையைக் கூறியுள்ளார்.

---

1. முமுக்ஷுப்படி - 62 2. அருளிச்செயல்ரஹஸ்யம் ப. 24
3. முமுக்ஷுப்படி - 234 4. அருளிச்செயல் ரஹஸ்யம் ப. 71 5. ஸ்ரீவசனபூஷணம்-79

"ஒரு தலையில் க்ராமகுலாதி வ்யபதேசம் குலந்தருமென்றும் மாசில்குடிப் பழியென்று பதியாகக் கோயிலில் வாழுமென்பர்கள்" என்று நாயனாரும் இதையே அருளியுள்ளார்.[1]

4. பரிசுத்த ஆத்ம சொரூபத்திற்கு பிராட்டியோடு ஒப்புமை உண்டு என்று பிள்ளைலோகாசாரியார் அருளியுள்ளார். "ஆறுப்ரகாரத்தாலே பரிசுத்தாத்ம ஸ்வரூபத்துக்கு தத்ஸாம்ய முண்டாயிருக்கும்"[2] என்பது பிள்ளைலோகாசார்யர் திருவாக்கு. அநந்யார்ஹசேஷத்வம் (அவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல்), அநந்ய சரணத்வம் (அவன் ஒருவனையே புகலாக நம்பியிருத்தல்), அநந்ய போக்யத்வம் (அவன் ஒருவனுக்கே இனியவனாக இருத்தல்), ஸம்ச்லேஷத்தில் தரிக்கை (சேர்க்கையால் தரித்திருத்தல்), விச்லேஷத்தில் தரியாமை (பிரிவில் தரியாதிருத்தல்), ததேக நிர்வாஹ்யத்யம் (அவன் ஒருவனுக்கே வசப்பட்ட ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளை உடையனாதல்) போன்ற ஆறு வகைகளாலே பரிசுத்த ஆத்ம சொரூபத்துக்குப் பிராட்டியோடு ஒப்புமை உண்டு என்று அருளிச் செய்திருக்கிறார்.

நாயனாரும் ஆசார்யஹ்ருதயத்தில் "இன்புமன்பும் முற்படுவது கொழுந்து விடுவதாகிறது, கடிமாமலர்ப் பாவையோடுள்ள ஸாம்ய ஷட்கத்தாலே"[3] என்று அதே கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

## 6. முமுக்ஷுப்படியில் உள்ள சூர்ணிகைகளை விளக்குதல்

பிள்ளைலோகாசாரியார் முமுக்ஷுப்படி என்னும் ரகசிய நூலை சூத்திர வடிவில் அமைத்துள்ளார். அச்சூத்திரங்கள் சிலவற்றை நாயனார் அருளிச் செயல் ரகசியத்தில் பாசுரங்களைக் கொண்டு மிக அழகாக விளக்கியுள்ளார். முமுக்ஷுப்படி சரமச்லோக ப்ரகணத்தில் "ஸர்வ தர்மாந்" என்பதற்கு மோக்ஷத்தை அடைவதற்குக் கடைப்பிடிக்கப்படும் ஸாதநங்கள் கூறப்பட்டுள்ளன.

"கர்மஞானபக்தியோகங்களும், அவதாரரஹஸ்ய ஞானம் புருஷோத்தம வித்யை, தேசவாசம், திருநாமஸங்கீர்த்தனம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாய புத்த்யா செய்யுமவையும்"[4] என்று பிள்ளைலோகாசாரியார் அருளிச்செய்துள்ளார். இதை விளக்கும் வகையில் நாயானார் அருளிச் செயல் ரகசியத்தில் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்கள் பலவற்றை எடுத்துக் காட்டியுள்ளார்.

---

1. ஆசார்யஹ்ருதயம்-35
2. ஸ்ரீவசனபூஷணம் - 241
3. ஆசார்யஹ்ருதயம் - 122
4. முமுக்ஷுப்படி - 195

"மோக்ஷமாகிற பெரிய பேறு பெறுகைக்கு சாஸ்திரங்களிலும் பதினெட்டோத்திலும் சொல்லப்பட்ட கர்மஜ்ஞானங்களைப் பரிகரமாகவுடைய பக்தியாகிற சாதனத்தை . . . . . . . . . . . . . "ஆணொப்பாரிவன்னேரில்லை"[1] என்கிற புருஷோத்தம வித்யை, "பிறவியஞ்சிறையறுக்கும்"[2] "நிலைவரம்பில்லாத"[3] அவதார ரஹஸ்ய ஞானம். "நற்பாலயோத்தி"[4] தொடக்கமான க்ஷேத்ரவாஸம். "பாடீர் அவன் நாமம்"[5] என்கிற ஸங்கீர்த்தநம், "கடைத்தலை சீய்க்கை"[6], "மாகந்த நீர் கொண்டு தூவிவலம் செய்கை"[7], "பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் கொண்டு"[8] "பூசனை செய்கை"[9] தொடக்கமாக ஸாதநபுத்தியோடே செய்யுமவற்றைக் காட்டுகிறது" என்று ஒவ்வொன்றுக்கும் பாசுரங்களை எடுத்துக்காட்டியுள்ளார்.[10]

2. ஸ்ரீகிருஷ்ணன் பாரத யுத்தத்திலே பார்த்தனுக்குச் சாரதியாய்த் தன் ஸௌலப்யகுணமெல்லாம் தோற்ற நிற்கிற நிலையை முமுக்ஷுப்படியில் பிள்ளைலோகாசாரியார் அழகாக வருணிக்கிறார். "கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூளிதூஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிய ஸாரத்ய வேஷத்தை "மாம்" என்று காட்டுகிறான்" என்பது பிள்ளைலோகாசாரியர் அருளிச்செய்துள்ள திருவாக்கு ஆகும்.[11]

இதே நிலையை நாயனார் அருளிச்செயல் ரகசியத்தில் கிருஷ்ணாவதாரப் பாசுரங்களையும் சேர்த்து விளக்கிக் காட்டுகிறார். "சேநாதூளியாலே புழுதிபடைத்த கொத்தார்கருங்குழலும்[12], குருவேர்ப்பபு அரும்பின கோளிழைவாண்முகமும்[13], குருமாமணிப்பூண் குலாவித்திகழும்[14] திருமார்வணிந்தவனமாலையும்[15], இடுக்கின மெச்சுதுசங்கமும்[16], அணிமிகுதாமரைக்கையிலே[17] கோத்த சிறுவாய்க்கயிறும், முடைகோலும், அர்த்த பிரகாசகமான ஜ்ஞான முத்ரையும், கட்டிநன்குடுத்த பீதகவாடையும்[18], சிலம்பும்செறிகழலும்[19], வெள்ளித்தளையும்[20], சதங்கையும்[21] கலந்தார்ப்பத் தேருக்குக்கீழே நாற்றின கனைகழலுமாய்[22] நிற்கிற நிலையை 'மாம்' என்று காட்டுகிறான்" என்று நாயனார் காட்டியுள்ளார்.[23]

---

1 பெரியாழ். திரு 1-1-3
2. திருவாய். 1-3-11
3. மேலது 1-3-2
4. மேலது 7-5-1
5. மேலது 10-5-5
6. மேலது 10-2-7
7. மேலது 7-10-2
8. மேலது 5-2-9
9. மேலது 10-2-4
10. அ.ர ஹஸ்யம் ப. 62
11. முமுக்ஷுப்படி - 218
12. பெரியாழ். திரு. 2-1-7
13. திருவாய்மொழி 7-7-8.
14. பெரியாழ். திரு 1-2-10
15. நாச். திரு 13-3
16. பெரியாழ். திரு 2-1-1
17. திருவாய். 10-3-5
18. பெரியாழ். திரு 3-6-10
19. மூன்றாம் திரு. 90
20. பெரியாழ். திரு 1-2-3
21. பெரியாழ். திரு 1-2-20
22. திருவாய். 3-6-10
23. அ.ர ஹஸ்யம் ப.73

3. எம்பெருமானுடைய பரத்வம் முதலான நிலைகளையும், அவற்றின் தன்மைகளையும், அர்ச்சாவதாரத்தின் எளிமையையும் பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீவசனபூஷணம் என்றும் ரகசிய நூலில் உதாரணங்களோடு தெளிவாகக் காட்டியுள்ளார். "பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம்; ஆவரணஜலம் போலே பரத்வம்; பாற்கடல் போலே வ்யூஹம்; பெருக்காறுபோலே விபவங்கள்; அதிலே தேங்கிய மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்" என்பது அவருடைய திருவாக்கு.[1]

அப்பொழுதே தண்ணீரைப் பருகி விடாயைப் தீர்த்துக் கொள்ள வேண்டிய வேட்கையுடையவனுக்கு, பூமிக்குள் பதிந்திருக்கும் நீரும், அண்டத்துக்கு வெளியே பெருகிக் கிடக்கிற ஆவரணஜலமும், கிட்டவரிதான பாற்கடலும், என்றைக்கோ பெருகிய பெருக்காறுகளும் பயனற்றவை; உடனே விடாய் தீரப் பருகலாம்படி தேங்கியிருக்கிற மடுக்களே பயனுள்ளவை. அதைப்போல, எம்பெருமானை அப்பொழுதே கண்டு பற்ற வேண்டுமென்று ஆசைப்படுகின்ற அடியவர்களுக்கு இதயத்திற்குள்ளே உறைகின்ற அந்தர்யாமித்வமும், அண்டத்திற்கு வெளியே உள்ள பரத்வமும், கிட்டவரிதான வ்யூஹமும், காலத்தால் முற்பட்ட ராமகிருஷ்ணாதி விபவங்களும் பயன்படாதவையாகும்; பிரமேயமான எம்பெருமானுடைய கடைசி நிலையான அர்ச்சாவதாரமே எல்லோருக்கும் எக்காலத்திலும் பயன்படுவதாகும் என்று இங்கு பிள்ளை உலகாசிரியர் அருளிச் செய்துள்ளார்.

இதையே அடியொற்றி நாயனார் எம்பெருமானுடைய ஐந்து நிலைகளுக்குப் பொருத்தமாக பிரமாணங்களும் ஐவகைப்பட்டிருக்கும் என்று காட்டுகிறார்.

"அதவா வேத வேத்ய ந்யாயத்தாலே பரத்வ பர முதுவேதம் வ்யூஹ வ்யாப்தி அவதரணங்களில் ஓதின நீதி கேட்டமநு படுகதைகளாய் ஆக மூர்த்தியில் பண்ணின தமிழானவாறே, வேதத்தை திராவிடமாகச் செய்தார் என்னும்" என்பது ஆசார்யஹ்ருதயத்திலுள்ள சூர்ணிகையாகும்.[2]

எம்பெருமான் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலையைச் சொல்லுகையாலே பரத்வத்திலே நோக்காய் இருக்கிற [3]முதுவேதமானது, வியூஹத்தில் ஓதினநீதியாய் வியூஹத்தின் குணங்கள், உருவங்கள், செயல்கள், முதலியவற்றை விரிவாகச் சொல்லுதற்காக "ஓதினாய் நீதி"[4] என்று சொல்லப்பட்ட பாஞ்சாத்திரமாயும், எல்லா உயிர்களுக்கும் உள்ளுயிராய் எங்கும் பரந்து நின்றுள்ள அந்தர்யாமித்வ நிலையைச் சொல்வதற்காக

1. ஸ்ரீவசநபூஷணம் 40
2. ஆசார்யஹ்ருதயம் 70
3. திருவாய்மொழி 1-6-2
4. இரண்டாம் திருவந். 48

"கேட்ட மநு"[1] என்கிறபடியே மநு முதலியவர்களின் ஸ்மிருதியாகவும், எம்பெருமான் நல்லவர்களைக் காக்க இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்களைச் செய்தநிலையில் அந்தந்த அவதாரங்களில் செய்த செயல்கள் முதலியவற்றைச் சொல்லுவதற்காக "படுகதையும்"[2] என்கிறபடியே செயல்களைக் கூறுகின்ற ஸ்ரீ ராமாயணம், மஹாபாரதம் என்னும் இதிகாசங்களாகவும், அவதாரத்திற்குப் பிற்பட்டவரும் இழவாதபடி மிக்க சுலபனாய் எல்லோரும் எளிதில் பற்றலாம்படி உள்ள அர்ச்சாவதாரமான நிலையில், அர்ச்சாவதாரத்தின் பெருமையைச் சொல்லும் பொருட்டு, "சடகோபன் பண்ணிய தமிழ்"[3] என்னும்படி அர்ச்சாவதாரத்தைப் போலே, தானே எல்லா வகையாலும் சுலபமாய் எல்லோரும் கற்பதற்கு உறுப்பாகத் தமிழின் வடிவாகக் கொண்டு திருவாய்மொழியாக அவதரித்தது. இவ்வாறு எம்பெருமானுடைய ஒவ்வொரு நிலைகளிலும் வேதமும் அந்தந்த நிலைகளின் பெருமையைக் கூறுவதற்கு வெவ்வேறு நிலைகளை அடைந்தது என்றருளியுள்ளார்.

"பெரும் புறக்கடலும் சுருதிசாகரமும், அலைத்து ஆழ்ந்து ஒடும் இடங்களில் அயோக்கியர்க்குச் சமைத்த மடுவும் சாய் சரகமும் மாந மேயு சரமம்" என்ற சூர்ணிகையிலும் இக்கருத்தையே நாயனார் கூறியுள்ளார்.[4] திருவாய்மொழியும், திருவாய்மொழியில் பேசப்படுகின்ற அர்ச்சாவதாரமும் ஆகிற பிரமாணத்தின் இறுதிநிலையும் பிரமேயத்தின் முடிந்தநிலையும், இத்திருவாய்மொழியின் முந்தைய நிலைகளையும், அர்ச்சாவதாரத்தின் முந்தைய நிலைகளையும் அறிந்து வணங்கும் ஆற்றல் இல்லாதார்க்குச் சுலபமாகச் செய்யப்பட்டவை என்கிறார்.

பெரும்புறக்கடல் – பரத்வ நிலையிலுள்ள எம்பெருமான்; அலைத்து ஒடுமிடம்–வியூஹநிலை; ஆழ்ந்துநிற்கும் இடம் – உயிர்க்குயிராய் (அந்தர்யாமியாய்) நிற்கும் நிலை. ஒடுமிடம் – அவதாரங்கள். சமைத்த மடு – அர்ச்சாவதாரம்; சுருதி சாகரம் – வேதக்கடல்; அலைத்து நிற்குமிடம்– வியூஹ மூர்த்தியைப் பற்றிப் பேசுகின்ற பாஞ்சராத்திரம்; ஆழ்ந்து நிற்குமிடம் – அந்தர்யாமித்வத்தைப் பற்றிப் பேசுகின்ற மனுதர்மம் முதலான ஸ்மிருதிகள்; ஒடுமிடம் – அவதாரங்களைப் பற்றிப் பேசுகின்ற இதிகாச புராணங்கள்; சமைத்த சாய்சரகம் – அர்ச்சாதாரத்தைப் பற்றிப் பேசுகின்ற திருவாய்மொழி. பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி நிலைகள் அந்தந்த காலங்களில், அந்த இடங்களில் இருந்தவர்களைத் தவிர நம்போல்வார்க்குக் காண முடியாத

1. நான்முகன் திருவந். 76 2. மேலது. 76 3. திருவாய்மொழி 2-7-11
4. ஆசார்ய ஹ்ருதயம் - 74

நிலைகளாகும். ஆனால் பிரமேயமான எம்பெருமானுடைய கடைசி நிலையான அர்ச்சாவதாரம் "பின்னார் வணங்கும் சோதி"[1] யாய் எல்லோரும் கண்டு வணங்கிப் பயன்பெறும் வகையில் அமைந்துள்ளது. அதைப்போல, வேதங்களும், ஸ்மிருதிகளும், பாஞ்சராத்ரமும், இதிகாச புராணங்களும் அனைவரும் கற்றுப் பயன் பெற முடியாத நிலைமைகளையுடையன. ஆனால் பிரமாணத்தின் முடிந்த நிலையில் அமைந்த திருவாய்மொழி, பெண்ணும் பேதையும் கற்கலாம்படி எல்லோருக்கும் பயன்படக்கூடிய விதத்தில் அமைந்துள்ளது என்று ப்ரமேயமான எம்பெருமானுடைய நிலைகளையும் பிரமாணமான வேதத்தின் நிலைகளையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

2. அர்ச்சாவதார நிலையில் எம்பெருமானுக்கு எல்லா குணங்களும் பரிபூர்ணமாக நிறைந்திருக்கும் என்பதை பிள்ளைலோகாசாரியர், "பூர்த்தியுள்ளதும் அர்ச்சாவதாரத்திலே; பூர்ணம் என் கையாலே எல்லா குணங்களும் புஷ்கலங்கள்"[2] என்றருளியுள்ளார். ஸர்வஜ்ஞனான எம்பெருமான்தானே சொல்லப் புகுந்தாலும் சொல்லித் தலைக்கட்ட முடியாதபடி ஸகல கல்யாண குணங்களும் பூர்ணமாக இருப்பது அர்ச்சாவதாரத்திலே என்கிறார்.

இதே கருத்தை நாயனார் "தமருகந்த அடியோமுக்கே என்னும் பின்னானார் வணங்குமிடத்திலே எல்லாம் பூர்ணம்"[3] என்ற சூர்ணிகையில் அருளிச்செய்துள்ளார். அவதாரத்துக்குப் பிற்பட்டவர்களும் அனுபவிக்கலாம்படி அமைந்துள்ளதும், அடியார்களுக்கு வசப்பட்டிருக்கின்ற நிலையினையுடையதுமான அர்ச்சாவதாரத்திலே பரத்வம் முதலானவைகளில் அனுபவிக்கத் தக்க குணங்கள் எல்லாம் நிறைந்திருக்கும் என்கிறார். குறிப்பாக நம்மாழ்வார் மங்களாசாஸனம் செய்தருளிய திவ்யதேசங்கள் முப்பதிலும் எழுந்தருளியுள்ள ஒவ்வொரு எம்பெருமானுக்கும் ஒரு குறிப்பிட்ட திருக்கல்யாணகுணம் மிகுந்திருக்கும் என்பதனை இருபத்தெட்டு சூர்ணிகைகளில் நாயனார் விவரித்துள்ளார்.

## 7. உரைநடைப் பாங்கில் உரை வரைதல்:

ஆசார்யஹ்ருதயத்தில் நாயனார் நம்மாழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் உரையாடல் நடப்பதைப் போன்று சூர்ணிகை அருளியுள்ளார்.

1. திருநெடுந்தாண்டகம் - 10
2. ஸ்ரீவசனபூஷணம் 35, 37
3. ஆசார்யஹ்ருதயம் - 158

"இன்றென்னைப் பொருளாக்கி"[1] என்கிற பாசுரத்தாலே எம்பெருமானை நோக்கி 'இன்று இப்படிக் காரணம் இல்லாமலேயே அடியேனை அடிமை கொண்ட நீ, இத்துணை காலம் என்னை அடிமை கொள்ளாதிருந்ததற்குக் காரணத்தை அருளிச் செய்யவேண்டும்' என்று மடிபிடித்துக் கேட்கிறார் நம்மாழ்வார். அதற்கு எம்பெருமான் என்ன விடை கூறலாமென்று தனக்குள் ஆராய்ந்து பார்த்தும் தக்க விடை ஒன்றும் கூற முடியாதவனாய் நின்றமையை நாயனார் விரித்துரைக்கின்றார். எம்பெருமான் தனக்குள்ளே ஆராய்ந்த முறையை ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் நடக்கும் உரையாடலாக நாயனார் காட்டுகிறார்.

எம்பெருமான்: ஆழ்வீர்! இன்று இப்படி ஆதரிக்கிற நான் இத்தனைநாள் ஆதரியாமைக்குக் காரணம் கேட்டீர்; உம்மை நான் அநாதரித்தேனல்லேன். "தூராக்குழி தூர்த்து எனை நாள் அகன்றிருப்பன்"[2] என்றும், "அற்ப சாரங்கள் அவை சுவைத்து அகன்றொழிந்தேன்"[3] என்றும் நீர் தாமே பேசியிருக்கும்படியான ஐம்புல இன்பங்களின் ஆசையன்றோ நீர் தொன்றுதொட்டு இவ்வுலக வாழ்விலே உழன்று திரிந்ததற்கு காரணம்.

ஆழ்வார்: "ஓர் ஐவர் யாவரையும் மயக்க நீ வைத்த"[4] என்றும் "அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்கள்"[5] என்றும் சொல்லுகிறபடியே பொருள்களும் அவற்றில் ஆசைக்குக் காரணமான இந்திரியங்களும் வேண்டாதாரை அகற்றுதற்கு நீயே வைத்தவை அன்றோ?

எம்பெருமான்: அந்த இந்திரியங்களுக்கு வசப்பட்டிருந்ததற்குக் காரணம் மூன்று குணங்களோடு கூடின சரீர சம்பந்தம் அன்றோ?

ஆழ்வார்: "அந்நாள் நீ தந்த ஆக்கை"[6] என்றும், "அது நிற்கச் சுமடு தந்தாய்"[7] என்றும் சொல்லியுள்ளபடி அந்த சரீரமும் நீ கொடுத்தத்தனை அன்றோ?

எம்பெருமான்: அந்த சரீர சம்பந்தத்துக்குக் காரணம் "முன் செய்த முழுவினை"[8] என்று நீர் சொன்னபடி அநாதிகாலமாக நீர் ஈட்டிய நல்வினை தீவினைகள் அன்றோ ?

---

1. திருவாய்மொழி 10-8-9 2. மேலது 5-8-6 3. மேலது 3-2-6 4. மேலது 7-1-8
5. மேலது 5-7-8 6. மேலது 3-2-1 7. மேலது 3-1-10 8. மேலது 1-4-2

ஆழ்வார்: "துயரமேதரு துன்ப வின்பவினைகளாய்"[1] என்றும் "உற்ற இரு வினையாய்"[2] என்றும் சொல்லுகிறபடியே அறிவில்லாதவைகளாய் ஆற்றல் இல்லாதவைகளாய் அழிந்து போமவையாய் இருந்துள்ள நல்வினை தீவினைகளான கர்மங்கள், உன்னுடைய சீற்ற வடிவமாகவும் அருள் வடிவமாகவும் பலிக்குமவை ஆகையாலே கருமங்களும் நீ இட்ட வழக்கன்றோ?

எம்பெருமான்: "ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் சொல்"[3] என்றும் "மதியிலேன் வல்வினையே மாளாதோ"[4] என்றும் நீரே சொல்லுகையாலே நல்வினை தீவினைகளுக்குக் கர்த்ருத்வமும் (செய்வதும்) போக்த்ருத்வமும் (அவற்றின் பயனை அனுபவித்தலும்) உம்மதேயன்றோ?

ஆழ்வார்: "தானாங்காரமாய்ப்புக்குத் தானே தானே ஆனான்"[5] என்று நான் சொல்லியுள்ளபடி நீயே அபிமாநியாய்ப்புக்கு ஆன்மாவிலும் ஆன்மாவோட சம்பந்தப்பட்ட பொருட்களிலும் எனக்கு உண்டான அபிமானத்தைத் தவிர்த்து நீயே அபிமானியானாய் உன்னுடைய படியை அநுசரித்துச் சொல்லுகிற "கடல் ஞாலம்" என்ற திருவாய்மொழியில் "செய்கைப் பயனுண்பேனும் யானே"[6] என்றும் "கருமமும் கரும பலனுமாகிய காரணன் தன்னை"[7] என்றும் சொல்லியுள்ளபடியே எல்லாக் காரியங்களையும் செய்கிறவனும் அவற்றின் பலன்களை உண்பவனும் நீயே அன்றோ!

எம்பெருமான்: "யானே என்னை அறியகிலாதே, யானே என்றனதே என்றிருந்தேன்"[8] என்றும், "எஞ்ஞான்று நாம் இருந்திருந்திரங்கி நெஞ்சே, மெய்ஞ்ஞானமின்றி வினையியல் பிறப்பழுந்தி"[9] என்றும் நீர் சொன்ன அஞ்ஞானம், அந்யதாஞானம் முதலியவைகளாலே அன்றோ உமக்கு அந்த கர்த்ருத்வமும், போக்த்ருத்வமும் உண்டாயின?

1. திருவாய்மொழி 3-6-8 2. மேலது 10-10-8 3. மேலது 4-7-3 4. மேலது 1-4-3
5. மேலது 10-7-11 6. மேலது 5-6-4 7. மேலது 3-5-10 8. மேலது 2-9-9
9. மேலது 3-2-7

"இன்றென்னைப் பொருளாக்கி"[1] என்கிற பாசுரத்தாலே எம்பெருமானை நோக்கி 'இன்று இப்படிக் காரணம் இல்லாமலேயே அடியேனை அடிமை கொண்ட நீ, இத்துணை காலம் என்னை அடிமை கொள்ளாதிருந்ததற்குக் காரணத்தை அருளிச் செய்யவேண்டும்' என்று மடிபிடித்துக் கேட்கிறார் நம்மாழ்வார். அதற்கு எம்பெருமான் என்ன விடை கூறலாமென்று தனக்குள் ஆராய்ந்து பார்த்தும் தக்க விடை ஒன்றும் கூற முடியாதவனாய் நின்றமையை நாயனார் விரித்துரைக்கின்றார். எம்பெருமான் தனக்குள்ளே ஆராய்ந்த முறையை ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் நடக்கும் உரையாடலாக நாயனார் காட்டுகிறார்.

எம்பெருமான்: ஆழ்வீர்! இன்று இப்படி ஆதரிக்கிற நான் இத்தனைநாள் ஆதரியாமைக்குக் காரணம் கேட்டீர்; உம்மை நான் அநாதரித்தேனல்லேன். "தூராக்குழி தூர்த்து எனை நாள் அகன்றிருப்பன்"[2] என்றும், "அற்ப சாரங்கள் அவை சுவைத்து அகன்றொழிந்தேன்"[3] என்றும் நீர் தாமே பேசியிருக்கும்படியான ஐம்புல இன்பங்களின் ஆசையன்றோ நீர் தொன்றுதொட்டு இவ்வுலக வாழ்விலே உழன்று திரிந்ததற்கு காரணம்.

ஆழ்வார்: "ஓர் ஐவர் யாவரையும் மயக்க நீ வைத்த"[4] என்றும் "அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்கள்"[5] என்றும் சொல்லுகிறபடியே பொருள்களும் அவற்றில் ஆசைக்குக் காரணமான இந்திரியங்களும் வேண்டாதாரை அகற்றுதற்கு நீயே வைத்தவை அன்றோ?

எம்பெருமான்: அந்த இந்திரியங்களுக்கு வசப்பட்டிருந்ததற்குக் காரணம் மூன்று குணங்களோடு கூடின சரீர சம்பந்தம் அன்றோ?

ஆழ்வார்: "அந்நாள் நீ தந்த ஆக்கை"[6] என்றும், "அது நிற்கச் சுமடு தந்தாய்"[7] என்றும் சொல்லியுள்ளபடி அந்த சரீரமும் நீ கொடுத்தத்தனை அன்றோ?

எம்பெருமான்: அந்த சரீர சம்பந்தத்துக்குக் காரணம் "முன் செய்த முழுவினை"[8] என்று நீர் சொன்னபடி அநாதிகாலமாக நீர் ஈட்டிய நல்வினை தீவினைகள் அன்றோ ?

1. திருவாய்மொழி 10-8-9 2. மேலது 5-8-6 3. மேலது 3-2-6 4. மேலது 7-1-8
5. மேலது 5-7-8 6. மேலது 3-2-1 7. மேலது 3-1-10 8. மேலது 1-4-2

ஆழ்வார்: "துயரமேதரு துன்ப வின்பவினைகளாய்"[1] என்றும் "உற்ற இரு வினையாய்"[2] என்றும் சொல்லுகிறபடியே அறிவில்லாதவைகளாய் ஆற்றல் இல்லாதவைகளாய் அழிந்து போமவையாய் இருந்துள்ள நல்வினை தீவினைகளான கர்மங்கள், உன்னுடைய சீற்ற வடிவமாகவும் அருள் வடிவமாகவும் பலிக்குமவை ஆகையாலே கருமங்களும் நீ இட்ட வழக்கன்றோ?

எம்பெருமான்: "ஈவிலாத தீவினைகள் எத்தனை செய்தனன் சொல்"[3] என்றும் "மதியிலேன் வல்வினையே மாளாதோ"[4] என்றும் நீரே சொல்லுகையாலே நல்வினை தீவினைகளுக்குக் கர்த்ருத்வமும் (செய்வதும்) போக்த்ருத்வமும் (அவற்றின் பயனை அனுபவித்தலும்) உம்மதேயன்றோ?

ஆழ்வார்: "தானாங்காரமாய்ப்புக்குத் தானே தானே ஆனான்"[5] என்று நான் சொல்லியுள்ளபடி நீயே அபிமாநியாய்ப்புக்கு ஆன்மாவிலும் ஆன்மாவோட சம்பந்தப்பட்ட பொருட்களிலும் எனக்கு உண்டான அபிமானத்தைத் தவிர்த்து நீயே அபிமானியானாய் உன்னுடைய படியை அநுசரித்துச் சொல்லுகிற "கடல் ஞாலம்" என்ற திருவாய்மொழியில் "செய்கைப் பயனுண்பேனும் யானே"[6] என்றும் "கருமமும் கரும பலனுமாகிய காரணன் தன்னை"[7] என்றும் சொல்லியுள்ளபடியே எல்லாக் காரியங்களையும் செய்கிறவனும் அவற்றின் பலன்களை உண்பவனும் நீயே அன்றோ!

எம்பெருமான்: "யானே என்னை அறியகிலாதே, யானே என்றனதே என்றிருந்தேன்"[8] என்றும், "எஞ்ஞான்று நாம் இருந்திருந்திரங்கி நெஞ்சே, மெய்ஞ்ஞானமின்றி வினையியல் பிறப்பழுந்தி"[9] என்றும் நீர் சொன்ன அஞ்ஞானம், அந்யதாஞானம் முதலியவைகளாலே அன்றோ உமக்கு அந்த கர்த்ருத்வமும், போக்த்ருத்வமும் உண்டாயின?

1. திருவாய்மொழி 3-6-8 2. மேலது 10-10-8 3. மேலது 4-7-3 4. மேலது 1-4-3
5. மேலது 10-7-11 6. மேலது 5-6-4 7. மேலது 3-5-10 8.மேலது 2-9-9
9. மேலது 3-2-7

ஆழ்வார்: "அயர்ப்பாய்த் தேற்றமுமாய்"[1] என்றும் "மாட்டாத பல சமயமதி கொடுத்தாய்"[2] என்றும் "உள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட உபாயங்களும்"[3] என்றும் சொல்லியபடியே ஞானமும் அஞ்ஞானமும் நீ இட்ட வழக்கு ஆகையாலே அஞ்ஞான அந்யதா ஞானங்கள் முதலியன விளைவிக்கையும் உன் தொழில்.

இப்படிப்பட்ட உரையாடல் எம்பெருமானுக்கும் ஆழ்வாருக்கும் நடைபெறவில்லையானாலும் நாம் இப்படிச் சொன்னால் ஆழ்வார் இன்னபடி விடை கூறுவர் என்று இவ்வளவும் எம்பெருமான் தானே ஊகித்துக் கொண்டதாக நாயனார் ஊகித்தருளி உரையாடல் பாங்கில் திறம்பட உரைத்துள்ளார்.

இவ்வாறு பல நயமான உத்திகளை ரகசியநூல்களிலும் கையாண்டு தன்னிகரற்று விளங்கியவர் அழகியமணவாளப்பெருமாள் நாயனார் ஒருவரே எனின் அது மிகையாகாது.

## முடிவுகள்

1. ஆசார்யன் ஏகாந்தமான இடத்திலே தன்னுடைய சீடனுக்குக் கூறும் விளக்கங்கள் ரகசியங்கள் எனப்படுகின்றன.

2. திருமந்திரம், துவயம், சரமசுலோகம், ஆகிய மூன்று மந்திரங்களும் ரஹஸ்யத்ரயங்கள் என்றும், அவற்றை விளக்குகின்ற நூல்கள் ரகசிய நூல்கள் என்றம் வழங்கப்படுகின்றன.

3. எம்பெருமானார்க்கு முன்புள்ள ஆசார்யர்கள் ரஹஸ்யத்ரயத்தினுடைய அர்த்தத்தை ஏகாந்தமாகத் தமது சீடர்களுக்கு உபதேசித்து வந்தனர். எம்பெருமானார் அந்த வரம்பையறுத்து ஆசையுடையோர் எல்லோர்க்கும் உபதேசித்தும் உபதேசசிப்பித்தும போந்தார்.

4. எம்பெருமானார் காலத்திற்குப் பின்பே ரஹஸ்யார்த்தங்கள் ஏடுபடுத்தப்பட்டு ரகசிய நூல்களாய்த் தோன்றின.

5. முதன்முதலில் அருளிச்செய்யப்பட்ட ரகசியநூல் பராசரபட்டர் அருளிய அஷ்டச்லோகியாகும்.

6. ரகசிய நூல்கள் வரிசையில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆசார்யஹ்ருதயம், அருளிச் செயல் ரஹஸ்யம், என்ற இரண்டு நூல்களை அருளிச் செய்துள்ளார்.

---

1. திருவாய்மொழி 7-8-6 2. மேலது 3-1-4 3. மேலது 5-10-4

7. ஆசார்யரான நம்மாழ்வாருடைய திருவுள்ளக் கருத்துக்களைத் தெளிய வெளியிடுவதால் ஆசார்யஹ்ருதயம் என்று பெயர் பெற்றது.

8. இந்நூல் அருளிச் செயல் சொற்றொடர்களை மிகுதியாகக் கொண்டு தொகுக்கப்பட்டுள்ளது.

9. எம்பெருமான் சம்சாரிகள் நல்லன தீயனவற்றைப் பகுத்துணரும் விவேகத்தைப் பெறுவதற்காக சாத்திரங்களை அருளியதாக நாயனார் குறிப்பிட்டுள்ளார்.

10. அந்த சாத்திரங்களினால் தத்துவ ஞானம் பெறுவது அரிதென்று கருதி சாத்திர தாத்பரியமான திருமந்திரத்தை எம்பெருமான் வெளியிட்டருளியுள்ளதை நாயனார் கூறியுள்ளார்.

11. சாத்திரங்களிலும், சாத்திரங்களின் தாத்பரியமான (கருத்துப் பொருளான) திருமந்திரத்திற்கும் உள்ள விஷய வேறுபாடுகளை நாயனார் எடுத்துக் காட்டியுள்ளார்.

12. சாத்திரங்களிலும், திருமந்திரத்திலும் ஊன்றின அதிகாரிகளின் தன்மைகளை விரித்துரைத்துள்ளார்.

13. திருவாய்மொழி வேதமே என்பதைப் பல பிரமாணங்கள் மூலம் நாயனார் திறம்பட விளக்கியுள்ளார்.

14. திருவாய்மொழிக்கும் வேதத்தைப் போல நித்யத்வமும் அபௌருஷேயத்வமும் உண்டு என நிரூபித்துள்ளார்.

15. நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்களும் நான்கு வேதங்களோடு ஒக்கும் என்றும், திருவாய்மொழி சந்தோக சாமத்தோடு ஒக்கும் என்றம் கூறியுள்ளார்.

16. திருவாய்மொழியை வேதவிளக்க நூலாகவும் கொள்ளலாம் என்று தெரிவித்துள்ளார்.

17. ஆனால் வேதவிளக்க நூல்களான இதிகாச புராணங்களை அருளிய ரிஷிகளை விட நம்மாழ்வாருக்கு நாயனார் உயர்வு கூறியுள்ளார்.

18. திருவாய்மொழிக்குச் சேராத சாத்திரங்கள் விலக்கப்படவேண்டியவை என்றருளியுள்ளார்.

19. எம்பெருமானுக்கு ஐந்து நிலைகள் இருப்பதைப் போல, அந்நிலைகளை விளக்குவதற்காக வேதமும் ஐந்து நிலைகளை அடைவதாக விளக்கியுள்ளார்.

20. எம்பெருமான் எல்லோருக்கும் எளியனாய் அர்ச்சாவதாரமான நிலையில் இருப்பதுபோல வேதமும் எல்லோரும் கற்பதற்கு உறுப்பாகத் தமிழ் வடிவில் திருவாய்மொழியாக அவதரித்தது என்றருளி யுள்ளார்.

21. அர்ச்சாவதாரத்தை அது செய்யப்பட்ட பொருள்களைக் கொண்டும், திருவாய் மொழியினைப் பாஷையைக் கொண்டும் இகழ்ந்தால் எவ்வளவு பாவமோ அவ்வளவு பாவம் நம்மாழ்வாருடைய குலத்தை ஆராய்வதால் உண்டாகும் என்று நாயனார் கூறியுள்ளார்.

22. இடைச் சேரியில் பிறந்த கிருஷ்ணனுடைய பிறவியையும், வலைச்சேரியில் பிறந்த வியாசருடைய பிறவியையும் விட நம்மாழ்வார் பிறவி மிகவும் உயர்ந்தது என்று நாயனார் தெரிவித்துள்ளார்.

23. பிராட்டியும், பரதனும் ஸ்ரீ கிருஷ்ணனும் பிறந்து தங்கள் குலத்துக்குப் பெருமையுண்டாக்கினாற்போல் ஆழ்வாரும் பிறந்து தங்கள் குலத்துக்குப் பெருமை உண்டாக்கியதாக நாயனார் அருளிச் செய்துள்ளார்.

24. தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்களாயினும் எம்பெருமானடியார்களாக இருப்பின் அவர்கள் வணங்கத் தக்கவர் என்பதைப் பல எடுத்துக்காட்டுகளுடன் விளக்கியுள்ளார். எம்பெருமானோடு சம்பந்தம் இல்லாத வர்ணம், ஆச்ரமம், கல்வி, ஒழுக்கம், அறிவு முதலியவை பயனற்றவை என்று நாயனார் கூறியுள்ளார்.

25. எம்பெருமானுக்கு அடிமை செய்வதற்குத் தக்க பிறவியே உயர் பிறவி என்பது நாயனாரின் கருத்தாகும்.

26. ஆழ்வார் இந்த சம்சாரத்தில் பிறந்தவர்களிலே ஒருவர் என்றும் ஆழ்வாருடைய பெருமைக்குக் காரணம் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கிருபையே என்றும் அறுதியிட்டுக் கூறுகிறார்.

27. ஆழ்வாருடைய பக்தி சாதனபக்தியும் அன்று. எம்பெருமானிடம் விரும்பிப் பெற்றதும் அன்று. திருத்துழாய்க்குப் பரிமளம் போலே கூடப் பிறந்ததாகும் என்றருளியுள்ளார்.

28. ஆழ்வாருடைய பக்தி இப்பிறவியில் செய்த சாதனத்தால் உண்டானதுமன்று: முற்பிறவிகளில் உண்டான பழக்கத்தால் வந்ததுமன்று. ஒரு முயற்சியும் இல்லாமல் எம்பெருமானுடைய திருவருளாலே இப்பிறவியிலேயே பெறப்பட்டது என்பதை நாயனார் தெளிவாகக் காட்டியுள்ளார்.

29. ஆழ்வாருடைய அனுமதியும் இச்சையும் எம்பெருமானுடைய அருளடியாக வந்தவை.

30. பக்தி ஆழ்வாருக்கு எம்பெருமானையடைய சாதனம் அன்று. இவருக்கு பக்தி உண்டாவதற்குக் காரணமாகச் சொன்ன எம்பெருமனுடைய திருவருளே அடிசேருகையாகிற பேற்றுக்கும் காரணம் என்கிறார்.

31. ஆழ்வார் ஞான தசையில் தாமான தன்மையில் நின்று பேசுவர். அன்பு நிலையில் வேறு நிலையினை அடைந்து பெண் பேச்சாகப் பேசுவர்.

32. ஆத்மாவுக்குப் பெண் தன்மை இயல்பாக அமைந்ததாகையால் ஆழ்வார்க்குப் பெண் பேச்சு வந்தேறியன்று என்று நாயனார் கூறியுள்ளார்.

33. பரிசுத்தமான ஆத்ம சொரூபத்திற்குப் பிராட்டியோடு ஆறுவகையில் ஒப்புமை உண்டு என்று கூறியுள்ளார்.

34. பெரிய பிராட்டியோடு மட்டுமல்லாமல் தேவிமார்கள் மூவரோடும் ஆழ்வார்க்கு ஒப்புமை உண்டு என்பதை நாயனார் விரிவாக விளக்குகிறார்.

35. பக்தி நிலையில் எம்பெருமானுடைய அடியார் எல்லாரோடும் இவருக்கு ஒப்புமை உண்டென்று நாயனார் காட்டியுள்ளார்.

36. தோழி, தாய், மகள் முதலான நிலைகளில் ஆழ்வார் பேசும் பேச்சுக்களின் உட்கருத்தையும், அப்பேச்சுக்கள் இடம் பெற்றுள்ள பதிகங்களையும் நாயனார் வகைப்படுத்தியுள்ளார்.

37. ஆழ்வார் பக்தி நிலையில் பேசும் அந்யாபதேசங்களுக்கு நாயனார் உள்ளுறை பொருளுரைத்துள்ளார்.

38. ஆழ்வார் தூது விடுகின்ற பதிகங்களில், ஆசாரியர்கள் முதலியவர்களே பறவைகளாகக் கொள்ளப்படுவதாக உட்பொருள்காட்டியுள்ளார்.

39. எம்பெருமானை ஒரு அரசனாகக் கூறி எம்பெருமானின் ஐந்து நிலைகளையும் அரசன் செய்கின்ற செயல்களுடன் நாயனார் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

40. நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ள அர்ச்சாவதார எம்பெருமான்களின் திருக்கல்யாண குணங்களை ஆழ்வார் பாசுரங்களைக்கொண்டே அழகுற விளக்கியுள்ளார்.

41. ஆழ்வார் பதினாறு வயதில் பிரபந்தம் பாடத் தொடங்கியதாக நாயனார் தெரிவித்துள்ளார்.

42. ஆழ்வார் எம்பெருமானைக் கவிபாட வேணுமென்று நினைத்துப் பாடினாரல்லர். ஆழ்வாருக்கு எம்பெருமானருளால் பிறந்த ஞானமாகிற அமுதக் கடலானது சொற்களாகப் பெருக்கெடுத்துத் திருவாய்மொழியாக அவதரித்தது என்று கூறியுள்ளார்.

43. பொருள்களின் ஒற்றுமையால் திருவாய்மொழிக்கு கீதை ஒப்பாகச் சொல்லப்படும் என்பதைப் பாசுரங்கள் கொண்டு காட்டியுள்ளார்.

44. கீதையைக் காட்டிலும் திருவாய்மொழிக்கு உயர்வும் கூறுகிறார். ஆழ்வார் கீதையைப் பிரமாணமாகக் கொண்டதால்தான் அதற்கு ஏற்றம் உண்டாயிற்று என்றும் அருளிச் செய்துள்ளார்.

45. ஆழ்வார் அதிகம் உபதேசிப்பது சம்சாரிகளுக்கும், எம்பெருமானுக்குமே என்று கூறி அதற்கான காரணத்தையும் குறிப்பிட்டுள்ளார்.

46. சம்சாரிகளுக்கு ஆழ்வார் உபதேசிக்கக் காரணம் ஆழ்வார்தம்முடைய திருவருளே என்று கூறியுள்ளார்.

47. ஆழ்வார் முதன்முதலில் பிரார்த்தித்தபொழுதே எம்பெருமான் அவருக்கு மோக்ஷம் அளிக்காததன் காரணங்களை விளக்கியுள்ளார்.

48. ஆழ்வாருடைய பரபக்தி, பரஜ்ஞான, பரமபக்தி நிலைகளை விளக்கும் திருவாய்மொழிகளை நாயனார் எடுத்துக் காட்டியுள்ளார்.

49. அறிவின்மையைப் போக்குவதான நிறைந்த ஞானத்தைக் கொடுத்த எம்பெருமானுடைய பேரருளே மோக்ஷத்தையும் கொடுக்கும் என்பதே திருவாய்மொழியின் திரண்ட பொருள் என்று மிகத் தெளிவாக அருளிச் செய்து ஆசார்யஹ்ருதயத்தைத் தலைக்கட்டுகிறார்.

50. அருளிச் செயல் ரஹஸ்யம் என்ற நூல் ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்யப்பிரபந்தப் பாசுரங்களின் சொற்களைக் கொண்டே அருளிச் செய்யப் பட்ட ஒரு ரகசிய நூலாகும். இந்நூலில் நாயனார் திருமந்திரம், சரமசுலோகம், துவயம் என்ற மூன்று ரஹஸ்யங்களையும் முறையே விளக்கியுள்ளார்.

51. பிரணவத்தின் பொருளுக்குக் கண்ணனையும் அர்ச்சுனனையும் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

52. திருமந்திரத்தின் பொருள்களை அருளிச்செயல் சொற்றொடர்களைக் கொண்டே விளக்குகிறார்.

53. திருமந்திரத்திலுள்ள நம: பதம் விரோதியைக் கழிக்கிறது என்றும், உபாயமாகவும் இருக்கிறது என்றும் நாயனார் இரு பொருளுரைக்கிறார்.

54. ஸர்வரக்ஷகனான திருமகள் கேள்வனுக்கே அடிமைப்பட்டவனாய், சரீரம் இந்திரியங்கள் முதலியவற்றில் வேறுபட்டவனாய், ஜ்ஞான ஆனந்தமயனாய் எம்பெருமானுக்கே பரதந்திரனான நான் அந்த எம்பெருமானுக்கே எல்லாவித கைங்கரியங்களும் செய்யப்பெறுவேனாக வேணும் என்பது திருமந்திரத்தின் திரண்ட பொருளாக நாயனார் அருளியுள்ளார்.

55. விடவேண்டிய விஷயங்களையும், அவற்றை விடவேண்டிய முறைகளையும், பற்றவேண்டியவைவகளையும், அவற்றைப் பற்ற வேண்டிய முறையையும் கூறிய கிருஷ்ணன், விடுவித்துப் பற்றுவிக்கும் நானே உன்னைத் துன்பங்களினின்றும் காப்பேன், கலங்காதே என்று அர்ஜுனனைத் தேற்றுவதே சரமசுலோகத்தின் சாரமான பொருள் என நாயனார் தெரிவித்துள்ளார்.

56. துவயத்தின் பொருள்களையும் அருளிச்செயல் சொற்றொடர்களைக் கொண்டே அழகுற விளக்கியுள்ளார்.

57. பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு நாராயணனுடைய திருவடிகளைப் பற்றுகிறேன்; ஸ்ரீமந் நாராயணனுக்கு எல்லாவித கைங்கரியங்களும் அவனுக்கு உகப்பாகச் செய்யப் பெறுவேனாக வேணும் என்று வேண்டுவதே துவயத்தின் சாரமான பொருளென்று நாயனார் அருளிச் செய்துள்ளார்.

58. நாயனாருடைய ரகசியநூல்கள் பெரும்பாலும் அவருடைய திருத்தமையனாரான பிள்ளைலோகாசார்யர் அருளியுள்ள முமுக்ஷுப்படி, ஸ்ரீவசனபூஷணம், முதலிய ரகசிய நூல்களை அடியொற்றியும், சில இடங்களில் அவற்றுக்கு விளக்கமாகவும் அமைந்துள்ளது.

59. உவமைகளைக் கையாண்டும், உரைநடைப்பாங்கிலும், சில இடங்களில் பாசுரங்களுக்கு சிறப்புப் பொருள் கொண்டும் நாயனார் தம்முடைய நூல்களை வரைந்துள்ளார்.

60. பல புதிய உத்திகளைக் கையாண்டு ரகசியநூல்களை அருளிச்செய்துள்ளதன் மூலம், அழகியமணவாளப்பெருமாள்நாயனார் தன்னிகரற்ற இடத்தைப் பெற்றுள்ளார்.

# நாயனாருடைய தத்துவக் கொள்கைகள்

ஆழ்வார்கள் அருளிச் செய்துள்ள திவ்யப் பிரபந்தங்களுக்கு உரையிட்டருளிய ஆசாரியர்கள் அனைவரும், பாசுரங்களிலுள்ள தத்துவக் கருத்துகளைத் தங்கள் உரைகளில் விவரித்துள்ளனர். அக்கருத்துகளை ரகசிய நூல் வடிவிலும் அருளிச்செய்துள்ளனர். அவர்களை அடியொட்டியே நாயனார் தம்முடைய உரைகளை அமைத்திருந்தபோதிலும் பிற ஆசார்யர்களுடைய உரைகளைக் காட்டிலும் நாயனாருடைய உரைகளில் தத்துவக் கருத்துகள் மிக மிக அதிகமாகக் காட்டப்பட்டுள்ளன. நாயனாருடைய உரைகளிலும், ரகசிய நூல்களிலும் அதிக அளவில் தத்துவக் கருத்துக்கள் விரவிக் கிடக்கின்றன. அவற்றை இவ்வியலில் காண்போம்.

## அர்த்தபஞ்சகம்

வேதங்களும், வேதாந்தங்களுமெல்லாம் ஐந்து அர்த்தங்களையே முக்கியமாகக் கூறுகின்றன. அவையாவன: இறையியல் (அடையப்படுபவனாகிய எம்பெருமானுடைய தன்மை), உயிரியல் (அடைபவனான சேதநனின் தன்மை), நெறியியல்(எம்பெருமானை அடைவதற்குறுப்பான உபாயத்தின் தன்மை), பேற்றியல் (அடைந்து பெற வேண்டிய பேற்றின் தன்மை), தடையியல்(அப்பேற்றை அடையவிடாமல் தடுக்கும் விரோதியின் தன்மை), என்பனவாம். இவையே அர்த்த பஞ்சகம் எனப்படும். இவை எம்பெருமானைப் பெறவேண்டும் என விரும்பும் முமுக்ஷுக்கள் அனைவரும் அறியவேண்டும் அர்த்தங்களாகச் சொல்லப்பட்டுள்ளன. அர்த்த பஞ்சக ஞானம் பெற்று இருந்தால் தான் எம்பெருமானை அடைய முடியும் என்பது வைணவ சமயக் கோட்பாடு நாயனார் அர்த்த பஞ்சகம் என்னும் இவ்வைம்பொருள்களைத் தம் நூல்களில் ஆங்காங்கே நன்கு விளக்கியுள்ளார்.

அர்த்த பஞ்சக ஞானம் பெற்றிருப்பதால் ஏற்படும் நன்மையையும், அந்த ஞானம் இல்லாமையால் வரும் தீமைகளையும் எடுத்துக் காட்டுகிறார். அர்த்த பஞ்சக ஞானம் பெற்றிருத்தல் வீடுபேறாகிற எல்லையில்லாத இன்பத்திற்குக் காரணமாகும் என்றும், அர்த்த பஞ்சக ஞானமின்மை சம்சாரத்தில் பிறவிக்குக் காரணமாகும் என்றும் கூறுகிறார். அர்த்த பஞ்சகமே

திருவாய்மொழியில் சொல்லப்பட்டுள்ள அர்த்தமாக பிற ஆசாரியர்கள் அருளிச்செய்துள்ளவற்றையே நாயனார் எடுத்துக் கூறுகிறார் என்றாலும், பற்பல பாசுரங்களின் துணைகொண்டு நாயனார் அவற்றை நன்கு விளக்கியுள்ளார். திருவாய்மொழியில் இவ்வைம்பொருள்களைக் கூற வந்த பதிகங்கள் எவையெவை என்பதையும் காட்டுகிறார்.

பரஸ்வரூபம் – உயர்வற[1], திண்ணன் வீடு[2], அணைவதரவணைமேல்[3], ஒன்றுந்தேவும்[4]; ஜீவஸ்வரூபம் – பயிலுஞ்சுடரொளி[5], ஏறாளும்[6], கண்கள் சிவந்து[7], கருமாணிக்கமலை[8]; விரோதி ஸ்வரூபம் – வீடுமின்[9], சொன்னால் விரோதம்[10], ஒரு நாயகம்[11], கொண்டபெண்டிர்[12]; உபாயஸ்வரூபம் – நோற்ற ஆராவமுதே[14],மானேய் நோக்கு[15], பிறந்தவாறும்[16]; பலஸ்வரூபம் – எம்மா[17], ஒழிவில்[18], நெடுமாற்கடிமை[19], வேய்மருதோளிணை[20] என்ற இருபது பதிகங்களிலே கூறுகின்ற அர்த்தங்கள் மற்றையெண்பது பதிகங்களிலே விரித்துச் சொல்லப்படுவதாகக் கூறுகிறார். திருவிருத்தத்தின் முதற் பாசுரத்திலும் அர்த்த பஞ்சகம் சுருக்கமாக அருளிச் செய்யப்பட்டுள்ளதைத் தெரிவிக்கிறார்.[21]

## ஐந்து நிலைகள்

எம்பெருமானுக்கு பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து நிலைகள் உள்ளன. நாயனார் அந்நிலைகளைக் கடலின் தன்மைகளுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார். பெரும்புறக் கடலாக பரத்வ நிலையையும், அக்கடலில் அலைத்து நிற்குமிடமாக வியூஹ நிலையையும், ஆழ்ந்து நிற்குமிடமாக அந்தர்யாமியாய் நிற்கும் நிலையையும், ஓடுமிடங்களாக அவதாரங்களையும், சமைத்த மடுவாக அர்ச்சாவதாரத்தையும் குறிப்பிடுகிறார்.[22]

## பரத்வம்

பரமபதத்தில் "ஒண்டொடியாள் திருமகளுந் தானுமாய்"[23] நித்யரும், முக்தரும் சேவிக்க எழுந்தருளி இருக்கும் நிலை பரத்வமாகும். இதை நாயனார் "பகலோலக்கம்"[24] என்றும், "பெரும்புறக்கடல்"[25] என்றும் வருணிக்கிறார்.

1. திருவாய். 1-1  2. மேலது 2-1  3. மேலது 2-8  4. மேலது 4-10
5. மேலது 3-7  6. மேலது 4-8  7. மேலது 8-8  8. மேலது 8-9
9. மேலது 1-2  10. மேலது 3-9  11. மேலது4-1  12. மேலது 9-1
13. மேலது 5-7  14. மேலது 5-8  15. மேலது 5-9  16. மேலது 5-10
17. மேலது 2-9  18. மேலது 3-3  19. மேலது 8-10  20. மேலது 10-3
21. ஆசா. ஹ்ரு. 212  22. மேலது - 74  23. திருவாய் 4-9-10  24.ஆசா ஹ்ரு 157
25. மேலது - 74

எம்பெருமான் பரமபதத்தில் எழுந்தருளியுள்ள நிலையை "ஸமஸ்த கல்யாண குணாத்மகனாய், நிரதிசயாநந்த பரிபூர்ணனாய், உபய விபூதி யுக்தனாய், ச்ரிய:பதியாய், ஏகார்ணவம் போலே நித்யவிபூதியிலிருக்குமிருப்பு" என்று வருணித்து வேதங்கள் மநஸ்ஸோடே வாக்குக்கு நிலமன்றென்று மீண்ட பரத்வம் என்று பரத்வத்தின் பெருமைகளைக் கூறுகிறார்.[1]

## வியூஹநிலை

பாற்கடல் யோகநித்திரை செய்து ஆன்மாக்களைக் காப்பாற்றும் வழியைச் சிந்திக்கும் நிலை வியூஹநிலை என்கிறார்.

> "நாராயண சப்தவாச்யனான ஸர்வேச்வரன் திருப்பாற்கடலிலே பிரம்மாதிகளுடைய கூக்குரல் கேட்கும்படி குடில் கட்டிப் பயிர் நோக்கும் க்ருஷிகனைப் போல தோள் தீண்டியாக வந்து கண் வளர்ந்தருளுகின்றான். "மெள்ளத் துயின்றானை" என்னுமாபோலே ஆர்த்த நாதம் கேட்கும்படி அசங்காதே கிடந்தபடி"[2]

என்று வ்யூஹ நிலையை வர்ணிக்கின்ற நாயனார், வியூஹ நிலையே அவதாரங்களுக்கு விதை என்றும் உருவகம் செய்கிறார்.

> "விரோதி ப்ரஸங்கமில்லாததொரு தேச விசேஷத்திலே நீருறுத்தாதபடி நாற்றம், மென்மை, குளிர்த்தி, தொடக்கமான ஸ்வபாவங்களை உடைய திருவனந்தாழ்வான் மேலே அவதார கந்தமாய் அனிருத்த ரூபியாய்க் கொண்டு கண்வளர்ந்தருளுகின்ற வனை. (வித்தினை) க்ருஷிகர் விரையை நீரிலே சேர்க்குமாபோலே. பிறந்தது நினையாதிருக்கையும், பிறந்ததெல்லாம் கிடக்க இன்னமும் பிறக்கைக்கடியா யிருக்கையும். இவ்வருகு உண்டான கார்ய வர்க்கத்துக்கெல்லாம் காரணமா யிருக்கிறவனை"

என்று திருப்பாற்கடலில் எம்பெருமான் பள்ளி கொண்டுள்ள அழகை நாயனார் வருணிக்கிறார்.[3]

## விபவம்

எம்பெருமான், நல்லோரைக் காக்கவும், தீயவர்களை அழித்து தர்மத்தை நிலைநிறுத்தவும் இப்பூவுலகில் இராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்களைச் செய்கிறான். அவைகளே விபவம் எனப்படும். எம்பெருமானுடைய நீர்மைக் குணங்கள் நிறம் பெறுவது அவதார காலங்களிலேயே என்கிறார்.

1. திருப்பாவை ஆறா. ப. 1252. மேலது ப.713. மேலது ப. 147

"ஸம்ஸாரிகளுடைய குறை தீர்க்கைக்காக நியந்தாவானவன் நியாம்ய கோடியில் வந்து பிறந்தான். தன்னுடைய இச்சையாலே அவதரித்தான்" என்கிறார்.[1] மேலும் "கர்மாநுகுணமாகப் பிறக்கையாலே, பிறக்கப் பிறக்க மழுங்குமவர்கள் ஸம்ஸாரிகள். அவனுக்குப் பிறப்பு அநுக்ரஹ கார்யமாகையாலே பிறக்கப் பிறக்க ஒளிமிகா நிற்கும்" என்கிறார்.[2]

## வாமனாவதாரம்

வாமனாவதாரத்தைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது "திருக்கையிலே நீர் விழுந்தவாறே ஆகாசாவகாசமடைய விம்ம வளர்ந்து, வரையாதே எல்லார் தலைகளிலும் திருவடிகளை வைத்து பூமியை யளந்து கொண்டு தேவ ஜாதிக்குக் குடியிருப்பைக் கொடுத்து, இந்த்ராதிகளை எழுதிக் கொண்டவனே"[3] என்றும், "இந்திரன் கண்ணீர் கண்டு சிறாம்பினபடியும், மஹாபலி நீர் வார்த்தவாறே வளர்ந்தபடியும். பனி பட்டுச் சாய்ந்த மூங்கில் ஆதித்யகிரணம் பட்டவாறே வளருமா போலே அபேக்ஷிதம் பெற்று வளர்ந்தபடி. "ஸதைக ரூப ரூபாய" என்கிற தத்வமிறே சிறுப்பது பெருப்பதாகிறது. ஸம்ஸாரிகளுடைய வ்ருத்திஹ்ராஸாதிகள் கர்மாநு குணமாகையாலும், ஸ்வார்த்தமாகையாலும், தோஷாய ஆகா நிற்கும்; ஸர்வேச்வரன் செயல் பரார்த்தமாகையாலும், க்ருபையாலேயாகையாலும் குணாயவாமித்தனையிறே" என்று கூறுகிறார்.[4]

## கிருஷ்ணாவதாரம்

கிருஷ்ணாவதாரத்தைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது, தாயும் தமப்பனும் ஒளித்து வைத்தாலும் விடவொண்ணாத வடிவழகை உடையவன் என்கிறார்.[5] "கிருஷ்ணனுடைய கண்ணழகுக்குத் தோற்றுப் பாடுகிற இடைப் பெண்களுடைய த்வநி, தயிர் கடைகிற ஓசையோடே கலசி பரமபதத்திலே சென்று த்வனித்தது. அப்போது, 'கிருஷ்ண குணங்கள் பூமியிலே நடையாடா நிற்க, மலையிலிருப்பாரைப் போலே, உயர இருப்பதே' என்று அவர்களை வசை பாடினாற் போலே இருந்தது" என்று நயம்பட உரைக்கிறார்.[6]

அவதாரங்களில், அடியவர்களுக்காகத் தன்னைத் தாழ விட்டுக் கொண்டு பிறப்பதால், எம்பெருமானுடைய நீர்மைக் குணம் நன்கு வெளிப்படுகிறது என்கிறார்.

1. திருப்பாவை ஆறா. 127 2. மேலது ப. 372 3. மேலது ப.372
4. மேலது ப. 90 5. மேலது ப. 45 6. மேலது ப. 161

"சேஷியுமாய், ஸர்வ வ்யாபகனுமாய், நித்யனுமாயிருக்கிற 'மகன் ஒருவர்க்கல்லாத மாமேனி மாயன்' சிலர் அபேக்ஷித்ததுக்காக மகனானான் என்னுமளவன்றிக்கே, 'தேவகீபுத்ரன்' என்றே தன்னை நினைக்கும்படி அவ்வருகு தனக்கொரு ஏற்றமுண்டென்று அறியாதபடி பிள்ளையானான்"[1]

"நித்ய சூரிகள் சேவிக்கவிருக்கிறவன் ஸம்ஸாரத்திலே பிறந்த இக்குணம் இழக்க வொண்ணாதென்று, ரிஷிகளைப் போலே 'ஆவிர்ப்பவித்தான்' என்று அவத்யஞ் சொல்லாதே நிறம் பெறும்படி பிறந்தான் என்பர்கள் ஆழ்வார்கள்."[2]

என்று அவதாரங்களில் வெளிப்படும் எம்பெருமானுடைய எளிமைக் குணத்தை வியந்து பேசுகிறார். "பரமபதத்தில் தான் கும்பீடு கொண்டிருக்கும்: இங்கு தான் கும்பிடுகிற இடமிறே" என்று அவதாரத்தில் காணப்படும் எளிமைக் குணத்தைக் கூறுகிறார்.[3]

கிருஷ்ணாவதாரத்தில் நடையழகை நாயனார் அழகுற உரைக்கிறார். "ரிஷபத்தினுடைய செருக்கும், மத்த கஜத்தினுடைய திமிர்ப்பால் வந்த பிசுகுதலும், புலியினுடைய சிவிட்குடைமையால் வந்த உறட்டுதலும், ஸிம்ஹத்தினுடைய மேனாணிப்பால் வந்த பராபிபவநமும்" என்று வருணிக்கிறார்.[4] வாமனாவதாரத்திற்கும், கிருஷ்ணாவதாரத்திற்கும் உள்ள ஒற்றுமையை எடுத்துக் காட்டுகிறார்.

"செய்யும் ஆனைத் தொழில்களும், ஆச்ரித பக்ஷபாதமும், வடிவழகும், வாத்சல்யமும், அவனொரு ஊருக்குக் கையாளானாப் போலே இவனொரு நாட்டுக்காக எளியனானபடி"[5]

அமைந்திருப்பதாகக் கூறுகிறார்.

கிருஷ்ணனை அநுபவிப்பது சுகமாயிருப்பதாலே "சுவர்க்கம்" என்ற சொல்லால் குறிப்பிடுகிறார்.

"ஸாக்ஷாத் ஸுகசப்தவாச்யனாகையாலே க்ருஷ்ணனை 'சுவர்க்கம்' என்கிறது. ஆனந்த ரூபனாய், ஆனந்த குணகனாய், ஆநந்தாவஹனா யிருக்கிற கிருஷ்ணனுடைய அநுபவமிறே ஸாக்ஷாத் சுகமாகிறது"[6]

1. திருப்பாவை ஆறா. ப. 433 2. மேலது ப. 433 3. மேலது ப. 43
4. மேலது ப. 402 5. மேலது ப. 91 6. மேலது ப. 201

## நரஸிம்மாவதாரம்

நரசிம்மாவதாரத்தை நாயனார் நன்கு வருணிக்கிறார்.

"நரஸிம்மத்தினுடைய மொறாந்த முகமும் நாமடிக் கொண்ட உதடும், இறுத்து நோக்கின நோக்கும் குத்த முறுக்கின கையும் கண்டபோதே பொசுக்கின பன்றி போலே உலர்ந்த தாழைநாரைக் கிழித்தாற் போல் கிழித்தபடி"[1]

என்று இரணியனை வதம் செய்தவாற்றை வருணிக்கிறார்.

## அந்தர்யாமி

எம்பெருமான் "கறந்த பாலுள் நெய்யே போன்று"[2] கண்ணுக்குப் புலப்படாமல் எல்லாப் பொருட்களிலும் கரந்து உறையும் நிலையே அந்தர்யாமித்வம் எனப்படும். கடலுள் ஆழ்ந்து நிற்கும் இடம் என்று அந்தர்யாமித்வத்தைக் குறிப்பிடுகிறார்.[3]

## அர்ச்சாவதாரம்

பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி நிலைகளில் எம்பெருமானை அநுபவிக்க இயலாதவர்களுக்கு நீர்மையின் எல்லை நிலமாய், அடியவர்களின் கண்ணுக்கு இலக்காகி அவர்கள் இட்ட வழக்காய், "தமருகந்ததெவ்வுருவம் அவ்வுருவம் தானே"[4] என்கிறபடி, அடியவர்கள் உகந்த ஒரு திரவியத்தைத் திருமேனியாகக் கொண்டு அருள்புரியும் எம்பெருமானுடைய அழகிய வடிவமே அர்ச்சாவதாரமாகும். நாயனார் அர்ச்சாவதாரத்தை 'வீட்டின்பம்"[5] என்றும், "சமைத்த மடு"[6] என்றும் குறிப்பிடுகிறார். "தமருகந்த அடியோமுக்கே யென்னும் பின்னானார் வணங்குமிடத்திலே எல்லாம் பூர்ணம்"[7] என்று, அர்ச்சாவதாரத்தில் எம்பெருமானுடைய எல்லாக் கல்யாண குணங்களும் பூர்ணமாக விளங்கும் என்கிறார். அடியார்களுகந்த திருமேனியையும், அடியார்களுகந்த திருநாமங்களையும் கொண்டு, எம்பெருமானை அனுபவிக்க வேண்டும் என்ற ஆசை பிறந்தபோதே சென்று ஆச்ரயிக்கலாம்படியாய், "பின்னானார் வணங்கும் சோதி"[8] யான அர்ச்சாவதாரத்திலே எல்லா குணங்களும் பூர்ணமாக பிரகாசிக்கும் என்கிறார்.

அர்ச்சாவதாரத்தில் எல்லாக் குணங்களும் பூர்ணமாக இருந்தாலும், நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் மங்களாசாஸனம் செய்துள்ள

1. அமலனாதி. வியாக். ப. 9
2. திருவாய்மொழி 8-5-10
3. ஆசார்ய ஹ்ரு. 74
4. முதல் திருவ. 44
5. ஆசார்ய ஹ்ரு. 75
6. மேலது 74
7. மேலது 158
8. திருநெடுந். 10

திருப்பதிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குணம் பிரதானமாகப் பிரகாசிக்கும் என்று ஆசார்ய ஹ்ருதயத்தில் இருபத்தெட்டு சூர்ணிகைகளில் அழகுற விளக்கியுள்ளார்.[1]

## எம்பெருமானுடைய தன்மைகள்

எம்பெருமான் பிராட்டியை அடையாளமாக உடையவன்.[2] உலகிலுள்ள எல்லாப் பொருட்களுக்கும் தான் இருப்பிடமாயும் அவைகளைத் தனக்கு இருப்பிடமாகவும் உடையவன்.[3] "தன்னுள் அனைத்துலகும் நிற்க நெறிமையால் தானுமவற்றுள் நிற்கும் பிரான்" என்கிறபடி மேன்மையையும் நீர்மையையும் உடையவன். எல்லாவற்றுக்கும் காரணமாய், அந்தராத்மாவாய், அவற்றின் தோஷம் தட்டாமே நின்று, நியமித்து தானொளியையுடையவனாய், ஸ்வாமியாய், எல்லா உறவுமாய், உபாயமுமாய், உபேயமுமாயிருப்பவன்.[4] அபௌருஷேயமாய், நித்யமாய், குற்றமில்லாததாய் உள்ள வேதங்களால் கூறப்படுபவன்.[5] அந்த வேதங்களாலும் எல்லை காணமுடியாதவன்.[6] வேறு ஒருவர்க்கும் ஆட்படாமல் எம்பெருமானுக்கே பரதந்திரராய், பக்தி (அன்பு) செலுத்துபவர்களுக்குக் கட்டுப்படுபவன்.[7] குற்றங்களுக்கு எதிர்த்தட்டாயிருப்பவன்.[8] ஸம்ஸாரிகள் துக்கப்படும் பொழுது எம்பெருமானுடைய திருவுள்ளம் நொந்திருக்கும். சேதநனுடைய இடரைக் காண்கையாலும், தன்னுடைய காவற் சோர்வாலே வந்ததென்றிருக்கையாலும் எம்பெருமானுடைய துக்கம் இரட்டித்து இருக்கும். சேதநன் தன் துக்கம் தீர்ந்தவுடன் மகிழ்ந்திருப்பன். ஆனால் எம்பெருமான் சேதநனுடைய துக்கத்தைத் தீர்த்தபின்பும், தனது காவற்சோர்வால் சேதநன் துக்கப்பட வேண்டி வந்ததை நினைத்து கடன்பட்டதைப் போல இழவுபட்டிருப்பான்.[9] எம்பெருமான் தான் ஸங்கல்பித்தது குலைந்தாலும், அடியவர்கள் ஸங்கல்பத்தை தன்னை அழிய மாறியும் தலைக்கட்டிக் கொடுப்பான்.[10] அடியவர்களுடைய எதிரிகளைத் தன் விரோதிகளாகப் பாவிப்பவன். அவர்களுடைய கஷ்டத்தைத் தன் கஷ்டமாகவும், அவர்களுடைய துக்கத்தைத் தன் துக்கமாகவும் நினைப்பவன்.[11] அடியவர்களுக்கு எல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்திடப் பெற்றிலோம் என்றிருப்பவன். அங்ஙனம் செய்தலைத் தன் பேறாக நினைப்பவன். அடியவர்களை வெறுப்பவர்களைப் பொறாதவன்.[12]

---

1. ஆசார்ய ஹ்ரு. 159-186
2. அருளிச்செயல் ரஹ. ப. 24
3. மேலது ப. 37
4. மேலது ப. 38
5. திருப்பாவை ஆறா. ப. 371
6. மேலது ப. 372
7. கண்ணி. வியாக். ப. 49
8. அமல. வியாக் ப. 19
9. திருப். ஆறா. ப. 111
10. மேலது ப. 125
11. திருப்பாவை ஆறா. ப. 229
12. மேலது ப. 373

எம்பெருமானுடைய இரக்கமே காரியம் செய்ய வல்லது.[1] அடியவர்களைக் கைக்கொள்ளுமிடத்தில் அவர்கள் வாயினால் மட்டும் சொன்னதே போதுமென்று இருப்பவன். அவர்களைக் கைவிடும் பொழுது அவர்கள் நெஞ்சிலுள்ள கருத்தை அறிந்தாலல்லது கைவிடான்.[2] எம்பெருமானை அடைவதற்கு சேதனனுடைய விருப்பமே போதுமானது. அந்த விருப்பமும் சாதனமாக மாட்டாது. அல்பமான பலன்களான சுவர்க்கானுபவம் முதலானவற்றைப் பெறுவதற்கு கூச்மாண்டஹோமம் முதலிய ஹோமங்கள் செய்ய வேண்டியுள்ளது. மோக்ஷத்தைப் பெறுவதற்கு விருப்பமே போதுமோ? என்று ஒருவினாவை எழுப்பி நாயனார் அதற்கு விடையும் தருகிறார்.

> "ந ச புநராவர்த்ததே" என்ற அபுநராவ்ருத்தி லக்ஷண மோக்ஷத்துக்கு இச்சா மாத்திரமே அமைவானென்? என்னில், பெறுகிற பேற்றுக்கு ஸத்ருச ஸாதந மில்லாமையாலே இங்கு அபிமதஸித்திக்கு இச்சையே வேண்டுவதென்கை. அது அப்ராப்த விஷயமாகையாலே அதிகாரி ஸம்பத்தி உண்டாக்கிக் கொண்டு இழிய வேணும். இது வகுத்தது ஆகையாலே இச்சைக்கு மேற்பட வேண்டுவதில்லை"

என்கிறார்.[3] எம்பெருமான் பூர்ணனாகையாலே அவன் நம்மிடம் கொள்ளுவது ஒன்றுமில்லை. ஆனால் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யாதபொழுது சேதநனுடைய சேஷத்வம் பயன்பெறாதாகையாலே அது பயன் பெறுவதற்காகவே எம்பெருமான் இவனிடம் கைங்கரியத்தைக் கொள்ளுகிறான்.

> "சேஷிக்குக் கிஞ்சித்கரியாதபோது சேஷத்வமில்லை. அவன் நிரபேக்ஷன் ஆகையாலே கிஞ்சித்காரத்துக்கிடமில்லை. இவன் ஸ்வரூபலாபத்துக்காகவே அவன் ஸாபேக்ஷரைப் போல இவர்கள் கிஞ்சித்காரங் கொள்ளக் கடவன்."[4]

என்பது நாயனார் கூற்று. எம்பெருமான் எண்ணிறந்த கல்யாண குணங்கள் பொருந்தியவன் என்று கூறுகின்ற நாயனார், ஒவ்வொரு கல்யாண குணத்தையும் விளக்கமாக அருளிச்செய்கிறார். அருளிச்செயல் ரஹஸ்யத்தில் நாராயண பதத்துக்குப் பொருளாக வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், சௌசீல்யம், சௌலப்யம் முதலிய குணங்களை விவரிக்கிறார்.

---

1. திருப்பாவை ஆறா. ப. 431  2. மேலது ப.436  3. மேலது ப.42  4. மேலது.ப.73

## வாத்சல்யம்

"அன்றீன்ற கன்றினுடம்பில் அழுக்கை போக்யமாகக் கொண்டு பாலைச் சுரந்து கொடுத்து வளர்த்து வேறொன்றை நினையாதே தன்னையே நினைத்துக் குமுறும்படி பண்ணி, முன்னணைக் கன்றையும், புல்லிட வந்தவர்களையும், விட்டுக் கட்டுவாரையும், நலியத் தேடுகிறவர்களையும் உதைத்து நோக்குகிற தேநுகுணமிறே. அப்படியே இவனும் இன்று ஜ்ஞானம் பிறந்தவனுடைய அழுக்குடம்பை 'உருவமுமாருயிருமுடனே' என்னும்படி போக்யமாகக் கொண்டு, "பாலே போல் சீரில்' 'இன்னருள் சுரந்து', கொடுத்து வளர்க்கத் 'தாய்நாடு கன்றே போல்', 'தன்னையே நினைக்கச் செய்து', 'மறவாதழைக்கப் பண்ணி' ஸூரிகளையும், 'அனந்தன் பாலும் கருடன் பாலும்', 'தவம் செய்தார் வெள்கி நிற்ப', என்கிறபடியே திருமகளையும் உபேக்ஷித்து இவனை நோக்கக் கடவனாயிருக்கும்"[1]

கடலுக்குள்ளே மாணிக்கங்களடைய மறைந்து கிடக்குமாபோலே இவ் வாத்ஸல்ய குணத்தில் மற்ற குணங்கள் மறைந்து கிடக்கும் என்றும் இக் குணத்திற்கு இணை இல்லை என்றும் கூறுகிறார்.[2]

## ஸ்வாமித்வம்

"இவன் 'யாதானும் பற்றி' ஓடும் போதும் விடாதே தொடர்ந்து உருவழியாமே 'ஒரு மாவயிற்றினுள்ளே வைத்து' நோக்கி அத்வேஷம் தொடங்கி அடிமை எல்லையாகத் தானே உண்டாக்கி, இழவு பேறு தன்னதாம்படி உடையவனா யிருக்கும் உறவை ஸ்வாமித்வமென்கிறது என்கிறது" என்கிறார்.[3]

## ஸௌசீல்யம்

எம்பெருமானுடைய மேன்மையையும், தங்களுடைய சிறுமையையும் கண்டு அகலும் அடியவர்களோடு எம்பெருமான் புரையறக் கலக்கும் குணமே ஸௌசீல்யமெனப்படும். "வானவர் சிந்தையுள் வைத்துச் சொல்லும் வானோரிறையைக் கள்ளத்தேன் நானும் எச்சில் வாயால் வாய்க் கொள்ள மாட்டேனென்று அகல்வாரளவில் பெருமை சிறுமைகள் பாராதே இவர்கள் நினைவைத் தன் பேறாக மேல் விழுந்து ஒரு நீராகக் கலக்கை ஸௌசீல்யம்" என்கிறார்.[4]

---

1. அருளிச்செயல் ரஹஸ்யம் ப. 143
2. கண்ணி. வியாக். ப. 227
3. அருளிச்செயல் ரஹ. ப. 147
4. மேலது ப. 148

## ஸௌலப்யம்

அடியவர்கள் கண்ணாலே கண்டு அநுபவிக்கலாம்படி இருக்கின்ற அர்ச்சாவதாரத்திலே ஸௌலப்ய குணம் விஞ்சியிருக்கும் என்கிறார். "கட்கரிய திருமேனியை 'நிலைக்கணங்களும்' காணும்படி கண்ணுக்கு இலக்காக்குகை ஸௌலப்யம்" என்கிறார்.[1]

## க்ருபை

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களிலே கிருபா குணம் மிகவும் சிறந்தது; க்ருபா குணமில்லாத போது மற்ற குணங்கள் பிரகாசிக்காது; எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதாகிய புருஷார்த்தத்தைப் பெறுவதற்கும் அவ்வெம்பெருமானுடைய க்ருபையே சாதனம் என்கிறார்.

> "ஈச்வரனையும் கொண்டாடுகிறது, தானுண்டான போது உண்டாய், இல்லாத போது இல்லையாமென்றிட்டிறே; அப்படியே க்ருபா குணமில்லாதபோது குணாந்தரங்களும் அகார்யகரமாய், இது கூடினவாறே கார்யகரமா யிருக்கை. தேவதாந்தரங்களிற் காட்டில் ஈச்வரன் கொண்டாட்டத்துக்கு விஷயமானாப்போலேயாய்த்து குணாந்தரங்களிற் காட்டில் இது கொண்டாட்டத்துக்கு விஷயமானபடி"[2]

என்று நாயனார் க்ருபா குணத்தைக் கொண்டாடுகிறார். பலத்தைக் கொடுக்கும் பொழுது ஈச்வரன்தனக்கும் கிருபையே சாதனமென்கிறார்.

## பாவபுண்ணியங்கள்

புண்யபாவங்கள் எம்பெருமானுடைய அருளினாலும், சீற்றத்தினாலும் ஏற்படுபவை. எம்பெருமானே பொறுத்தேன் என்று தீர்க்க அவை தீரும் என்கிறார்.

> "புண்ய பாபங்களாகின்றன — அவனுடைய அநுக்ரஹ நிக்ரஹங்கங்களிறே. அவன் "பொறுத்தேன்" என்னத் தீருமத்தனையிறே இது."[3]

எம்பெருமானுடைய அருள் உண்டானால் நாம் செய்த பாபங்கள் தீயினில் தூசு போலே மறையுமென்கிறார்.

---

4. அருளிச்செயல் ரஹ. ப. 149
2. கண்ணி. வியாக். ப.181
3.. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 129

## திருநாமத்தின் பெருமை

எம்பெருமானைக் காட்டிலும் எம்பெருமானுடைய திருநாமத்திற்கு உயர்வு கூறுகிறார். அணிந்து அழகு பார்க்க முடியாத கட்டிப்பொன் போன்றவன் எம்பெருமான் என்றும், அணிந்து அழகு பார்க்கக்கூடிய பணிப்பொன் (ஆபரணமாக்கிய பொன்) போன்றது எம்பெருமானுடைய திருநாமம் என்றும் கூறுகிறார். திருநாமம் சொல்வதற்குத் தகுதி ஏற்படுத்திக் கொள்ள வேண்டா என்றும் அனைவருமே தகுதியுடையவர்கள் என்றும் நாயனார் கூறுகிறார்.

> "பகவத் விஷயத்தில் விரோதித்தார்க்கும் திருநாமம் சொல்லப் பிராப்தி உண்டு. திருநாமந்தான் எல்லா அதிகாரிகளுக்கும் வேணும். கர்மயோக நிஷ்டனுக்கும், பாப க்ஷயத்துக்குத் திருநாமம் வேணும்; ஜ்ஞான யோக நிஷ்டனுக்கும் ஜ்ஞான வைசத்யத்தைப் பண்ணிக் கொடுக்கும்: பக்தியோக நிஷ்டனுக்கும் பக்தி வ்ருத்திக்கு வேணும்; 'விரோதியைப் போக்கி திருநாமம் சொல்ல வேணும்' என்னும் விளம்பம் பொறாதவனிறே இதுக்கு அதிகாரி"

என்று திருநாமத்தின் பெருமைகளைக் கூறுகிறார்.

## பிராட்டி

'திருமங்கை தன்னோடும் திகழ்கின்ற திருமாலார்' என்கிறபடியே எம்பெருமானுக்கு அடையாளமாக இருப்பவள் பிராட்டியாவாள். மாணிக்கத்தையும் பூவையும் விடாத ஒளியும் மணமும் போலே எம்பெருமானை விட்டுப் பிரியாதவளாய் இருக்கின்றாள்.[1] 'ஸ்ரீ' என்பது புருஷகாரமான விஷ்ணுபத்நியுடைய முதல் திருநாமம் ஆகும். இவள் மூன்று வகையான ஆத்ம கோடிகளாலும் சேவிக்கப்படுவாள்.[2] பிராட்டி எம்பெருமானை நிழல் போல் சேவிப்பவள். எம்பெருமானைப் பற்றுகைக்குப் பிராட்டி புருஷகாரமாக வேணும். பிராட்டியைப் பற்றுவார்க்கு அவளுடைய நிர்ஹேதுக க்ருபையே அமையும்.[3] "'நீங்கள் பண்ணின பாபத்துக்கு அஞ்ச வேண்டா' என்கிறது பெருமாளுடைய 'அஞ்சேல்' என்ற திருக்கை; எம்பெருமானுடைய சுவாதந்திரியத் திற்கும் அஞ்சவேண்டா என்கிறது பெரிய பிராட்டியார் வைத்தஞ்சலென்ற கை. அவனுமாசைப்படும் கை." என்கிறார்.[4]

1. அருளிச்செயல் ரஹஸ்யம் ப. 21
2. மேலது ப.115
3. திருப்பாவை ஆறா. ப.317
4. மேலது ப. 323

பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு எம்பெருமானைப் பற்றுவதே உயர்ந்தது என்று நாயனார் கூறுகிறர்.

"தன்னுடைய கர்மஜ்ஞாநாத்யுபாயங்களாலே எம்பெருமானைப் பெறவிருக்குமது இளிம்பு; அவற்றை விட்டு எம்பெருமானுடைய க்ருபையாலே பெறுகை சதிர்; அந்த க்ருபைக் கடியான பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு பெறுகை மாசதிர்" என்கிறார்.[1] பிராட்டிமார்களைப் பற்றும் விதத்தையும் கூறுகிறார். "பரதசையில் நாச்சிமார் மூவரையும் முன்னிடக் கடவது: வியூஹாவஸ்தையில் நாய்ச்சிமாரிருவரை முன்னிடக்கடவது; ராமாவதாரத்தில் பிராட்டியாரொருவரையு மாயிருக்கும். ஸ்ரீவராஹப்ராதுர்ப்பாவத்தில் ஸ்ரீபூமிப் பிராட்டியை முன்னிடும்; கிருஷ்ணாவதாரத்துக்கு ப்ரதாந மஹிஷி இவளாகையிலே நப்பின்னைப் பிராட்டியை முன்னிடுகிறார்கள்" என்கிறார்.[2] சேதநர்க்குத் தாயாய், சேதநர்கள் செய்யும் அபராதங்களைப் பொறுத்து எம்பெருமானிடம் சேர்ப்பிப்பவள் பிராட்டி என்கிறார்.[3] பிராட்டி புருஷகாரமாய் இருப்பதன் நன்மையை உதாரணங்கள் மூலம் விளக்குகிறார்.

> "அபராதம் கனத்திருக்க, இவள் ஸந்நிதியாலே காக சூர்ப்பணகைகளுக்குத் தலை பெறலாயிற்று. அபராதம் மட்டமாயிருக்க இவள் அருகிலில்லாமையாலே ராவண தாடகைகள் முடிந்தார்கள். இருவருமான சேர்த்தியை விரும்பிய செல்வ விபீடணன் நீடரசு பெற்று அல்லல் தீர்ந்தேன் என்னும்படி வாழ்ந்தது."[4]

## ஜீவாத்ம ஸ்வரூபம்

ஆத்மா நித்யமானது.[5] ஞானத்துக்கு இருப்பிடமாயும், ஆனந்த ரூபமாகவும் இருக்கும்.[6] ஆத்மாவுக்கு ஜ்ஞாந ஆநந்தங்கள் அடையாளங்கள் அல்ல.[7] ஆத்மாவுக்கு சேஷத்வமே (எம்பெருமானுக்கு அடிமைப்படுதல்) முதன்மையான அடையாளமாகும். மணத்தையும் ஒளியையும் கொண்டு விரும்பப்படும் பூவையும் மாணிக்கத்தையும் போலே, எம்பெருமானுக்கானபோது விரும்பப்பட்டு, பிறர்க்கான போது கைவிடப்படும் ஆத்மா என்று தோற்றுவதற்காக ஜ்ஞாநாநந்தாதிகளுக்கு முன்னே சேஷத்வம் சொல்லப்பட்டது.[9] எம்பெருமானுக்கு அடியேன் என்று இசையாதவனை, ஆத்மாவை இல்லை செய்த கள்ளனாகவிறே சொல்லுவது. மற்றொருவர்க்கும்

1. திருப்பாவை ஆறா. ப. 318
2. மேலது ப. 318
3. அருளிச்செயல்ரஹ.ப.113
4. அருளிச்செயல் ரஹ. 175
5. அமல. வியாக். ப. 63
6. அருளிச்செயல் ரஹ.ப.26
7. திருப்பாவை ஆறா. ப. 187
8. அருளிச்செயல். ப.27
9. மேலது ப. 23

அடிமைப் படாமல் எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப்பட்டு, சரீரத்திலிருந்தும், இந்திரியங்களிலிருந்தும் வேறுபட்டு, எம்பெருமானுக்கு எல்லாவிதமான கைங்கர்யங்களும் செய்வதே ஆத்மாவின் தன்மையாகும்.[1] ஒருவனுக்கு அடிமையான வீடு முதலிய சொத்துக்கள் மற்றவர்க்கும் அடிமைப்பட்டிருக்கும். ஆனால் ஆத்மாவினுடைய சேஷத்வம் நாய்ச்சிமாருடைய சேஷத்வம் போலே எம்பெருமானொருவனுக்கே அடிமைப்பட்டிருக்கும். மற்றவர்களுக்குத் தொண்டு செய்கை ஆத்ம நாசம். எம்பெருமானுக்கு வாய் புகு சோறான ஆத்மாவைப் பிறர்க்காக்குகையாவது மறையவர் வேள்வியில் இந்திரன் முதலிய தேவர்க்களுக்கென்று இட்ட புரோடாசத்தை மிகவும் தாழ்ந்த பிறவியான நாய்க்கு இடுவதைப் போன்றது.[2] ஆத்மாவுக்கு எம்பெருமானும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமை செய்கை பேறாகும்.[3] எம்பெருமானே உபாயமும் உபேயமுமென்றிருக்கை ஆத்மாவினுடைய தன்மையாகும். அந்யசேஷத்வமும் (பிறர்க்கடிமைப்படுதல்) ஸ்வஸ்வாதந்திரியமும் (தனக்கே உரியவன் என்று நினைத்தல்) குலைகை பேறாகும்.[4] கைங்கரியமாகிய செல்வமே ஆத்மாவுக்கு நிலை நின்ற செல்வமாகும்.[5] எம்பெருமானை உள்ளத்து எண்ணாதே இருப்பாரோடு உறவு அறுகையும், அவனை எண்ணும் நெஞ்சுடையார்க்கு அடிமைப்படுகையுமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகும்.[6]

> "தேஹத்துக்கு வஸ்துதை உண்டேயாகிலும் அதுபோல அநித்யமாய், அநவரத விகாராஸ்பதமாய், அத்யந்த ஹேயமாய், அஜ்ஞானமாய், அஸுகமாய், அபோக்யமாயிருக்கையன்றிக்கே, நித்யமாய், நிர்விகாரமாய், அத்யந்த விலக்ஷணமாய், ஸ்வயம் ப்ரகாசமாய், ஸுகமாய், ஸ்வபாவதோ போக்யமாயிருக்கை"[7]

என்று ஆத்மாவுக்கும் உடலுக்குமிடையே உள்ள வேறுபாட்டைக் கூறுகிறார்.

ஜீவாத்மாக்கள் மூன்று வகைப்படுவர். நித்யர், முக்தர், பத்தர் எனப்படுவர்.

> "பெரும்புறக் கடலான நாராயணனுடைய ஸங்கல்பத்தாலே ஸத்தையைப் பெறுகிற ஆத்மாக்களிலே சிலர் 'துலங்கொளி சேர் தோற்றத்து நல்லமரரர்' என்னும்படி நித்யராய், சிலர் வன்சேற்றள்ளலிலே அழுந்தியழுக்கேறி ஆப்புண்டு பத்தராய், அவர்களிலே சிலர் மலமறக் கழுவி மாசறுக்கப்பட்டு ஒளிக்

1. அருளிச்செயல். ப. 40 2. மேலது ப. 24 3. மேலது ப. 21
4. மேலது ப. 16 5. திருப்பாவை ஆறா. 228 6. அருளிச் செயல். ப. 31
7. கண்ணி. வியாக். ப. 139

> கொண்ட சோதியோடே வானத்தணியமரராக்குவிக்க, வானவர்க்கு நற்கோவையாம்படி முக்தராகக் கடவர்கள்"[1]

என்று மூவகைப்பட்ட ஆத்மாக்களைப் பற்றியும் நாயனார் கூறுகிறார். ஜீவாத்மாக்களுக்குப் பெருமை சிறுமை ஞானத்தினுடைய ஏற்றச் சுருக்கத்தாலே உண்டாகின்றது என்கிறார்.[2] இவர்களில் நித்யரும், முக்தரும், எம்பெருமானையும், தங்களையும் உள்ளபடி உணர்ந்து, எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யும் பேற்றைப் பெற்றவர்கள் என்றும், பத்தர் எம்பெருமானை உணராமல், சம்சாரத்திலே உழல்பவர்கள் என்றும் கூறுகிறார்.[3] நித்யர்களை அயர்வறுமமரர்கள் என்றும் முக்தர்களை கரைகண்டோர் என்றும் நாயனார் குறிப்பிடுகின்றார்.

## ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம்

தான் செய்யாத குற்றத்தையும் மற்றவர்கள் தன்மீது சுமத்தினால் அதை இல்லை என்று மறுக்காமல் ஏற்றுக் கொள்ளுவதே உண்மையான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் என்று நாயனார் கூறுகிறார்.

> "இல்லாத குற்றத்தைச் சிலர் "உண்டு" என்றால் இல்லையென்னாதே இசைகையிறே வைஷ்ணவ லக்ஷணம். பிறர் குற்றத்தையும் தன் குற்றமாக இசைந்தாரிறே ஸ்ரீபரதாழ்வான்"[4]

என்று பரதனுடைய சரித்திரத்தை உதாரணமாகக் காட்டுகிறார். (இராமபிரான் வனத்திற்குச் சென்றதற்குக் காரணம் தானே என்று பரதன் கூறிக்கொள்வது இங்கு குறிப்பிடப்படுகின்றது.) ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை வெளியிடுவதற்காகவே திருப்பாவை என்னும் திவ்யப்ரபந்தம் தோன்றியது என்று கருதும் நாயனார், மேற்கூறிய ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை வெளியிடும் "எல்லே இளங்கிளியே"[4] என்ற திருப்பாவைப் பாசுரத்தின் உரையில் "திருப்பவையாகிறது இப்பாட்டிறே" என்றருளிச் செய்துள்ளார்.

## பாகவதர்கள்

எம்பெருமானைப் பற்றும் பொழுது பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டு பற்ற வேண்டும் என்பதே முறை என்கிறார் நாயனார்.

> "உகந்தருளிய நிலங்களில் உள்ளுப்புகும்போது க்ஷேத்ராதிபதிகளையும், த்வாராத்யக்ஷர்களையும் அனுமதி

---

1. அருளிச்செயல் ரஹ. ப. 5 2. மேலது ப. 5 3. மேலது ப. 6
4. திருப்பாவை ஆறாயிரப்படி ப. 266 5. திருப்பாவை - 15

கொண்டு புகவேண்டுமென்று ஸ்ரீ பகவச் சாஸ்திரங்களில் சொல்லுகிறது"[1]

என்றருளியுள்ளார். திருப்பாவையில் "நாயகனாய்" பாசுர உரையில்

"அவனைப் பெறுமிடத்தில் ததீயர் முன்னாகப் பெறவேணுமென்று சொன்ன அர்த்தத்தை இப்பாட்டாலே சொல்லுகிறது"[2]

என்றருளியுள்ளார். குற்றமே வடிவெடுத்தவனான சேதநன் எம்பெருமானைப் பற்றும் பொழுது இவனுடைய குற்றங்களைக் கண்டு எம்பெருமான் சீற்றம் கொள்ளவும் கூடும். ஆகையால் எம்பெருமானடியார்களைப் புருஷகாரமாகக் கொண்டு பற்றும்போது இவனுடைய குற்றங்களை எம்பெருமான் பொறுத்தருள்வான். மேலும் சேதர்க்குப் பிறக்கும் உறுதிப்பாடு பொய்யானதாகயைாலே உண்மையான பக்தி பூண்ட பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டு பற்ற வேண்டும்;[3] எம்பெருமானடியார்கள் சிறியவர்களாக இருந்தாலும் கௌரவ்யராகக் கருதப்படுகிறார்கள். இதற்கு ஆசார்யர்களுடைய வரலாற்றிலிருந்து உதாரணங்கள் எடுத்துக் காட்டுகிறார். பட்டருடைய தாயார் தன் மகனுடைய ஸ்ரீபாதத்தைக் கழுவித் தீர்த்தம் கொண்டதையும், எம்பெருமானாரும் ஸ்ரீவைஷ்ணவர்களும் எழுந்தருளும் பொழுது எம்பெருமானாருடைய ஆசார்யரான பெரிய நம்பி தண்டனிட்டதையும் நாயனார் காட்டுகிறார்.[4]

பாகவதர்களை அடிபணிந்தாலல்லது எம்பெருமானை அடைய முடியாது என்பதனால், பாகவதர்களை வணங்குவதை எம்பெருமானை அடைவற்கு உரிய அங்கமாகக் கொள்ள வேண்டும். இதை வலியுறுத்தவே எம்பெருமானைப் பற்றிய பிரபந்தமாகிய திருவாய்மொழியில், பாகவதர்களின் பெருமையைப் பகரும் விதத்தில் "பயிலுஞ்சுடரொளி", "நெடுமாற்கடிமை" முதலிய திருவாய்மொழிகளை நம்மாழ்வார் அருளியுள்ளதாக நாயனார் கூறுகிறார்.[5]

## *உபாய ஸ்வரூபம்*

பேற்றினைத் தருவதே உபாயம் என்கிறார் நாயனார். "யாதொன்று உபேயத்தைத் தரவற்று அதிறே உபாயம்" என்கிறார்.[6]

கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், ப்ரபத்தி, ஆசார்யாபிமானம் (ஆசாரியனைப் பற்றுதல்) ஆகியவை எம்பெருமானாகிற பேற்றை அடைவதற்குரிய உபாயங்களாகக் (வழிகள்) கூறப்படுகின்றன.

---

1. திருப்பாவை ஆறா. ப. 281 2. மேலது ப. 281 3. மேலது ப. 282
4. மேலது ப.4 5. ஆசார்யஹ்ருதயம் ப. 217 6. திருப்.ஆறா. ப.227

கர்ம, ஞான, பக்தி யோகங்களைப் பற்றி நாயனார் கூறியுள்ள கருத்துக்களாவன: ஆயிரக் கணக்கான பிறவிகளிலே எம்பெருமான் விஷயமாகச் செய்து போன நல்வினைகளாலே பரமயோகிகள் என்று பெயர் பெற்றவர்களுடைய குலங்களிலே பிறந்து, எம்பெருமானை நினைந்து, அவனைப் பற்றிய சொற்களை எழுதுவது, வாசிப்பது, பிறர் சொல்லக் கேட்பது முதலானவைகளால் உண்மை ஞானத்தை அடைந்து, நித்ய கருமங்களைக் குறைவில்லாமல் செய்து, தவம் செய்வதற்குத் தகுதி அடைந்து, தவ ஒழுக்கத்தாலே சரீரத்தை வாடச் செய்து, பாவங்களைப் போக்கி, அதன் பயனாய் விவேகம் முதலியனவும், சமம் தமம் முதலியவைகளும் வளரப் பெற்று காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாச்சரியம், அஞ்ஞாநம், அசூயை ஆகிய எட்டினையும் போக்கி, அஹிம்சை முதலான எட்டு புஷ்பங்களையும் இட்டு, அஷ்டாங்க நமஸ்காரத்தைச் செய்து, மலர் சந்தனம் முதலான பொருட்களைக் கொண்டு எம்பெருமானுக்கு ஆராதனை செய்து, தூய்மையுற்ற உள்ளத்தினை உடையராய், இந்திரியங்களை அடக்கி தியானத்திற்கு விஷயமான எம்பெருமானிடத்தில் அன்பினை வைத்து, விடாமல் நினைந்து,ஆன்ம சொரூபத்தை அறிந்து, யோகமாகிற உபாயத்தாலே கிட்டி, தர்மத்தின் வழி நிற்கும் அந்தணர்களுடைய மனங்களைத் தமக்கு வசிக்குமிடமாகக் கொண்டிருக்கும், ஒளி பொருந்திய விக்ரஹத்துடனிருக்கும் எம்பெருமானை "கண்கள் சிவந்து" என்ற திருப்பாசுரத்தில் சொல்லி யுள்ளபடியே இதயத் தாமரையில் தியானம் செய்து, அந்தத் தியானத்திற்கு ஒரு இடையூறும் இல்லாமல் தொடர்ச்சியாக நடக்கும்படி செய்து, அந்த நினைவு தான் நேராகக் கண்கூடாகக் காண்பது போன்றதாய், மிகவும் பிரியமானதாய், எம்பெருமானைப் பற்றிய நினைவாலே பரமபதத்தில் அனுபவத்தையும் வெறுக்கும்படி தானே பயனாம்படி வேறொரு பயனையும் கருதாத நிலையினதாய் உள்ள பக்தியானது, எம்பெருமானை அடைவதற்குக் காரணமாய் இருப்பதனால் சாதந பக்தி என்று வேதாந்த சாத்திரத்தில் கூறப்பட்டுள்ளது என்று நாயனார் கூறுகிறார்.[1] சாதனபக்தியைப் போல் அன்றிக்கே, பயனான கைங்கரியத்துக்கு உபகரணமாக பிரபந்நர் எம்பெருமா னிடத்தில் வேண்டிப் பெறும் பக்தி ஸாத்யபக்தி (=பயனான பக்தி) எனப்படும்.[2]

## *பிரபத்தி*

எம்பெருமானை அடைய, அவனையே உபாயமாகப் பற்றுவதே பிரபத்தி என்கிற சரணாகதியாகும்.

---

1. ஆசார்ய ஹ்ருதயம் 99 2. மேலது 100

"அத்தலையில் நிறைவாலும் அவனே உபாயம். இத்தலையில் குறைவாலும் அவனே உபாயம்" என்கிறார்.[1] எம்பெருமான் எல்லாவற்றாலும் நிறைந்தவன் ஆதலால் நம்மிடத்தில் அவன் ஒன்றை எதிர்பார்ப்பதில்லை; நம்மிடத்தில் எதுவுமில்லையாதலால் நாம் அவனுக்குக் கொடுப்பதற்கும் ஓர் உபாயமும் நம்மிடத்தில் இல்லை என்பது இங்குக் கருத்தாகும். அவரவர்களுடைய கர்மங்களைச் செய்வதும் உபாயமன்று. செய்யாமல் விடுவதும் உபாயம் அன்று. எம்பெருமானை அடைவதற்கு அவனே உபாயம்.[2] எம்பெருமான் பரிபூர்ணனாகையாலே இவன் செய்ய வேண்டுவது ஒன்றில்லை. விலக்காமையிறே வேண்டுவது. பிரபத்தி செய்வது எதற்காக என்னில் இவன் சேதநனனாகையாலே செய்யவேண்டும்.[3] பிரபத்தி உபாயமாகாதோ என்னில் ஆகாது. அதுவும் அவனுடைய சொரூபத்தில் புகும், முக்தனானாலும் அர்த்தித்வம் இல்லையாகில் போகந்தான் ப்ராப்யமாக(பேறாக)மாட்டாது.[4] கர்ம, ஞான, பக்திகள் உபாயமானாலும் பலத்துக்கு எம்பெருமான் கை பார்த்திருக்க வேண்டும். அவற்றுக்குப் பலம் கொடுக்க சக்தி இல்லை என்பதை அறிந்தாலும், தன் சொரூபம் எம்பெருமானையே பற்றுதல் என்பயைறிந்தாலும் சேதநனுக்கு மற்ற உபாயங்களைப் பற்ற வழியில்லை.[5] பிரபத்தி பண்ணுவதற்கு நியதி (=சுத்தி) வேண்டா். எம்பெருமான் உறவையொழிய தனக்கொரு தூய்மை தேடுவதாது அசுத்தனாய் விடுகையேயாகும்.

> "அவனுடைய ஸம்பந்தத்தை அநுஸந்திக்கையொழிய தனக்கொரு சுத்தியில்லை, விபீஷணன் கடலிலே ஒரு முழுக்கிட்டன்றிறே வந்தது; அர்ஜுநன் யுத்தத்தின் நடுவே முழுக்கிட்டன்றிறே சரமச்லோகம் கேட்டது; த்ரௌபதி முழுகியன்றே ப்ரபத்தி பண்ணிற்று. ஆகையால் ப்ரபத்திக்கு ஒரு சுத்தியும் தேட வேண்டா."[6]

என்று விபீஷணன், திரௌபதி, அர்ஜுநன் முதலியவர்கள் இருந்த நிலையிலேயே பிரபத்தி செய்தமையை எடுத்துக் காட்டுகிறார். பிரபத்தியை மேற்கொள்வோர் தங்களுடைய அறியாமையையும், இயலாமையையும் எம்பெருமானுடைய ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்களையும் துணையாகக் கொண்டு எம்பெருமானையே உபாயமென்றிருப்பர்கள்.[7] இறைவனது ரக்ஷகத்வத்தையும் (காப்பாற்றும் தன்மை) தனது அடிமைத்தன்மையையும், எம்பெருமானை அடைய வொட்டாமல் தடுக்கும் விரோதியின் கனத்தையும் அறிந்து எவ்வித முயற்சியும் செய்யாதிருப்பர். ஆனால் சேதநனாகையாலே

1. திருப்பாவை ஆறா. ப.46 2. மேலது ப.227 3. மேலது ப.339 4. மேலது ப.369
5. மேலது ப. 487 6. மேலது ப. 128 7. மேலது ப.241

எம்பெருமானாகிற பேற்றை விரைந்து பெற வேண்டும் என்னும் துடிப்பாலே பதறுவர். இவர்களுக்கும் கர்ம ஞான பக்திகளுண்டு. இவர்கள் செய்யும் கர்மங்கள் கைங்கரியத்திலும், ஞானம் தன் சொரூபத்திலும், பக்தி ப்ராப்ய ருசியிலும் (பேற்றில் விருப்பம்) ஈடுபட்டிருக்கும். பேற்றை அடைவதில் பதற்றம் இல்லையாயின் அசித்தோடு சமமாவார்.[1] தர்மங்களை நிலைநிறுத்தப் பிறந்த கண்ணன் சரமச்லோகத்தில் "எல்லா தர்மங்களையும் விட்டு என்னைப் பற்று" என்று சொன்னபடியால், மற்றைய உபாயங்களை விட்டு ஸித்தோபாயமான எம்பெருமானையே பற்ற வேண்டும்.[2] 'விட்டோம், பற்றினோம், விடுவித்துப் பற்றுவிக்கப் பெற்றோம்' என்கிற நினைவுகளும் உபாயத்துக்கு விலக்கு எம்பெருமானுடைய திருவருளே மோக்ஷத்தைக் கொடுக்கும்[4] என்பன ப்ரபத்தியைப் பற்றி நாயனாரின் கருத்துக்களாக அமைந்துள்ளன.

## ஆசாரியனைப் பற்றுதல்

ஆசார்யனைப் பற்றியிருப்பவனுக்கு எம்பெருமான் தானே வந்து அருள் செய்வான் என்று நாயனார் கூறுகிறார்.

> "ஆசார்ய விஷயத்தைப் பற்றியிருப்பானொருவனை பகவத் விஷயம் தானே மேல் விழும். பிராட்டியைப் பற்றினாலும் அவள் அவனோடே சேர்க்கையாலே அவன் கை பார்த்திருக்க வேணும். இங்கு அவன்றானே வந்து மேல் விழுந்து தன்னை இவனுக்குக் கொடுக்கும்"[5]

என்பது நாயனார் திருவாக்கு.

## விரோதிஸ்வரூபம் (தடை)

எம்பெருமானை அடைவதற்கு நேராகவோ மற்றொன்றின் வாயிலாகவோ தடையாய் இருப்பவைகளை விரோதிகள் என்று கூறுவர். அவை ஸ்வரூப விரோதி, ஆச்ரயண விரோதி, உபாய விரோதி, ப்ராப்ய விரோதி, போக விரோதி முதலியவைகளாகும்.

> "ஸ்வரூப விரோதியையும், ஆச்ரயண விரோதியையும், உபாய விரோதியையும், உபேய விரோதியையும், போகவிரோதியையும் போக்கி ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைக் கொண்டது"[6]

என்று இவ்வைந்து விரோதிகளையும் நாயனார் குறிப்பிடுகிறார். நாயனாரே மற்றோரிடத்தில்,

---

1. மேலது ப. 200
2. அருளிச்செயல் ரஹ. ப. 71
3. மேலது ப. 81
4. ஆசார்ய ஹ்ரு. 234
5. கண்ணி. வியாக். ப. 107
6. அமல. வியாக். ப. 68

"ஸ்வரூப விரோதியும், ஸாதந விரோதியும், ப்ராப்தி விரோதியும், ப்ராப்ய விரோதியுமென்று நாலுவகையாயிறே விரோதிகளிருப்பது"[1]

என்று விரோதிகளை நான்காகவும் காட்டியுள்ளார். (முமுக்ஷுப்படியில் ஸ்வரூப விரோதி, உபாய விரோதி, ப்ராப்ய விரோதி ஆகிய மூன்று விரோதிகளை மட்டுமே காட்டிய பிள்ளைலோகாசார்யர் தமது அர்த்த பஞ்சகம் என்னும் நூலில் விரோதிகளை ஐந்தாகக் காட்டியுள்ளமை நினைவு கூரத்தக்கது.)

## ஸ்வரூப விரோதி

எம்பெருமானுக்கே அடிமைப்பட்ட ஆத்மாவை தனக்குரியதாக நினைத்தல்[2] தனக்குத் தான் உரியனாகவும், தன்னதல்லாத ஆத்மாத்மீயங்களை தன்னது என்றும் நினைக்கிற அஹங்கார மமகாரங்கள்,[3] எம்பெருமானுக்கே அடிமைப்பட்ட ஆத்மாவைப் பிறர்க்கடிமையாக நினைத்தல்,[4] முதலியவைகளை ஸ்வரூப விரோதிகளாக நாயனார் காட்டியுள்ளார்.

## உபாய விரோதி

எம்பெருமானை அடைவதற்குக் கர்ம, ஞான பக்திகளை நெறியாக நினைத்து, ஸ்வரக்ஷணத்தில் இழிகை[5] (தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயலுதல்) எம்பெருமானைப் பற்றும் பற்றை உபாயமாக நினைத்தல் இவை இரண்டையும் உபாய விரோதிகளாக நாயனார் கூறுகிறார்.

"அதில் ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணினவர்களுக்கு ஸாத்யயோபாயத்தில் ருசி வாசனையாதல், ஸ்வீகாரத்தில் உபாய புத்தியாதல், ஸ்பர்சிக்கில் சவஸ்ப்ருஷ்டம் போலேயும், நீச ஸ்பர்சம் போலேயும் இருப்பதொன்றிறே"[6]

என்று நாயனார் அருளிச்செய்துள்ளார்.

## ப்ராப்ய விரோதி

எம்பெருமானை உபாயமாகப் பற்றி, மற்ற பலன்களை (ஐச்வர்யம், கைவல்யம்) விரும்புதல், எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கரியமும் தன் இன்பத்திற்காக என நினைத்தல் ஆகிய இரண்டும் ப்ராப்ய விரோதிகள் என்று நாயனார் அருளிச் செய்துள்ளார்.

1. திருப். ஆறா. ப. 523
2. கண்ணி. வியாக். ப.129
3. அருளிச்செயல் ரஹ. ப. 24
4. மேலது ப. 24
5. மேலது ப. 31
6. திருப்பாவை ஆறா. ப. 511

"ஸாத்யத்திலும் வந்தால் ப்ரயோஜநாந்தரஸங்கம் நடப்புதல், அகவாயிலே போக்த்ருத்வ புத்தி நடப்புதல் செய்தால் விஷ போஜநம் போலேயும் உச்சிஷ்டாசநம் போலேயும் வருவதொரு அசுத்தியுண்டிறே"[1]

என்பது நாயனார் திருவாக்கு.

## உபேய ஸ்வரூபம்

எம்பெருமான் அடியார்களுக்கு அவர்கள் வேண்டும் பேற்றைக்கொடுப்பவன். செல்வத்தை விரும்புவர்களுக்கு செல்வத்தைக் கொடுத்தும், கைவல்யார்த்திகளுக்கு தேஹத்தைக் கழித்தும், எம்பெருமானையே விரும்புவர்களுக்கு தன் திருவடிகளைக் கொடுத்தும், முக்தர்களை மகிழப் பண்ணியும், நித்யசூரிகளுடைய பணிவுக்கும், ஞானம் முதலியவற்றுக்கும் தானே விஷயமாய் இருந்தும் அருள் புரிவான். இதை நாயனார்,

"எழுவார்க்கு உடம்பைப் பூண்கட்டியும், விடை கொள்வார்க்குச் செடியாராக்கையைக் கழித்தும், வழுவாவகை நினைந்தார்க்குத் தன்தாளிணைக் கீழ்ச் சேர்த்தியை உண்டாக்கியும், சேர்ந்தார்களை என்றும் மகிழப் பண்ணியும், பிரிந்து கூடாதார் பணிவும், பண்பும் தாமேயாயும் பண்ணும் ரக்ஷணம் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாகியிருக்கும்"[2]

என்று அருளிச் செய்கிறார்.

எம்பெருமானை அடைந்து அவனுக்குக் கைங்கரியம் செய்வதே ஆத்மாவின் சொரூபத்துக்குத் தகுந்தபேறு என்கிறார்.[3] கர்மயோகம், ஞான யோகம் முதலிய உபாயங்களைச் செய்து அதனாலே வரும் செல்வமும், மற்ற தேவதைகளை வேண்டி அதனால் பெறும் ஐச்வர்யமும் நிலையற்றதாய் நசிக்கும். எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதே நிலைநின்ற பேறு என்கிறார்.

"கர்மத்தாலேயாதல் தேவதாந்தர பஜநத்தாலேயாதல் வரும் ஐச்வர்யம் அந்தவத்தாயிருக்கும்: கைங்கர்ய ஸம்பத்திறே இவ்வாத்மாவுக்கு நிலை நின்ற ஸம்பத்து"[4]

---

1. திருப்பாவை ஆறா. வியாக். ப.511
2. அருளிச்செயல் ரஹ. ப.203
3. திருப்பாவை ஆறா. வ்யாக். ப. 226
4. திருப்பாவை ஆறா. ப. 228

என்றருளிச் செய்திருக்கிறார். ஒண்டொடியாள் திருமகளும் அவனுமான சேர்த்தியிலே அடிமையே பேறாகும்.[1] எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் அடிமை செய்வது அவனடியாரளவும் சென்று அவர்கட்கு அடிமை செய்வதே பேறு என்றும் கூறுகிறார்.[2]

## ஆழ்வார் நித்ய ஸம்ஸாரியே ஆவார்

நம்பிள்ளையின் மாணாக்கராகிய பின்பழகியபெருமாள்சீயர் தம்முடைய குருபரம்பராப்ரபாவம் என்ற நூலில் ஆழ்வார்களை நித்யசூரிகளின் அம்சமாகக் குறிப்பிட்டுள்ளார்.

நம்பிள்ளை, தம்முடைய திருவிருத்த உரையில், நம்மாழ்வாரை சிலர் முக்தரென்றும், நித்யசூரி என்றும், எம்பெருமானின் அவதாரம் என்றும் கூறுவர்; அவ்வாறு அவர்கள் கூறுவதற்குக் காரணம் ஆழ்வாருடைய பெருமையே என்றும், ஆனால் ஆழ்வார் சம்சாரிகளிலே ஒருவரே என்றும் குறிப்பிடுள்ளார்.[3] அதை அடியொற்றியே நாயனாரும் ஆழ்வார் ஸம்ஸாரிகளில் ஒருவரே என்று கூறுகிறார்.

கிருத, த்ரேதா, துவாபர யுகங்களிலே முறையே அந்தண குலத்தில் தத்தாத்ரேயனும், பலராமனுமாய், க்ஷத்திரிய குலத்தில் ஸ்ரீராமனுமாய், வைச்ய குலத்தில் ஸ்ரீகிருஷ்ணனுமாய் அவதரித்த எம்பெருமான் கலியுகத்திலே நான்காம் வருணத்திலே நம்மாழ்வாராக அவதரித்தாரோ என்றும், எம்பெருமான் வேதங்களைத் தொகுப்பதற்காக வியாசர் பக்கல் ஆவேசித்தது போலத் தமிழ் மறையை வெளிப்படுத்த ஆழ்வார் பக்கல் ஆவேசித்தானோ என்றும், இவ்வுலக மக்களைத் திருத்த நித்யசூரிகளிலே ஒருவரோ அல்லது முக்தரிலே ஒருவரோ இங்கு வந்து அவதரித்தாரோ எள்றும் ஆழ்வாரைக் குறித்து ஐயுறுவர்.[4] இதற்குக் காரணம் ஆழ்வாருடைய பெருமையே. இந்த பெருமைக்குக் காரணம் யாதொரு காரணத்தையும் பற்றாத எம்பெருமானுடைய திருவருளே என்கிறார். நல்வினை தீவினைகட்குத் தகுதியாக யாதாயினும் ஒரு சரீரத்திலே புகுந்து, அச்சரீரத்தின் வழியே சென்று, தொடர்ந்து வருகின்ற பிறவிகளிலே தோள் மாறி, பிறவிப் பெருங்கடலின் நடுவே இருந்து நடுங்குகிற ஆழ்வார் மேல் எம்பெருமானுடைய திருவருள்பட்டதே ஆழ்வாருடைய பெருமைக்குக் காரணம் என்கிறார்.[5] ஆழ்வார் பாசுரங்களை அடியொற்றியே நாயனார் இவ்வாறு கூறுகிறார். "யாதானும் ஓர் ஆக்கையில்

1. அருளிச்செயல் ரஹ. ப. 171 2. மேலது ப. 20 3. திருவிருத்த அவதாரிகை.
4. ஆசார்ய ஹ்ரு. 92 5. மேலது 94

புக்கு"[1] என்றும், "ஆக்கையின் வழி உழல்வேன்"[2] என்றும், "பல் பிறவியில் படிகின்ற யான்"[3] என்றும், "பிறவிப் பெருங்கடலில் நின்று நான் துளங்க"[4] என்றும் "மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து"[5] என்றும் உள்ள பாசுரங்களை நோக்கும்போது ஆழ்வார் பற்பல பிறவிகள் பிறந்த சம்சாரியே என்பது பெறப்படும். "நல்லவருள்கள் நமக்கே தந்து அருள் செய்வான்"[6] என்று ஆழ்வாரே அருளியுள்ளமையால் எம்பெருமானுடைய திருவருளால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர் என்பதும் விளங்கும் என்று நாயனார் காட்டுகிறார்.

## நிர்ஹேதுக கடாக்ஷம்

எம்பெருமானுடைய அருள் யாதொரு காரணத்தையும் பற்றாமல் வருவது என்பதை நாயனார் ஆழ்வார் பாசுரங்கள் கொண்டே விளக்குகிறார்.

எம்பெருமானாலே மயர்வற மதிநலம் அருளப் பெற்றமையால்தான் சம்சாரிகளிலே ஒருவரான ஆழ்வார் எம்பெருமானுடைய அவதாரமோ என ஐயுறும் வண்ணம் பெருமையுற்றார். எம்பெருமானுடைய அருள் யாதொரு காரணத்தையும் பற்றி உண்டானதல்ல. இக்கருத்தை ஆழ்வாரே தம்முடைய பாசுரங்களில் பல இடங்களில் உணர்த்தியுள்ளமையை நாயனார் எடுத்துக் காட்டுகிறார்.

ஆழ்வாருக்கு எம்பெருமானிடம் ஏற்பட்ட பரமபக்தியானது இப்பிறவியில் கர்ம, ஞான, பக்தி முதலிய சாதனங்களைச் செய்தமையால் உண்டானதல்ல என்பதை, "இடகிலேன் ஒன்று அட்டகில்லேன்"[7] "நோற்ற நோன்பிலேன்"[8] முதலிய பாசுரங்களில் கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலியவைகளைத் தாம் கடைப்பிடித்திலர் என்று ஆழ்வார் தாமே அருளியிருப்பதால் உணரலாம். "கிற்பன் கில்லேன்"[9] என்ற பாசுரத்திலிருந்து முற்பிறவியில் செய்த சாதனத்தினால் பெற்றதுமன்று என்பதும் தெளிவாகும். "முந்நீர் ஞாலம்"[10] என்கிற பதிகத்தில் எம்பெருமான் தந்த உடலைக் கொண்டு அவனை அடையாமல், பிறப்பதும் இறப்பதுமாக இச் சம்சாரத்தில் உழன்று போனேன் என்கிறார் ஆழ்வார். "வரவாறு ஒன்று இல்லையால் வாழ்வினிதால்"[11] "வெறிதே அருள் செய்வர் செய்வார்கட்கு"[12] என்ற பாசுரங்களில், தான் அருள் செய்ய நினைத்தவர்களுக்கு யாதொரு காரணமும் இல்லாமலே எம்பெருமான் அருள் புரிவான் என்று கூறியுள்ளார். இப்படி

1. திருவிருத்தம் 95
2. திருவாய்மொழி 3-2-1
3. மேலது 3-2-2
4. மேலது 5-1-9
5. மேலது 2-6-8
6. மேலது 8-6-1
7. திருவாய்மொழி 4-7-9
8. மேலது 5-7-1
9 மேலது 3-2-6
10. மேலது 3-2-1
11. பெரிய திருவந்தாதி 56
12. திருவாய்மொழி 8-7-8

ஆழ்வாரே அறுதியிட்ட பின்பு எம்பெருமானுடைய திருவருள் நிர்ஹேதுகமே என்பதில் ஐயம் ஏதும் இல்லை என்று நாயனார் ஆணித்தரமாகக் கூறுகிறார்.

## பாகவதப் பிறவியின் மேன்மை

பாகவதர்களுடைய பெருமையைக் கூறவந்த நாயனார், அவர்கள் தாழ்ந்த பிறவியைச் சார்ந்தவராக இருப்பினும், எம்பெருமானடியார்களாக இருப்பின் அவர்கள் பெருமைக்குரியவர்களாகக் கருதப்படுவர் என்று கூறுகிறார். இக்கருத்தை வலியுறுத்த இதிகாச புராணங்களிலிருந்து உதாரணங்களை எடுத்துக் காட்டுகிறார்.

தாழ்ந்த குலத்திலே பிறந்தவர்களாக இருந்தாலும் எம்மடியார்களாக இருப்பின் அவர்களிடம் உயர்ந்த குலத்தில் பிறந்தவர்கள் ஞானத்தைக் கொடுக்கலாம், ஞானத்தைப் பெறலாம் என்று எம்பெருமானே அருளிச்செய்த வார்த்தையையும் ஆழ்வாருடைய பாசுரத்தையும் எடுத்துக் காட்டுகிறார். நம்பாடுவான் தாழ்ந்த குலத்தில் பிறந்தவனாயினும் சோமசர்மா என்ற பிராம்மணனுக்கு ஏற்பட்ட ராக்ஷஸத் தன்மையைப் போக்கி யாகத்தைத் தலைக்கட்டியதையும், கீழ்க்குலத்தில் பிறந்த குகன் சக்கரவர்த்தி திருமகனோடு தோழமை கொண்டதையும், வேடுவ குலத்தில் பிறந்த சபரி கொடுத்ததை ஸ்ரீராமபிரான் உண்டதையும் வானர ஜாதியில் பிறந்த திருவடியோடு, ஸ்ரீராமபிரானும், விதுரருடன் கண்ணனும் உணவு உண்டதையும் உதாரணமாகக் கூறுகிறார். மேலும் ஸ்ரீராமபிரான் பெரியவுடையார்க்கும், தர்மபுத்திரர் ஸ்ரீவிதுரர்க்கும், பெரிய நம்பிகள் மாறநேர் நம்பிக்கும் ஈமக் கிரியைகள் செய்ததையும், தாழ்குலத்தில் பிறந்த திருக்கச்சிநம்பி, திருப்பாணாழ்வார், குறும்பறுத்த நம்பி ஆகியோரை முறையே உயர்குலத்தவர்களான உடையவரும், லோகசாரங்க மஹாமுனிவரும், தொண்டைமன்னவனும் சார்ந்த முறையையும் எடுத்துக் காட்டுகிறார். திருவாராதனத்தில் பிள்ளையுறங்காவில்லிதாசரைத் தீண்டுதலால் உடல் சுத்தி பண்ணின உடையவருடைய செயலையும், பிள்ளை ஏறுதிருவுடையார் தாசருடைய கரத்தாலே அன்ன சுத்தி செய்த நம்பிள்ளையின் செயலையும், பிள்ளை வானமாமலைதாசருடைய நடையாட்டத்தால் இல்லத்தைச் சுத்தி பண்ணின நடுவில்திருவீதிப் பிள்ளை பட்டருடைய செயலையும் உதாரணங்களாகக் கூறி இவற்றால் எம்பெருமானடி யார்களுக்குக் குலத்தில் உயர்வு தாழ்வு கிடையாது என்று கூறுகிறார்.

எம்பெருமானுடைய சம்பந்தம் இல்லாத வர்ணமும், ஆச்ரமும், ஞானமும், தாழ்ந்தவையாதலால் அவை தள்ளத் தக்கன என்கிறார்.

உயர்ந்த குலத்தில் பிறந்து நான்கு வேதங்களையும் கற்றவனாயினும் எம்பெருமானை உள்ளபடியறியாதவன், குங்குமஞ் சுமந்த கழுதையைப் போலே தான் சுமந்து கொண்டு திரிகிற வேதத்தின் பரிமளமறியாத பிராமணக் கழுதை, எம்பெருமானிடத்தில் பக்தி இல்லாதவன் நாய் இறைச்சி தின்னும் சண்டாளனைக் காட்டிலும் தாழ்ந்தவன். மோக்ஷத்தைக் கொடுப்பதாக இருக்கும் கல்வியே கல்வியாகும். அல்லாதவை செருப்புக் குத்தக் கற்றதற்கு ஒப்பாகும். பகவானைத் தியானம் செய்யாதவர்கள் செய்கிற கர்மாநுஷ்டானங்கள் சாம்பலில் போடப்பட்ட ஆஹுதி போன்று பயன் அற்றது. எம்பெருமானிடத்தில் பக்தி இல்லாதவனுடைய கல்வியும் ஒழுக்கமும் பிணத்திற்குச் செய்த அலங்காரத்தைப் போன்றது. எம்பெருமானுடைய சம்பந்தம் இல்லாதவர்களுக்குக் கல்வியாலும் ஒழுக்கத்தாலும் உண்டான உயர்வானது பகவத் சம்பந்த ஞானமாகிற மாங்கல்யம் இன்மையாலே விதவா அலங்காரம் போன்றது. எம்பெருமானுடைய சம்பந்தம் இல்லாத சாதியும், ஆச்ரயமும் ஞானமும், ஒழுக்கமும் தள்ளத் தக்கவையே என்பது நாயனார் கருத்து. தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்களாயினும் எம்பெருமானடியார் களாயின் அவர்கள் உயர்வாகக் கருதப்படுவர் என்றும், உயர்ந்த குலத்தில் பிறந்தவர்கள் எம்பெருமானை உள்ளபடி அறியாதவர்களாக இருப்பின், அவர்கள் தாழ்ந்தவர்களாகக் கருதப்படுவர் என்றும் நாயனார் கூறுகிறார்.[1]

மேலும் எம்பெருமானுக்கு அடிமை செய்வதற்குத் தக்க பிறவியே உயர் பிறவி என்பதால் நித்யசூரிகளும் முமுக்ஷுக்களும் அவற்றையே ஆசைப்பட்டனர். பரமபதத்தில் எம்பெருமானுக்குப் படுக்கையாக இருப்பதற்குப் பாம்பாகவும், வாகனமாக இருப்பதற்குத் தகுதியாக கருடப் பறவையாகவும், எம்பெருமான் அணிவதற்குத் தகுந்த திருத்துழாய்ச் செடியாகவும் நித்ய சூரிகள் பிறந்தனர். யமுனைக் கரையிலுள்ள மரமாகவோ, பிருந்தாவனத்திலுள்ள ஒரு செடியாகவோ, திருமலையில் ஒரு விலங்காகவோ ஸ்ரீவைஷ்ணவர் திருமாளிகையில் ஒரு புழுவாகவோ பிறக்க வேணுமென்று முமுக்ஷுக்கள் பிரார்த்தித்தனர்.

தாழ்ந்த பிறவியான விலங்கு, பறவை, மரம், செடி முதலான பிறவிகளை நித்ய சூரிகளும் முமுக்ஷுக்களும் பிரார்த்தித்தனர் என்கையால் எம்பெருமானுக்கு அடிமை செய்வதற்குத் தக்க பிறவியே உயர்ந்தது என்பது பெறப்படுகின்றது என்பது நாயனாரின் கருத்தாகும்.[1]

---

1. ஆசார்யஹ்ருதயம் - 86

## முடிவுகள்

1. திருவாய்மொழியில் அர்த்த பஞ்சகம் வெளியிடப்பட்டுள்ளமையை நாயனார் விரிவாக அருளிச் செய்துள்ளார்.

2. எம்பெருமானுடைய தன்மைகளையும், ஐந்து நிலைகளையும். நாயனார் விரிவாக விளக்கியுள்ளார். அதிலும் விபவ நிலையில் எம்பெருமான் அடியவர்களுக்காகத் தன்னைத் தாழவிட்டுக் கொண்டு பிறந்த நீர்மையையும், அர்ச்சாவதாரத்தில் எம்பெருமானின் திருக்கல்யாண குணங்கள் பூரணமாக இருப்பதையும் காணலாம் என்பதையும் நாயனார் விளக்கமாக அருளியுள்ளார்.

3. பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு எம்பெருமாபை பற்ற வேண்டும் என்று நாயனார் கூறியுள்ளார்.

4. பரஸ்வரூபம், ஜீவஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், பல ஸ்வரூபம், விரோதி ஸ்வரூபம் முதலியவற்றை விரிவாகக் கூறிய நாயனார், எம்பெருமானை அடைவதற்கு அவனே உபாயம் என்றும் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதே ஆத்மாவுக்கு உயர்ந்த பேறு என்றும் குறிப்பிட்டுள்ளார்.

5. பாகவதர்களுடைய பெருமையைப் பரக்கப் பேசியுள்ளார்.

6. ஆழ்வாரை நித்யசூரிகளிலே ஒருவரோ, முக்தரிலோ ஒருவரோ என ஐயுறுவதற்குக் காரணம் அவருடைய பெருமையே என்றும், ஆழ்வார் சம்சாரிகளிலே ஒருவரே என்றும் பாசுரங்கள் கொண்டு நிரூபித்துள்ளார்.

7. எம்பெருமானுடைய கிருபை நிர்ஹேதுகமே என்று அறுதியிட்டுக் கூறியுள்ளார்.

8. எம்பெருமானடியார்களிடம் குலத்தில் தாழ்வு பாராட்டக்கூடாது என்பதை பல உதாரணங்கள் மூலம் தெளிவாகக் காட்டியுள்ளார்.

# நாயனாரின் தனிச் சிறப்புகள்

ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரையில் பல்வேறு ஆசார்யர்கள் அவதரித்திருந்தாலும் அவர்களுள் நாயனார் மிகவும் சிறப்பானதொரு இடத்தைப் பெற்றுள்ளார். தத்துவக் கருத்துகளை வெளியிடுவதற்காகவே இயற்றப்பட்ட ரகசிய நூல்களில் மிக அதிகமான அளவில் திவ்யப்பிரபந்த பாசுரங்களையும், திவ்ய பிரபந்தப் பாசுரங்களின் உரைகளில் மிக அதிகமான அளவில் தத்துவக் கருத்துகளையும் இடம் பெறச் செய்துள்ளமை நாயனாரின் தனிச் சிறப்பாகும். ஆழ்வார்களுடைய பாசுரங்களில் நாயனாருக்கு உள்ள ஈடுபாடு, அவருடைய நூல்களில் மிக அதிக அளவில் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களைக் கையாண்டுள்ளதன் மூலம் வெளிப்படுகிறது. தன்னுடைய சொற்களை மிகமிகக் குறைவாகக் கையாண்டு, திவ்யப்பிரபந்தப் பாசுரங்களையே முழுவதும் கொண்டு அமைக்கப்பட்டுள்ள ஆசார்ய ஹ்ருதயம், அருளிச் செயல் ரஹஸ்யம் ஆகிய நூல்களை நோக்கும்பொழுது அருளிச் செயலில் அவருக்கு இருந்த ஆழ்ந்த ஞானம் புலப்படுகின்றது. ஒரே சொல் பல பாசுரங்களில் இடம்பெற்றிருந்தாலும், தாம் கூற நினைத்த கருத்தைச் சொல்லும் பாசுரங்களை மட்டும் எடுத்து அவற்றைத் தொகுத்திருக்கும் அழகு நாயனாருக்கே உள்ள தனிச்சிறப்பாகும். திவ்ய ப்ரபந்தங்களுக்கு உரையிடும் பொழுதும் அதிக அளவில் மற்ற பாசுரங்களிலிருந்து மேற்கோள் காட்டி விளக்கியுள்ளார். அவர் மேற்கோள் காட்டியுள்ள பாசுரங்களையும், வடமொழி சுலோகங்களையும், பட்டியலிட்டால் அதுவே ஒரு தனி நூலாகிவிடும்.

தாம் கூற வந்த கருத்துக்களை தம்முடைய கருத்தாகக் கூறாமல் ஆழ்வார்கள் பாசுரங்கள் கொண்டு நிர்ணயிக்கும் அழகு நாயனாருடைய மற்றொரு சிறப்பம்சமாகும். தமிழ் மொழியின் பழமையையும், திருவாய்மொழி சந்தோக சாமத்தோடு ஒக்கும் என்பதையும், ஆழ்வார் சம்சாரிகளிலே ஒருவர் என்பதையும், எம்பெருமானுடைய க்ருபை நிர்ஹேதுகமே என்பதையும் பாசுரங்களைக் கொண்டே நிர்ணயித்திருக்கும் அழகு சொல்லத் தரமன்று.

திருவாய்மொழிக்கு இவரருளிய ஸ்வாபதேசம் (உள்ளுறை பொருள்) நாயனாருடைய நூல்களின் மற்றொரு தனிச் சிறப்பாகும். திருவாய்மொழியில் நம்மாழ்வார் தாமான நிலையில் பல பதிகங்களும், பெண்நிலை அடைந்து சில பதிகங்களும் பாடியுள்ளார். தலைவன் தலைவி நிலையில் அமைந்துள்ள பாடல்களாதலால் மேலோட்டமாக பொருள்களை நோக்கும் பொழுது காமுகர் வார்த்தை போல் தோன்றும். "அஞ்சிறைய மட நாராய்" என்ற திருவாய்மொழிப்

பதிகத்தின்[1] முன்னுரையில் ஓர் ஐதிஹ்யம் கூறப்பட்டுள்ளது. முற்காலத்தில் சிற்றறிவினன் ஒருவன், 'பற்று அற்ற பரம ஞானிகளும் போற்றத் தக்கனவாகவும், உண்மைப் பொருளை உள்ளவாறு கூறுகின்றனவாகவும் திருவாய்மொழிப் பாசுரங்கள் உள்ளன என்று கருதி, முதல் மூன்று திருவாய்மொழிகள் வரையில் பாடங் கேட்டு வந்தானாம். "அஞ்சிறைய" என்ற நான்காம் திருவாய்மொழியில் ஆழ்வார் நாயகி நிலையை அடைந்து நாயகனான எம்பெருமானிடம் பறவைகளைத் தூது அனுப்புகிறார் என்பதைக் கேட்டவுடன், "இது காமுகர் வார்த்தையாய் இருந்ததே" என்று எழுந்து போய்விட்டானாம்; "இறைவன் கேட்கத்தக்கவன், நினைக்கத்தக்கவன், தியானம் செய்யத்தக்கவன், பார்க்கத்தக்கவன்" என்று விதிக்கிற பகவத் காமத்தையே இது கூறுகிறது என்று அறிந்திலன், நல்வினை அற்றவன் ஆதலாலே. ஆழ்வார்கள் வேதாந்தக் கருத்துகளை விளக்க வந்த ஞானிகளாதலின், சாதாரணமான பொருளை அருளிச் செய்திருக்க மாட்டார்கள். ஆத்மா, பரமாத்வைப் பற்றிய உறவுகளையே அருளிச் செய்திருப்பர். திருவாய்மொழியைக் கற்பவர்களுக்கு இவ்வர்த்தங்கள் நன்கு விளங்க வேண்டும் என்பதற்காகவே நாயனார், பெண்நிலையில் நம்மாழ்வார் அருளியுள்ள பாசுரங்களிலுள்ள ஒவ்வொரு சொல்லிற்கும் தனித்தனியே உள்ளுறை பொருள் வழங்கியுள்ளார்.

## அருளிச் செயலில் தோழி, தாய், மகளான பேச்சுக்களின் உட்கருத்து

திருவாய்மொழியில் ஆழ்வார் தாய்ப் பாசுரமாக ஏழு பதிகங்களும், தோழிப் பாசுரமாக மூன்று பதிகங்களும், தலைமகள் பாசுரமாக பதினேழு பதிகங்களும் அருளிச் செய்துள்ளார். இம்மூன்று நிலைகளுக்கும் உள்ளுறை பொருளை நாயனார் மிகவும் அழகுற எடுத்துக் காட்டுகிறார். தோழி நிலை என்பது எம்பெருமானோடு உள்ள தொடர்பைப் பற்றிய அறிவைக் காட்டுகிறது என்றும், தாய் நிலை என்பது உபாய அத்யவஸாயத்தை (உபாயத்தில் ஆழ்வாருக்கு உள்ள உறுதியை)க் காட்டுகிறது என்றும், மகள் நிலை என்பது பேற்றை அடைவதில் ஆழ்வாருக்குள்ள பதற்றத்தைக் காட்டுகிறது என்றும் நாயனார் பொருளுரைத்துள்ளார். சில இடங்களில் ஆழ்வார், 'தோழிமார்', 'அன்னையர்' என்று பன்மையில் கூறியுள்ளார். தோழி என்பது சம்பந்த ஞானமாகையால் தோழிமார் என்று பன்மையில் கூறுவது, திருமந்திரத்தில் சொல்லுகிறபடியே ஆத்மாவோடு எம்பெருமானுக்குண்டான ரக்ஷகத்வம்,

1. திருவாய்மொழி 1-4

சேஷித்வம், காரணத்வம், சரீரித்வம் முதலான பல சம்பந்தங்களைத் தெரிவிக்கிறது என்றும், அன்னையர் என்பது, உபாயமான எம்பெருமானுடைய வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தி, க்ருபை முதலியவற்றைப் பற்றி வரும் துணிவின் உருவமான ஞானத்தின் வேற்றுமை என்றும் நாயனார் விளக்கமாகக் காட்டியுள்ளார்.

பேற்றினைப் பெறுதலில் உண்டாகும் பதற்றத்தைத் தலைமகள் என்று கூறிய நாயனார், தலைமகளுக்குக் கூறப்படும் ஏழு பருவங்கள் போல, பக்தி ரூபமான ப்ராப்யத்வரைக்கும் ஏழுநிலைகள் கூறுகிறார். தலைமகளுக்கு பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற ஏழுநிலைகள் உள்ளதைப் போல் அபிலாஷா, சிந்தநா, அநுஸ்மிருதி, இச்சா, ருசி, பரபக்தி, பரமபக்தி, என பக்தியின் ஏழு நிலைகளைக் கூறுகிறார்.

## தலைமகளின் அவயவங்களுக்கு உள்ளுறை பொருள்

மயில் – "தோகை மாமயிலார்கள்" என்று பெண்களை மயிலாகச் சொல்லுகிறது கூந்தலின் பரப்பையிட்டேயாதலால் இங்கு ஆத்மாவினுடைய ஞான விரிவினைச் சொல்லுகிறது.

பிறை – "பிறையுடை வாணுதல்" என்று நெற்றியைப் பிறையாகச் சொல்லுகையால் அதன் வெண்மையையிட்டு ஸ்வாதந்திரியம், அந்ய சேஷத்வம் முதலான குற்றங்கள் அற்றிருக்கும் தூய்மையைச் சொல்லுகிறது.

வில் – "விற்புருவக்கொடி" என்று புருவத்தை வில்லாகச் சொல்லுகிறது வளைந்திருக்கும் தன்மையைக் கொண்டாதலால் புறக் கரணங்களையும் அகக் காரணங்களையும் அடக்கி ஆளுகிற தாந்தியைச் சொல்லுகிறது.

முத்து – "முத்தன்ன வெண்முறுவல்" என்று முறுவலை முத்தாகச் சொல்லியுள்ளபடியால் "முத்" என்பதற்கு ஆனந்தம் என்று கொண்டு, அப்பொருளை அநுபவிப்பதனால் உண்டாகும் ஆனந்தத்தைச் சொல்லுகிறது.

பவளம் – "பவள வாயாள்" என்று உதட்டினைப் பவளமாகச் சொல்லுகிறது செந்நிறத்தைக் கொண்டேயாதலால், அப்பொருள் காரணமாக வரும் அன்பினைச் சொல்லுகிறது.

செப்பு – "செப்பன்ன மென்முலை" என்று பரிபக்குவமான முலையைச் செப்பாகச் சொல்லுகையாலே இறைவன் விரும்பி மேல் விழும்படி பரிபக்குவமான பக்தியைச் சொல்லுகிறது.

மின் – "மின்னனைய நுண் மருங்குல்" என்று இடையை மின்னலாகச் சொல்லுகிறது நுண்மை காரணமாக ஆகையால் ஆத்ம சொரூபத்தின் அணுத் தன்மையைச் சொல்லுகிறது.

தேர் – "தேரணங்கல்குல்" என்கிற அல்குலின் அழகு அநுபவிக்கிறவனுக்கு இனிய பொருள் ஆகையாலே ஆத்மாவினுடைய இனிமையைச் சொல்லுகிறது.

அன்னம் –"அன்னமன்ன நடையாள்" என்று அன்னத்தை நடைக்கு உவமையாகச் சொல்லுகையாலே, இறைவனும் அவன் அடியார்களும் சிறப்பித்துப் பேசும்படி சொரூபத்திற்குத் தகுதியாக நடக்கின்ற ஒழுக்கத்தைச் சொல்லுகிறது.

ஆக, இவ்வாறு மயில், பிறை என்பன போன்று புகழ்ந்து பேசுவதற்குத் தக்க அவயவ விசேடங்களையுடையதான உருவமானது, ஞானம், விகாசம், சுத்தி முதலானவற்றுக்கு இருப்பிடமான ஆன்ம சொரூபத்தின் வகுப்பு என்று நாயனார் காட்டுகிறார்.

மேலும் ஊரார், நாட்டார், உலகர், மாலை, கங்குல், காலை, பகல் முதலிய பதங்களுக்கு உள்ளுறை பொருளுரைக்கிறார்.

ஊரார் – ஆத்ம இன்பத்தை விரும்புகிற கேவலர்(கைவல்யத்தை விரும்புபவர்).

நாட்டார் – ஐச்வர்யத்தை விரும்புகிறவர்கள்.

உலகர் – சுவர்க்கம் முதலான மேல் உலகச்செல்வங்களை விரும்புகிறவர்கள்.

மாலை– பொருள்களை உள்ளபடி தெரிவிக்காத நேரமாகையாலே பொருள்களின் மாறுபட்ட உணர்வை உண்டாக்கும் ராஜஸ ஞானம்.

கங்குல் – தாமஸ ஞானம்.

காலை – சத்வகுணத்தை வளர்ப்பதால் சத்துவ ஞானம்.

பகல் – பொருள்களைத் தெளிவாக விளக்கிக் காட்டும் காலமாகையாலே எம்பெருமானைத் தெளிய அறிகின்ற சுத்த சத்துவ ஞானம்.

கலை, வளை – "கைவளையும் மேகலையும் காணேன்" என்றும், "கலையாளா அகலல்குல் கனவளையும் கையாளா" என்றும் வருகின்ற

இடங்களில் சொல்லப் பட்டுள்ள கலை, வளை என்பவை எம்பெருமானுடைய அநுபவத்திற்கு விரோதியான அகங்காரமும் மமகாரமும் ஆகும்

பட்டம், சூடகம் – பட்டம், சூடகம் என்று சொல்லப்படுவன, இவ்வாத்மாவை அங்கீகரித்த ஆசார்யனுண்டாக்குகிற சேஷத்வம் முதலான ஆத்ம அலங்காரங்கள்.

பந்து, கழல், பாவை, குழமணன், யாழ், தென்றல் முதலியவை போகஸ்தானமான சரீரத்தையும், போகோபகரணமான இந்திரியங்களையும் விளையாட்டுக் கருவிகளாகக் குறிப்பிடுவதாக நாயனார் காட்டுகின்றார். விளையாட்டாவது, ஒரு செயலைச் செய்யும்போது அப்போதே தோன்றும் இன்பமாதலால் அத்தகைய செயல்களுக்கு இவை கருவிகளாக இருக்கும் என்கிறார்.

இவ்வாறு நாயனார், தலைவி நிலையில் ஆழ்வார் கூறும் சொற்களுக்கு உள்ளுறை பொருள் உரைத்ததுபோல் வேறு எவரும் உரைத்திலர். திருவாய்மொழியில் உள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் தனித்தனியே உள்ளுறைபொருளுரைத்து, அவற்றை வகைப்படுத்தி, திருவாய்மொழி முழுவதையும் படித்தாலும் நினைவில் கொள்ளமுடியாத பல விஷயங்களை நினைவில் கொள்ளும்வண்ணம் சூர்ணிகை வடிவில் அமைத்து நாயனார் அருளிச்செய்துள்ள ஆசார்யஹ்ருதயம் ஓர் அற்புதமான படைப்பாகும்.

## உருவகப்படுத்தி விளக்குதல்

ரகசியநூல்களின் கருத்துக்களை விளக்கும்போதும் அழகிய உதாரணங்களுடன் உருவகப்படுத்தி விளக்குவது நாயனாருக்கே உரிய தனிச் சிறப்பாகும்.

## ஜீவாத்மாவை மணப்பெண்ணாக உருவகப்படுத்துதல்

ஆழ்வார் பெண்தன்மையை அடைந்து பாசுரங்கள் அருளிச் செய்துள்ளமையை விளக்குகின்றபோது நாயானார், ஜீவாத்மாவுக்குப் பெண் தன்மையானது இயற்கையாகவே அமைந்தது என்று கூறி, பரமாத்மாவுடன் ஜீவாத்மா சேர்வது ஒரு பெண்ணுக்குத் திருமணம் நடைபெறுவதைப் போன்றது என்று அழகிய விளக்கத்தை அருளுகிறார்.

ஆத்மாவுக்கு வித்யை தாயாகவும், ஆசாரியன் பிதாவாகவும் கொள்ளப் படுகின்றனர். ஆசார்யன் திருமந்திர மூலமாக சொரூப ஞானத்தை உண்டாக்கின போது இவ்வான்மா உளதாகின்றதாகையாலே கல்வியைத்

தாயாகக் கொண்டு இவ்வான்மாவைப் பிறப்பிக்கின்றான். தேனும் பாலும் அமுதுமான திருமந்திரத்தாலே வேறு ஒருவர்க்காகாது அவனுக்கே அடிமைப் பட்டிருத்தல் முதலான தன்மைகளாலே ஆத்மாவை திருமகளுக்கு ஒப்பாக ஆசாரியனாகிற தந்தை வளர்த்துக் கொண்டு போகிறான். பிறர் ஒருவர்க்கு உரிமையாக இருக்கும் தன்மையது என்ற பேச்சு வராதபடி, எல்லா உலகங்கட்கும் நாயகனான ஈச்வரனுடைய சம்பந்தத்தை விளக்கிக் கொண்டிருப்பதான திருமந்திரமாகிற மங்கள சூத்திரத்தோடே, கைப்பிடிக்கும்படி செய்கிறான். பரமபுருஷனான மணவாளர் ஏற்றுக் கொண்ட பின்னர் கைங்கரியப் பிரார்த்தனை கொண்டு பகவதநுபவத்திற்கு விரோதியாய் இடையீடான சரீரம் நடுவே கிடக்கிற சில நாட்களையும் கழித்து, ஒருவராலும் விட முடியாத ஜன்ம பூமியான இவ்வுலகை விட்டு நீங்கி, அர்ச்சிராதி மார்க்கத்தாலே வழியில் உள்ளாரடைய உபசரிக்க நாயகன் முன்னே செல்லப் பின்னே சென்று, நாயகன் வீட்டிற்குச் செல்லுகிற புதுப்பெண், அவ்வூர் எல்லையில் சென்றவாறே அவர்கள் நீராட்டுவிக்க நீராடுமாறு போலே, அமுத ஆறான விரஜையிலே, இப்பால் உள்ள அழுக்கு அறும்படி நீராடி, தெய்வப் பெண்கள் அநுபவிக்கின்ற ஸர்வேச்வரனுடைய அநுபவத்துக்கு இனியதாம்படி அலங்கரித்து, நாயகன் வீட்டினை அணுகச் செல்கிறாள். அங்குள்ள பெண்கள் மங்களதீபம் முதலியவற்றை ஏந்திக் கொண்டு எதிரே வந்து உபசரிக்குமாபோலே பூர்ண கும்பம் முதலியவற்றைத் தரித்துக் கொண்டு தெய்வப் பெண்கள் எதிர் கொள்ள, மகிழ்ச்சியோடு சென்ற பெண் நாயகன் வீட்டிலே புகுமாறு போலே ஸ்ரீவைகுண்டத்தை அடைகிறாள்.

நாயகன் வீட்டிற்குப் பெண் வந்த பிறகு தம்பதிகளும் மற்றுமுள்ள உறவினர்களும் கூடியிருந்து பெருங்களிச்சி உண்ணுமாறு போலே அடியார் குழாங்களும் அவனுமாக இருக்கிற சேர்த்தியிலே பெருங்களிப்புடன் பூர்ணாநுபவம் பண்ணி, நித்திய சூரிகள் அனுபவிக்கிற போகத்தை அநுபவித்து, நாயகனுடைய கலவிக்குப் படுக்கையில் ஏறுமாறு போலே, தெய்வத் தன்மை வாய்ந்த கட்டிலிலே பாத பீடத்திலே அடியிட்டேறி, ஸ்ரீபரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் ஆதரித்து அணைத்துக் கொண்ட திருமார்பிலே, ஸ்ரீ கௌஸ்துப மணியைப் போன்று இனியதாய் ஒளியையுடையதாய்க் கொண்டு புதப்பெண்ணான ஆத்மாவானது அணையப் பெறுகின்றது. எனவே ஆழ்வாருக்குப் பெண் தன்மையோடு கூடியதாய் வரும் பேச்சு வந்தேறி அன்று; இயல்பாகவே அமைந்தது என்று பெண் தன்மை ஆன்மாவிற்கு இயல்பாக அமைந்தமையை, ஜீவாத்மாவை ஒரு மணப்

பெண்ணாக உருவகப்படுத்தி அந்த ஜீவாத்மா பரமாத்மாவோடு சேருவதை திருமணம் புரிவதோடு ஒப்பிட்டு அருளிச் செய்துள்ளார்.[6]

## ஜீவாத்மாவை நெல்லாக உருவகப்படுத்துதல்

நம்மாழ்வாருக்கு எம்பெருமானிடத்தில் உண்டான பரமபக்தியானது, இப் பிறவியில் கர்ம, ஞான, பக்திகளை அனுட்டித்து வந்ததுமல்ல, முற்பிறவியில் செய்த சாதனத்தினால் பெற்றதுமல்ல. பலத்தினை அனுபவிப்பனான எம்பெருமானுடைய வேளாண்மையின் பலனே இவருடைய பக்திக்குக் காரணமாக அமைந்தது என்பது நாயனார் கருத்து. "ஆசார்யஹ்ருதயத்தில் "பெரும்பாழில்" என்கிற சூர்ணையில் ஆத்மாவை நெற்பயிருக்கு ஒப்பிட்டு இக்கருத்தை வலியுறுத்துகிறார்.

மூலப் பகுதியில் கட்டுப்பட்டிருக்கும் அறிவுப் பொருளான இவ்வான்மாவிற்கு உரியதான மனமே பக்திக்கு விளைநிலமாகும். ஆனால் ஐம்பொறிகளாகிற பகைவர்கள் ஆன்மாவிற்கு உரியதான மனத்தினைத் தங்களுக்கு உரியதாக்கிக் கொண்டு, தங்கள் விருப்பப்படி நடத்தி, விஷயங்களாகிற படுகுழியிலே தள்ளி நலிகின்றனர். எம்பெருமானைப் பற்றி நினைக்க விடாமல் செய்து விடுகின்றனர்.

இவ்வாறு ஐம்பொறிகள்வசம் சிக்கிய மனத்தைத் தன் வசப்படுத்த எண்ணிய எம்பெருமான் அருளாகிய வாளை எடுத்துப் பாவமாகிற தூறுகளை மறுகிளை உண்டாகாதபடி வாசனை ருசி என்னும் ஊசி வேரோடும் பக்கவேரோடும் அறுப்பித்து, சாம்பலாக்கி வயலைப் பதப்படுத்துகிறான். இவன் "பாகவதன் ஆனான்" என்று சம்சாரிகள் சொல்லும் பழிமொழிகள் பக்தியாகிற பயிரை வளர்க்கும் எருவாக ஆகின்றன. ஞானமாகிற அமுத ஆற்றினைப் பெருகப் பண்ணி, அன்பு விளையும்படி நெஞ்சைப் பதஞ் செய்து, அந்நெஞ்சிலே சங்கமாகிற நெல்லை விதைக்கிறான். அவனுக்கே பரதந்திரப்பட்டதாய் அவனுக்கே இனியதாய் வளருகிற இப்பயிரில் உண்டாகும் 'நான் பக்தி செய்கிறேன், நான் அநுபவிக்கிறேன்' என்கிற ஆணவமாகிய களையை ஊசி வேரோடே பறிக்கிறான். எம்பெருமானிடத்தில் மனம் வைக்கவிடாமல் உலக ஆசைகளில் ஈடுபடுத்துகின்ற, பக்கியாகிற இப்பயிருக்குப் பட்டியான, இந்திரியங்களை அடக்குகிறான். பயிர் நன்கு வளர்ந்து பயன் தரும் பொழுது இரவில் கொள்ளை அடிப்பவர்கள் அப்பயிரை அழித்து விடாவண்ணம் காப்பது போல், இப்பயிரையும் பாகவதர் அல்லாதவர்கள் கெடுத்து விடாமல் காப்பாற்றி, தன் காளமேகம் போன்ற

கரிய நிறத்தையுடைய வடிவழகாகிய மழையினை பொழிகிறான். இதனால் பக்தியாகிற பயிர் கடல் போல் அளவிடுவதற்கு அரிதாக முற்றி (ஆர்த்தியால் வருத் தன் வசமின்மை பிறந்து) தலைவணங்கி நிற்கிறது. இவ்வாறு முதிர்ந்த பக்தியை எம்பெருமான் ஒரு நாள் அனுபவித்து விடுகையன்றிக்கே நாள்தோறும் அநுபவித்தும் திருப்தியற்றவனாய், அங்கேயிருந்த பிராட்டிமார் முதலானாரும் அறிய மாட்டாதபடி, பெரும் பசியரானவர்கள் விளைந்த நெல்லைச் சேர அறுத்துக் கொண்டு போய்ச் சமைத்து உண்ணுகிற வரையிலும் தரிக்க மாட்டாமல் முற்றின வளவுகளைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கிள்ளி எடுத்து உண்ணுமாறு போலே, இவ்வுலக வாழ்விலே கட்டுப் பட்டிருந்து ஆன்மா விடுபட்டு முக்தனான பின்பு பூரணமாக அநுபவிப்போம் என்று இருக்க மாட்டாத தன் பேரவாவாலே இந்த உடலோடே இருக்கும் பொழுதே (விளைந்த பக்திக்குத் தகுதியாக மனதுக்கு நிறைவு பெறாமல்) மேன்மேலும் அநுபவிக்கிறான். பிறகு நெல் முற்றிப் பக்குவம் அடைந்து விட்டால் உடனே அறுப்பது போல பக்குவப்பட்ட இந்த ஆன்மாவினுடைய பேற்றுக்குத் தடையான பாவங்களை அறுக்கிறான். அறுத்த நெற்கதிர்களைத் தடியாலே அடித்துப் பதரும் மணியும் பிரிப்பதுபோல எம்பெருமான் தன்னுடைய அருளாகிற கருவியால் நெல்லோடு சேர்ந்து இருக்கும், ஆன்ம அநுபவமாகிய கைவல்யத்தில் ருசியை அறுத்து எறிகிறான். நெல்லில் உமியை விடுவிப்பது போல மன நோய்க்கும், உடல் நோய்க்கும் காரணமான தூல சரீரம் அழிந்தாலும் தான் அழியாத பிறப்பு இறப்புக்களிலே உழன்று திரிவதற்குக் காரணமான சூக்கும சரீரத்தையும் கழிக்கிறான். பிறகு தூல சூக்கும வடிவமான சரீரத்தில் நின்றும் பிரித்த இவ்வான்மாவினை தேவ மாதர்களைக் கொண்டு ஞானம் முதலான அறு குணங்களாகிற அறுசுவையோடு கூடிய அன்னமாக பக்குவப் படுத்துகிறான். இவ்வாறு இவ்வுயிருக்கு ருசி பிறப்பதற்கு முன்னரே எம்பெருமான் இவ்வுயிரை அநுபவிக்கப் பாரிக்கிறான். இப்படி, 'இவன் பயிர் செய்பவன்' என்று தோன்றும் படி பயிர்த் தொழிலுக்குத் தேவையான கருவியைக் கையிலே கொண்டு அரிதான தன் திருவடிகளைப் பெறுதலும் எளிதாம்படி இவ்வுயிர் உய்வு பெறுதற்கு மிக்க முயற்சியைச் செய்யும் தன்மையனாய், இவ்வுயிருக்குத் தன் விஷயத்தில் பக்தியை விளைக்கைக்கு வேண்டிய செயலைச் செய்து திரியும் எம்பெருமானுடைய முயற்சியின் பலனே இவ்வாத்மாவுக்கு உண்டான இந்தப் பக்தி என்று நாயனார் ஆத்மாவை நெல்லோடு உருவகப்படுத்திக் காட்டுகிறார்.[1]

1. ஆசார்யஹ்ருதயம் - 104

## நாயனாருக்கும் வேதாந்ததேசிகருக்கும் உள்ள கருத்து வேறுபாடுகள்

திருவாய்மொழியின் ஆய்வு நூலைப்போல அமைந்துள்ள ஆசார்ய ஹ்ருதயத்தில் ஜாதி, கர்மம் – கைங்கர்யம் முதலியவற்றைப் பற்றி நாயனார் அருளிச் செய்துள்ள கருத்துகளில் அவருக்கும் வேதாந்ததேசிகருக்கும் இடையே கருத்து வேற்றுமைகள் இருந்தன என்பது அவ்விருவருடைய நூல்களையும் ஒப்பிட்டு நோக்கும்போது நம்மால் அறியமுடியகின்றது. பெரியவாச்சான்பிள்ளை 'குலம் தரும்'[1] என்ற பாசுரத்தின் உரையில்,

> "கண்டதெல்லாம் தர்மஸந்தேஹம் பண்ணக்கடவ தர்மபுத்ரன் பகவத் ப்ரத்யாஸத்தியாலும், அசரீரி வாக்யத்தாலும் விதுரரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்காரம் பண்ணினானிறே. ரிஷிகள், தர்மவ்யாதன் மாம்ஸவிக்ரயம் பண்ணிக் கையொழியுந்தனையும் பார்த்து நின்று தர்மஸங்கடங்கள் கேட்டுப் போனார்களிறே. இங்ஙனன்றாகில் பஞ்சமவேதமான மஹாபாரதத்திலே எழுதக்கூடாதிறே. கைசிக கதையிலே வந்தவாறே விலக்ஷணனாயிருப்பானொரு ப்ராஹ்மணனாசார வைகல்யத்துக்கு பகவத்ஜ்ஞானமுடையானொரு பாடுவானாலே பரிஹாரம் இருந்ததிறே. விபீஷணாழ்வான் ..... 'ராக்ஷஸாநாம் பலாபலம்' என்று பெருமாள் தாமும் அருளிச்செய்தார். ஆகையாலே பகவத் ஸம்பந்தம் ஸ்பர்சவேதியாயிருந்தது."

என்று, எம்பெருமானுடைய அடியவர்கள் தாழ்ந்த சாதியில் பிறந்தவர்களாயினும் உயர்ந்தவர்களாகக் கொள்ளப்படுவர் என்பதற்குப் பற்பல உதாரணங்களை எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார். இதை அடியொற்றிப் பிள்ளைலோகாசாரியரும்,

> "க்ஷத்ரியனான விச்வாமித்ரன் ப்ரஹ்மரிஷியானான். விபீஷணனை ராவணன் குலபாம்ஸநனென்றான். பெருமாள் இக்ஷ்வாகு வம்ச்யனாக நினைத்து வார்த்தை அருளிச்செய்தார். பெரியவுடையார்க்குப் பெருமாள் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணியருளினார். தர்மபுத்ரன் அசரீரி வாக்யத்தையும் ஜ்ஞாநாதிக்யத்தையும் கொண்டு ஸ்ரீவிதுரரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தார். ருஷிகள் தர்மவ்யாதன் வாசலிலே துவண்டு

1. பெரிய திருமொழி 1-1-9

> தர்மஸந்தேஹங்களை சமிப்பித்துக் கொண்டார்கள். க்ருஷ்ணன் பீஷ்மத்ரோணாதிகள் க்ருஹங்களைவிட்டு, ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே அமுது செய்தான். பெருமாள் ஸ்ரீசபரிகையாலே அமுதுசெய்தருளினார். மாறநேரிநம்பி விஷயமாகப் பெரியநம்பி உடையவர்க்கருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது."

என்று அருளிச்செய்துள்ளார்.[1]

இவ்விருவருடைய கருத்துகளை அடியொற்றியே அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் 'ம்லேச்சனும் பக்தனானால்' என்ற சூர்ணிகையில்[2] பற்பல உதாரணங்களைக் காட்டி, தாழ்குடியில் பிறந்தவர்களும் எம்பெருமானுடைய அடியவர்களாக இருப்பின் அவர்கள் உயர்குடியில் பிறந்தவர்களாலும் கௌரவிக்கத் தக்கவர்களே என்று நிலைநாட்டியுள்ளார். (இது மூன்றாம் இயலில் விரிவாகக் குறிப்பிடப்பெற்றுள்ளது.) ஆனால் வேதாந்த தேசிகர் இக்கருத்துக்கு மாறுபட்ட கருத்துக்கள் சிலவற்றைத் தமது ரஹஸ்யத்ரயஸாரம் எனும் நூலில் பிரபாவவ்யவஸ்த்தாதிகாரத்தில் தெரிவித்துள்ளார்.

> "குலந்தரும் என்றதுவும் 'பண்டைக்குலத்தைத் தவிர்ந்து' என்றதுவும் தொண்டக்குலத்தில் உத்கர்ஷம் சொன்னபடி...... ஜாதிசப்தமும் குலசப்தமும் பிந்நார்த்தமாகவும் ப்ரயுக்தமாகையாலே ஜாதி பேதியாது. குலம் பேதிக்கும். திருஸூரபியானாலும் கோத்வம் கழியாதிறே."[3]

என்று அருளிச் செய்துள்ளார். அதாவது எம்பெருமானுடைய அடியவர்களாயினும் அவர்கள் தொண்டர்கள் குலத்தைச் சார்ந்தவர்கள் என்ற பெருமை அடைவார்களே யன்றி, அவர்களுடைய பிறப்பால் ஏற்பட்ட சாதியானது மறையாது; குலம் வேறு; சாதிவேறு. அடியவர்களுக்குக் குலம் தொண்டக்குலமாக மாறலாம்; ஆனால் சாதியானது ஒருபோதும் மாறாது. கோயில்பசுவானாலும் அதற்குரிய பசு என்ற தன்மை நீங்காது என்று வேதாந்த தேசிகர் அருளிச்செய்கிறார். தொடர்ந்து, விச்வாமித்ரர் பிரம்ம ரிஷியானது, விதுரர் இல்லத்தில் கண்ணன் அமுது செய்தது, தாழ்குடியில் பிறந்தவரான விதுரருக்கு க்ஷத்ரியகுலத்தில் பிறந்தவரான தர்மபுத்திரர் ஈமக்கடன்கள் செய்தது முதலியவற்றிற்கெல்லாம் விசேஷ காரணங்கள் இருந்தன என்று

---

1. ஸ்ரீவசனபூஷணம் 227-234
2. ஆசார்ய ஹ்ருதயம் 85
3. ரஹஸ்யத்ரயஸாரம் Vol. II ப. 64

கூறி, இதிஹாஸபுராண சுலோகங்களை மேற்கோளாகக் காட்டி அக்காரணங்களை விளக்குகிறார். தனிப்பட்ட பெருமைகளை உடையவர்களாகவும், முன் யுகங்களில் இருந்தவர்களுமான அவர்களுடைய செயல்களைக் கொண்டு, இக்காலத்தில் உள்ள எம்பெருமானடியார்களுக்கும் சாதியானது மாறிவிடும் என்று கூறுவது பொருந்தாது என்று தேசிகர் உறுதிபட அருளிச்செய்கிறார். சாதியால் தாழ்ந்தவனாயினும் எம்பெருமானுடைய அடியவன் என்கின்ற காரணத்தால் உயர்ந்தவன் என்ற சிறப்பு அவனுக்கு உண்டு என்றும் தேசிகர் கூறுகின்றார்.[1]

ஆக, தாழ்குடியில் பிறந்தவர்களும் எம்பெருமானுடைய அடியவர்களாயின், அவர்கள் தோன்றிய சாதியால் ஏற்படும் தாழ்வானது மறைந்துவிடும் என்பது நாயனாருடைய கருத்தாகவும், எம்பெருமானுடைய அடியவர்களாயினும், அவர்கள் அடியவர்கள் என்ற சிறப்பை அடைவார்களேயன்றி, அவர்களுடைய சாதியானது ஒருபோதும் மறையாது என்பது தேசிகருடைய கருத்தாகவும் அமைந்துள்ளன.

"...... அத்தாணிச்சேவகத்தில் பொதுவானது நழுவும்"[2] என்பது அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் திருவாக்கு. எம்பெருமானுக்கு மிகவும் நெருங்கிய கைங்கர்யத்தைச் செய்பவனுக்குச் செய்ய வேண்டிய ஸாதாரண கர்மங்கள் உறங்குபவன் கையிலுள்ள பொருள்போலத் தன்னையுமறியாமல் நழுவிவிடும் என்பது இதன் கருத்து. எம்பெருமானுக்குத் தொண்டுசெய்வதிலேயே ஊன்றியிருப்பவன், தன்னையுமறியாமல் தான் செய்ய வேண்டிய கர்மத்தைச் செய்யாமல் விட்டுவிட்டால், அதனால் குற்றமேற்படாது என்பது நாயனாருடைய கருத்தாகும். இதையும் வேதாந்த தேசிகர் ஒப்புக் கொள்ளவில்லை. சாத்திரங்களில் எம்பெருமானுடைய கட்டளைகளாகச் சொல்லப்பட்டுள்ள கர்மங்களை ஒருபோதும் விடக்கூடாது என்றும், "ந ஆசாரம் விநா கிஞ்சித் கைங்கர்யம் உபபத்யதே" (ஆசாரங்களைச் செய்யாமல் ஒரு கைங்கர்யமும் பயனுள்ளதாகாது) என்றும் வேதாந்ததேசிகர் அருளிச்செய்துள்ளார். எம்பெருமானுடைய அடியவனுக்குக் கர்மங்களைச் செய்தே தீரவேண்டும் என்ற நிர்ப்பந்தமில்லை என்று பிள்ளைலோகாசாரியர் அருளிச்செய்துள்ளார்.[3] அக்கருத்தைப் பின்பற்றி அழகியமணவாளப்பெருமாள் நாயனார் அருளிச் செய்துள்ள கருத்தை வேதாந்ததேசிகர் விரிவாக மறுத்துள்ளார்.[4]

---

1. ரஹஸ்யத்ரயஸாரம் Vol. II பக். 66-78
2. ஆசார்ய ஹ்ருதயம் - 31
3. முமுக்ஷுப்படி - 280
4. ரஹஸ்யத்ரயஸாரம் Vol. II பக். 78-92

இதுபோல் மேலும் பற்பல விஷயங்களிலும் அழகியமணவாளப்பெருமாள் நாயனாருக்கும் வேதாந்ததேசிகருக்கும் இடையே கருத்து வேற்றுமைகள் நிலவி வந்தன என்பது அவ்விருடைய நூல்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது அறியமுடிகின்றது. இக்கருத்துவேற்றுமைகள் அனைத்தும் தனியான ஆராயச்சிக்கு உரியன. எனவே அவை இங்கு விவரிக்கப்படவில்லை.

## நாயனார் நூல்களின் தாக்கம்

ஒருசில கருத்து வேற்றுமைகள் ஆசார்யர்களுக்குள்ளே நிலவி வந்தாலும், பல்வேறு வகைகளில் நாயனாருடைய நூல்கள் பிறருக்கு வழிகாட்டியாகவும் அமைந்துள்ளன.

நாயனார், ஆழ்வாரை மேகத்தோடு ஒப்பிட்டு ஒரு சூர்ணிகை அருளிச் செய்துள்ளார். "மேகம்பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடல் சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்பது ஆசார்ய ஹ்ருதயத்தில் அமைந்துள்ள ஒரு சூர்ணிகையாகும்.[1] இதே கருத்து, வேதாந்த தேசிகர் அருளிச்செய்துள்ள குருபரம்பராஸாரம் என்ற நூலிலும் "பராங்குச பரகாலாதி ரூபத்தாலே அபிநவமாக ஒரு தசாவதாரம் பண்ணி, மேகங்கள் ஸமுத்ர ஜலத்தை வாங்கி, ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக உமிழுமாபோலே, வேதார்த்தங்களில் வேண்டும் ஸாரதமாம்சத்தை ஸர்வர்க்கும் அதிகரிக்கலான பாஷையாலே ஸங்க்ரஹித்துக் காட்டியும் . . . . " என்று இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.[2]

ஆழ்வார்கள் வழங்கியுள்ள திவ்வியப்பிரபந்தப் பாடல்கள் அருளிச்செயல் என்று வழங்கப் படுகின்றன. 'அருளிச்செயல்' என்ற சொல்லை நாயனாரே முதன்முதலில் கையாண்டுள்ளார் எனலாம். அதற்கு முன் அச்சொல் வேறு எந்த நூலிலும் இடம் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை. ஆசார்யஹ்ருதயத்தில் அருளிச் செயல் என்ற சொல்லை ஒரு சூர்ணிகையில்[1] கையாண்டுள்ள நாயனார் தம்முடைய மற்றொரு ரகசிய நூலுக்கு "அருளிச் செயல் ரகசியம்" என்றே பெயரிட்டுள்ளார். நாயனாரைப் பின்பற்றி மணவாளமாமுனிகளும் தம்முடைய உபதேசரத்தினமாலையில், பல இடங்களில் ஆழ்வாருடைய பாசுரங்களை அருளிச் செயல் என்று குறிப்பிட்டுள்ளார்.[4]

1. ஆசார்ய ஹ்ருதயம் - 72
2. ரஹஸ்யத்ரயஸாரம் Vol. II ப. 78-92
3. ஆசார்யஹ்ருதயம் - 63
4. உபதேசரத்தினமாலை 3, 26, 34, 35, 36, 46

## முடிவுரை

பற்பல அரியநூல்களை அருளிச்செய்தமையின் மூலம் நாயனால் ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யபரம்பரையில் சிறப்பானதொரு இடத்தைப் பெறுகின்றார். நாலாயிர திவ்யப்பிரபந்தப் பாசுரங்கள், இதிஹாஸபுராணங்கள் மற்றும் பற்பல நூல்களில் உள்ள பிரமாணங்கள் அனைத்தையும் தம் நெஞ்சுக்குள் தேக்கிவைத்திருந்து, அவற்றைக் கொண்டே வாக்கியங்களை அமைத்து நூல்களை அருளிச்செய்துள்ள சிறப்பு வேறு ஒருவர்க்கும் நிலமன்று. ஆங்கே, நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர் போன்ற பூர்வாசார்யர்களின் திருவுள்ளக்கருத்துகளைப் பின்பற்றி, மிக உயர்ந்த கருத்துகளைத் தமக்கே உரிய முறையில் அருளிச் செய்துள்ளார். அவருடைய திருவாக்குகளில் ஒருசில திவலைகளை மட்டுமே நாம் இங்கு குறிப்பிட்டுள்ளோம். அவருடைய நூல்களனைத்தையும் முழுமையாக ஆய்வு செய்வது என்பது ஆயிரம் நாப்படைத்த ஆதிசேஷன் ஒருவனுக்கே முடியும் என்று கூறினால் அது மிகையாகாது. அதனாற்றான் அவ்வாதிசேஷனே மணவாளமாமுனிகளாக அவதரித்து, ஆசார்யஹ்ருதயத்திற்கு வியாக்கியானம் அருளிச்செய்தான் போலும்!

## அழகியமணவாளப்பெருமாள் நாயனார் தனியன்

ஆசார்யஸ்வாந்தவக்தாரமபிராமவராபிதம்,
ஸ்ரீக்ருஷ்ணதநயம் வந்தே ஜகத்குருவராநுஜம்.

## அழகியமணவாளப்பெருமாள் நாயனார் வாழித்திருநாமம்

மன்னியசீர்மதிளரங்கம் மகிழவந்தோன் வாழியே
மார்கழியில்அவிட்டத்தில் வந்தவள்ளல் வாழியே
மன்னுபுகழாரியமனம் மொழிந்தருள்வோன்வாழியே
மேன்மைமிகுதிருப்பாவை விரித்துரைத்தான்வாழியே
தென்னுரையில் உலகாரியன் திருவடியோன் வாழியே
ஸ்ரீகிருட்ணபாதகுரு செல்வமைந்தன் வாழியே
அன்னபுகழ்முடும்பைநம்பிக்கன்புடையோன்வாழியே
அழகியமணவாளன்தன் அடியிணைகள் வாழியே.

# பின்னிணைப்பு 1

## நாயனார் அருளிய
## கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானத்தில்
## நம்மாழ்வாரையும் எம்பெருமானையும் ஒப்பிடுதல்

நம்மாழ்வார் "அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய்" என்று எம்பெருமானையே தமக்கு எல்லாமுமாகக் கொண்டார். ஆனால் மதுரகவிகளோ "அன்னையாய் அத்தனாய் என்னையாண்டிடும் தன்மையான் சடகோபன்" என்று நம்மாழ்வாரையே தமக்கு எல்லா உறவுமாகப் பற்றினார். கண்ணிநுண்சிறுத்தாம்பு எனும் பிரபந்தத்திற்கு உரையிடும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் எம்பெருமானையும் நம்மாழ்வாரையும் பல இடங்களில் ஒப்பிட்டு எம்பெருமானைவிட ஆழ்வாருக்குப் பெருமை கூறுகிறார்.

| | ஈச்வரன் | நம்மாழ்வார் |
|---|---|---|
| 1. | ஈச்வரன் துராராதனாய் இருக்கும். (பக்கம் 30) | ஆசார்யன் ஸ்வாராதனா யிருக்கும். |
| 2. | ஈச்வரனை ஆராதிக்கைக்குத் திருவிருத்தம் துடக்கமான நாலு ப்ரபந்தம் வேண்டிற்று. (30) | ஆழ்வாரை ஆராதிக்கைக்குக் (கண்ணிநுண்சிறுத்தாம்பு எனும்) இப்பத்து பாட்டுமே அமைந்தது. |
| 3. | கண்ணன் வெண்ணெய் களவு கண்டு யசோதையால் வாயது கையதாகப் பிடியுண்டு அவள் உரலோடு கட்ட, கட்டுண்டிருந்தான். (48) | ஆழ்வாரை எம்பெருமான் தன்னுடைய ஸங்கல்ப பாசத்தாலே கட்ட (அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால் என்றபடி) அவரும் கட்டுண்டிருந்தார். |
| 4. | இவன் கட்டுண்டது "பற்றியுரலிடை ஆப்புமுண்டான் பாவிகாள் உங்களுக்கு ஏச்சுக் கொலோ" என்று பிறர்க்கு ஏசுகைக்கு உறுப்பானது. | இவர் கட்டுண்டதிறே நாட்டாருடைய கட்டை அவிழ்க்கைக்கு உறுப்பாய் பரம ஸாத்விக வர்க்கத்துக்குப் போக்யமாய்த்து. |
| 5. | இவன் அவளுடைய (யசோதை) த்ரவ்யத்தைக் (வெண்ணெய்) களவு காண்கையாலே கட்டுண்டான். (50) | இவரைக் கட்டுகைக்கடி இவரைக் கட்ட, நாட்டில் உள்ளார் களவு போமென்னும் நினைவாலே. |

| | | | |
|---|---|---|---|
| 6. | சப்தாதி விஷயங்களின் போக்யதையை அறுத்துத் தன் பக்கலிலேயாக்கிக் கொள்ளும் பகவத் வைலக்ஷண்யம். (55) | 6. | பகவத்விஷயபோக்யத்திலே நின்றும் மீட்டுத் தன் பக்கலிலே யாக்கிக் கொண்டது ஆழ்வார் வைலக்ஷண்யம். |
| 7. | அவனுக்குப் பூர்த்தி ஜ்ஞான சக்த்யாதிகளாலே. (55) | 7. | இவருக்குப் பூர்த்தி ஜ்ஞான பக்த்யாதிகளாலே |
| 8. | ஜகத்தைத் தனக்காக்கும்படி யான குணங்கள் அவனது. (55) | 8. | அவன்றன்னைத் தனக்காக்கும் படியான குணங்கள் இவரது. |
| 9. | பகவத் விஷயத்தில் புறம்புள்ள இந்த்ரியங்களை மனஸ்ஸிலே அடக்கி, மனஸ்ஸைக் கொண்டு போய் சுபாச்ரயத்திலே வைத்து, பின்பு அநவரத பாவநை யுண்டாய், அதுதானே போய் ஸமாதி பர்யந்தமானாலிறே ஆனந்தம் ஸித்திப்பது. (91) | 9. | ஆழ்வார் விஷயத்தில் "நாவினால் நவிற்றின்பம் எய்தினேன்" என்கிறபடி மனஸ் ஸஹகாரம் வேண்டாதபடி வாங்மாத்ரோச்சாரணத்தாலே ஆனந்தம் ஸித்தித்தது. |
| 10. | பகவத் விஷயத்தைப் பற்றினார்க்கு ஆனந்தம் காலாந்தரபாவி. (91) | 10. | ஆழ்வாரைப் பற்றினார்க்கு "எய்தினேன்" என்கிறபடியே உடனே எய்தலாம். |
| 11. | ஈச்வரன் திருவடிகள் உலகமளந்த பொன்னடியாய் ஊர்ப் பொதுவாய் எல்லோர் தலையிலும் இருக்கும். (92) | 11. | ஆழ்வார் திருவடிகள் "த்ரைவித்ய வ்ருத்தஜந மூர்த்த" விபூஷணமாகும். |
| 12. | பகவத் விஷயத்தை ஆச்ரயிக்கு மிடத்தில் "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு என்று நாடோறும் ஏக சிந்தையனாய்" என்று வர்த்தமான நிர்த்தேசம் பண்ண வேண்டிற்று. (92) | 12. | ஆழ்வாரை ஆச்ரயிக்குமிடத்தில் அப்படியன்றிக்கே ஸக்ருத் ஸமாச்ரயணமமைந்தது. |

| | |
|---|---|
| 13. பகவத் விஷயத்தை "உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே" என்று அபரோக்ஷித்தே ஆச்ரயிக்க வேண்டும். (93) | 13. ஆழ்வார் திருவடிகளை எங்கேனுமிருந்து ஆச்ரயிக்கலாம். |
| 14. ஈச்வரன் திருவடிகளைப் பற்ற ஒரு புருஷகாரம் வேண்டும். (93) | 14. ஆழ்வார் திருவடிகளைப் பற்ற நடுவொரு புருஷகாரம் வேண்டா |
| 15. ஈச்வரன் நிரதிசயக்ருபாவானாயிருந்தானேயாகிலும் ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டன் ஆகையாலே தோஷதர்சநத்தாலே உபேக்ஷிப்பதுமொரு புடையுண்டு. (167) | 15. ஆழ்வார் அப்படியின்றிக்கே பற்றினாரை இகழாதவராயிற்று. |
| 16. தான்தோன்றியானபிரான். (169) | 16. அபிஜாதரான ஆழ்வார். |
| 17. திரிவிக்ரமாவதாரத்தில் எம்பெருமானுடைய சக்தி ப்ரபாவம். (171) | 17. இங்கு ஆழ்வாருடைய க்ருபா ப்ரபாவம். |
| 18. அங்கு ப்ரயோஜநாந்தரபரர் வாழ்ந்தபடி. (171) | 18. இங்கு அநந்ய ப்ரயோஜநர் வாழ்ந்தபடி. |
| 19. அங்கு க்ருத்ரிம வ்யாபாரம். (171) | 19. இங்கு அக்ருத்ரிம வ்யாபாரம். |
| 20. பகவத் க்ருபை வேண்டுவது ப்ராப்தி ஸித்திக்குமன்று. (178) | 20. அந்த ப்ராப்தி உண்டாவது ஜ்ஞானத் தாலே; ஜ்ஞான ஸித்தி ஆழ்வாராலே. |
| 21. ப்ராப்தி ஜ்ஞான ஸாபேக்ஷமாயிருக்கும் (178) | 21. ஜ்ஞானம் ப்ராப்தி ஸாபேக்ஷமாயிராது. |
| 22. ஸங்கல்ப ஜத்தை அவன் போக்கும். (179) | 22. கர்மஜத்தை இவர் போக்கும். |
| 23. ஈச்வரன் சொன்ன கீதை வரைமுறுகலாயிருக்கும். (185) | 23. ஆழ்வார் பாடல்கள் செவிக்கு இனிய செஞ்சொல்லா யிருக்கும். |

| | |
|---|---|
| 24. ஈச்வரன் நெறியெல்லா மெடுத்துப் பாடிய விடத்திலும் அகப்பட்டாரும் அகப்படாதாரு மாயிற்று. (186) | 24. இவரருள் அப்படியின்றியிலே "ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல் அவனுடைய பேரும் தார் களுமே பிதற்றப்" பண்ணிற்றாயிற்று. |
| 25. தான்தோன்றியான தன்னுடைய ஜ்ஞானங் கொண்டு சொன்னது அவனதருள். (186) | 25. "மயர்வற மதிநலம் அருளினன்" என்றபடி அவனுடைய அருள் கொண்டு பாடின தன்னேற்றம் உண்டு இவரருளுக்கு. |
| 26. அவனுடைய அருள் ஆழ்வா ரளவிலே சுவறி விட்டது. (187) | 26. "அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே" என்னும்படி இவருடைய அருள் ஸாம்ராஜ்யம் பண்ணா நின்றது. |
| 27. ஈச்வரனுடைய அருளைக் கொண்டாடுமவர்கள் அடியவர்கள். | 27. இவரருள் லோகமடங்கக் கொண்டாடும்படி தேஜிஷ்டமாயிற்று. |
| 28. ஸ்ரீ கீதை சொன்ன க்ருஷ்ண னென்றால் கை எடுப்பாரு மில்லை. (187) | 28. திருவாய்மொழி பாடின ஆழ்வா ருடைய ஊரின் பேரைக் கேட்க இருந்ததே குடியாகக் கையெடா நின்றது. |
| 29. அவனுடைய அருள் சாஸ்த்ர கம்யம். (187) | 29. இவரருள் ப்ரத்யக்ஷஸித்தம் |
| 30. அவன் தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளு மித்தனை. (214) | 30. இவர் கருந்தரையிலே திருத்துமவர். |
| 31. அவன் அதிகார நிஷ்பத்தி பிறந்தால் ப்ராப்ய விரோதிகளைப் போக்கிப் பணி கொள்ளும். (214) | 31. அவ்வதிகார நிஷ்பத்தி தன்னையும் கொடுத்தாய்த்து இவர் அடிமை கொண்டது. |

32. புருஷார்த்த நிஷ்பத்தி ஈச்வரனாலே. (214)

33. பகவத் கிஞ்சித்காரத்துக்கு த்வாரம் உண்டு. (217)

34. எம்பெருமானுக்கு எல்லோரோடும் ஸ்ம்பந்தமுண்டாகையாலே எல்லோரையும் ஸ்நேஹிக்கும். (229)

35. அவனுக்கு எல்லோரோடும் ஸ்வரூப நிபந்தந ஸம்பந்தம். (170)

36. ஈச்வரன் "மாமேகம் சரணம் வ்ரஜ – மோக்ஷயிஷ்யாமி" என்று கூறினான். (170)

37. ஈச்வரன் பாபத்தில் நின்றும் விடுவித்தானேயொழிய பாபத்தைப் பொடி பண்ண வில்லை. (170)

38. நிரவதிக வத்ஸலனான எம்பெருமானும் அர்ஜுனன் சரணமடைந்த பின்பிறே உபதேசித்தது. (211)

39. பகவத் விஷயத்தை ஸ்மரித்தல் ஸங்கீர்த்தனம் பண்ணுமவர்களுக்கு "பாதேயம் புண்டரீகாக்ஷ நாம ஸங்கீர்த்தநாம்ருதம்" என்று சொல்லுகிறபடியே ரஸிக்கக் கடவதாயிருக்கும். (44)

32. அதிகார நிஷ்பத்தி ஆசார்யனாலே.

33. ஆசார்ய கிஞ்சித்காரத்துக்கு த்வாரம் இல்லை.

34. இவர் "பரமனைப் பயிலும் திருவுடையார் யவரேலுமவர் கண்டீர் – என்னை யாளும் பரமர்" என்று வைராக்ய பூர்வமான ஸ்நேகத்தை உடையவர்.

35. இவரது உபாதி நிபந்தன ஸம்பந்தம்.

36. ஆழ்வார் தாமே என்னை ஸ்வீகரித்து என் பாப பந்தத்தையும் பாற்றியருளினார்.

37. ஆழ்வார் பாவங்களைப் பாறுபாறாம்படி பண்ணினார். எந்தத் தூற்றிலே புக்கதென்று தேடும்படி பாற்றினார்.

38. இவர் அப்படியின்றிக்கே துர்க்கதியே பற்றாசாகவிறே உபதேசித்தது.

39. அந்த பகவத் போக்யதையில் விஞ்சியிருந்து ஆழ்வாருடைய போக்யதை. அதுக்குத் தானுமுட்பட "உருவமும் ஆருயிருமுடனே யுண்டான்" என்னும்படி போக்ய பூதரானவரிறே இவர்.

# பின்னிணைப்பு 2

## நம்மாழ்வாரையும் மதுரகவிகளையும் ஒப்பிடுதல்

பகவத் விஷயமே புருஷார்த்தம் என்றீடுபட்ட நம்மாழ்வாரையும், நம்மாழ்வாரே புருஷார்த்தம் என்று பற்றிய மதுரகவிகளையும் ஒப்பிடுகிறார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.

| நம்மாழ்வார் | மதுரகவிகள் |
|---|---|
| 1. நம்மாழ்வார் பகவத் விஷயமே புருஷார்த்த ஸாதநங்கள் என்று பூர்ணோபதேசம் பண்ணினவர். (25) | 1. ஸ்ரீமதுரகவிகள் ஆழ்வாரே புருஷார்த்த பூதராய் அவரைப் பெறுகைக்கு ஸாதநமும் அவர் திருவடிகளே என்றிருப்பவர். |
| 2. ஆழ்வார் ப்ரதம பதத்திலே நின்றவர். (25) | 2. இவர் சரம பர்வத்திலே நின்றவர். |
| 3. இவர் ஸங்க்ரஹத்திலே அவதாரணத்திலே நிஷ்டர். (25) | 3. இவர் அதினுடைய விவரண நிஷ்டர். |
| 4. ஆழ்வாருக்கு அநந்ய போகத்வத்துக்கு பிராட்டியும், கைங்கர்ய த்வரைக்கும் பாரதந்த்ரியத்திற்கும் இளையபெருமாளும், முமுக்ஷுக்களின் துர்க்கதி கண்டு பரோபதேசம் பண்ணுகைக்கு ப்ரஹ்லாதனும் நிதர்சனமாவார்கள். (26) | 4. இவருக்குத் ததீய பாரதந்த்ரியத்திற்கு பெரியாழ்வார் திருமகளாரும், நித்யராய்க் போந்தாரில் ஸ்ரீசத்ருக்நாழ்வானும், முமுக்ஷுக்களில் பெரிய முதலியாரும் நிதர்சனமாவார்கள். |
| 5. "அவன் சின்னமும் திருநாமமும் இவள் வாயனகள் திருந்தவே" என்று எம்பெருமானுடைய குணங்கள் இவர் வாக்காலே திருந்தின. (26) | 5. ஆழ்வாருடைய குணங்களும் இவர் வாக்காலே திருந்தின. |

| | |
|---|---|
| 6. ஆழ்வாரருளிய திருவாய்மொழி பகவத்குணைக ப்ரதிபாதகமாயிருக்கும். (27) | 6. மதுரகவிகளருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பு ஆழ்வாருடைய திவ்ய குணங்களையே ப்ரதிபாதிக்கும்படியாயிருக்கும். |
| 7. திருவாய்மொழி வேதஸாரம். (27) | 7. கண்ணிநுண் சிறுத்தாம்பு திருவாய்மொழியின் சாரம். |
| 8. யசோதை கண்ணனை வெண்ணெய் களவு கண்டானென்று உரலோடு சேர்த்துக் கட்ட அவனும் அக்கட்டை அவிழ்க்க மாட்டாதே அழுது ஏங்கி இருந்த நிலையை போக்யமாக நினைத்து ஆழ்வார் "எத்திறம்" என்றீடுபட்டார். | 8. நம்மாழ்வாரை எம்பெருமானும் லோகோபகாரார்த்தமாக இவரழுவது, அலற்றுவது, ஆண்பெண்ணாக மடலெடுப்பது தூதுவிடுவதாம்படி தன் ஸங்கல்ப பாசத்தாலே கட்ட அவரும் அதை அவிழ்க்க மாட்டாதே, "அறியா மாமாயத்தடியேனை வைத்தாயால்" என்னும்படி கட்டுண்டிருந்த இருப்பு இவருக்கு(மதுரகவிகளுக்கு) போக்யமாக இருந்தது. |
| 9. இவர் பகவத் விஷயத்தில் ஆசார்ய ப்ரதிபத்தி பண்ணிப் போந்தார். (89) | 9. இவர் ஆசார்ய விஷயத்தில் பகவத் ப்ரதிபத்தி பண்ணிப் போருகிறவர். |
| 10. ஆழ்வார் எம்பெருமானுடைய ஸௌசீல்ய குணத்திலே ஈடுபட்டவர். (90) | 10. இவர் ஆழ்வாருடைய போக்யதையிலே நின்றவர். |
| 11. ஈச்வரனுக்கு சேஷபூதராயிருந்து வைத்து அவர்அலமாரா நின்றார். (112) | 11. இவர் ஆழ்வார் தமக்கே சேஷபூதராயிருந்து வைத்து இந் நன்மையைப் பெற்றார். |
| 12. ஆழ்வார் எம்பெருமானருள் கொண்டு ஏற்கும் பெரும் புகழாயிரத்தைப் பாடிற்று. (185) | 12. "தன் புகழ் ஏத்த அருளினான்" என்று ஆழ்வாரருள் கொண்டு அவருடைய புகழை ஏத்தினார். |

| | |
|---|---|
| **13.** இவர் பகவச் சேஷத்வத்தையும் பகவத் ப்ரேமத்தையும் பகவச்சேஷ வ்ருத்தியையும் உபதேசித்தார். (201) | **13.** இவர் ஆழ்வாருக்கு சேஷமாய் அவர்க்கே ஸ்நிக்தராய் அவருக்கே கிஞ்சித் கரிக்கத் தேடுகிறார். |
| **14.** இவர் புறப் பொருளை விட்டு உட்பொருளைக் கொடுத்தார். | **14.** இவர் உட்பொருளான பகவத் விஷயந்தன்னைப் புறப் பொருளாக்கி அதிலும் உட்பொருளான ஆழ்வார் திருவடிகளிலே சேஷபூதராய் ப்ரேம பூர்வகமான கைங்கர்யத்திலே இழிகிறார். |
| **15.** இவருக்கு பகவத் ப்ரேமம் ஸ்வரூப ப்ரயுக்தமாய் "ஆராத காதல் குருகூர்ச் சடகோபன்" என்று நிரூபகம். | **15.** இவருக்கும் "அன்பனாய் மதுரகவி" என்று ஆழ்வாருக்கு நல்லரானவரென்று நிரூபகம். |
| **16.** இவர் ப்ரணவ நமஸ்ஸுக்கள் இரண்டிலும் நிஷ்டராய்ப் போருவர். | **16.** இவர் மத்யம பதத்திலே நிஷ்டராயிருப்பர். |
| **17.** இவர் தத் விஷயத்தைக் கவி பாடுகையாலே "என்னாவிலின் கவி" என்றார். | **17.** இவரும் ஆழ்வாரைக் கவி பாடுகையால் தம்மை "மதுரகவி" என்கிறார். |

# பின்னிணைப்பு 3

## நம்மாழ்வாருடைய பாசுரங்களையும் மதுரகவியாழ்வாருடைய பாசுரங்களையும் ஒப்பிடுதல்

நம்மாழ்வாரைப்பற்றி மதுரகவியாழ்வார் அருளிச் செய்த பாசுரங்களையும், எம்பெருமானைப் பற்றி நம்மாழ்வார் அருளிச்செய்த பாசுரங்களையும் அழகியமணவாளப் பெருமாள் நாயனார் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

| கண்ணிநுண்சிறுத்தாம்பு | திருவாய்மொழி |
|---|---|
| 1. என் நாவுக்கே(1) (ப.56) | 1. என் நெஞ்சினால் நோக்கிக் காணீர். (5–5–2) |
| 2. நாவினால் நவிற்றின்பம் எய்தினேன்(2) (ப.91) | 2. அடியையடைந்துள்ளம் தேறி ஈறிலின்பத்திருவெள்ளம் யான் மூழ்கினன். (2–6–8) |
| 3. உன் பொன்னடி மேவினேன்(2) (ப.93) | 3. உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே. (6–10–10) |
| 4. குருகூர் நம்பி (2) (ப.95) | 4. ஏற்கும் பெரும்புகழ் வானவரீசன் கண்ணன் தனக்கு ஏற்கும் பெரும் புகழ் வண்குருகூர்ச் சடகோபன். (3–9–11) |
| 5. தேவபிரானுடைக்கரிய கோலத் திருவுருக் காண்பன்(3) (ப.108) | 5. அமரர்களாதிமுதல்வன் கருகிய நீலநல்மேனிவண்ணன் பூமகளார் தனிக் கேள்வன் ஒரு கதியின் சுவை தந்திட்டொழிவிலன் என்னோடுடனே. (1–9–3) |
| 6. நன்மையால் மிக்க (4) (ப.121) | 6. நலத்தார் மிக்கார். (5–8–3) |
| 7. என்னையாண்டிடும் தன்மையான் சடகோபன்(4) (ப.128) | 7. அவனடியார் சிறுமாமனிசராய் என்னையாண்டார் (8–10–3) |

| | |
|---|---|
| 8. நன் பொருள்(5) (ப.139) | 8. எண்பெருக்கந்நலத்தொண் பொருள். (1–2–10) |
| 9. மடவார்(5) (ப.143) | 9. சதிரிளமடவார். (2–10–2) |
| 10. செம்பொன் மாடத் திருக்குருகூர்(5) (ப.145) | 10. துவளில்மாமணிமாடமோங்கு துலைவில்லி மங்கலம். (6–5–1) |
| 11. நம்பிக்கன்பனாயடியேன்(5) (ப.146) | 11. யானே நீ என்னுடைமையும் நீயே. (2–9–9) |
| 12. எம்பிரான்(6) (ப.155) | 12. எம்பிரானை எந்தை தந்தை தந்தைக்கும் தம்பிரானை(1–10–3) |
| 13. கண்டு கொண்டென்னைக் காரிமாறப் பிரான்(7) (ப.169) | 13. என்னைக் கொண்டென் பாவந் தன்மையும் பாறக் கைத்து எமரேழெழு பிறப்பும் மேவும் தன்மய மாக்கினான். (2–7–4) |
| 14. அருள் கொண்டாடுமடியவர்(8) (ப.182) | 14. அருள் பெறுவாரடியார். (10–6–1) |
| 15. பாடினான்(8) (ப.185) | 15. வேட்கையால் சொன்ன பாடல். (4–10–11) |
| 16. மிக்க வேதியர் (9) (ப.197) | 16. மிக்கார் வேத விமலர் (2–6–8) |
| 17. மெய்கழல் (10) (ப.217) | 17. மெய்கழலேயேத்த முயல் (பெரிய திருவந்தாதி 87) |
| 18. அன்பனாய் மதுரகவி(11) (ப.230) | 18. ஆராத காதல் குருகூர்ச் சடகோபன் (2–1–11) |
| 21. மதுரகவி(11) (ப.230) | 21. என்னாவிலின் கவி (3–9–1) |

# பின்னிணைப்பு - 4

## நாயனார் உரைகளில் இடம்பெற்றுள்ள ஐதிஹ்யங்கள்

### திருப்பாவை

1. "பிஷுக்குகள் வாசல் ஆர்த்தர் கட்டணமாகக் கிடக்குமாபோலே ஸ்ரீநந்தகோபர்வாசல் புண்பட்ட பெண்கள் கட்டணமாய்க் கிடக்குமாய்க் கொள்ளீர்" என்று பட்டர். (ப.40)

2. பட்டர் ஸ்ரீபாதத்தைக் கழுவித் தீர்த்தம் கொள்ளும் ஆண்டாள். (ப.41)

3. எம்பெருமானாரும் ஸ்ரீவைஷ்ணவர்களும் எழுந்தருளா நிற்க, பெரியநம்பி தாம் தண்டனிட்டுக் கிடந்தார். "நம்மை இங்ஙனே செய்தருளிற்று என்?" என்று கேட்க, "நான் ஆளவந்தார் ரெழுந்தருளுகிறாரென்றிருந்தேன்" என்று அருளிச் செய்தார். (ப.41)

4. "பிள்ளைக்குத் தாய் வழியாகாதே கண்" என்று பிள்ளையுறங்காவில்லி தாசர் வார்த்தை. (ப.44)

5. "சிங்கக்குருகு" என்று ஆழ்வான் வார்த்தை. (ப.44)

6. ஆழ்வார் "எங்கள் பூர்வர்கள் தேவதாந்தர பஜனம் பண்ணாமையாலே" என்றானாம். (ப. )

7. "ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் பொழுது ஸம்ஸாரிகளுடைய இழவுக்குத் திருவுள்ளம் நொந்திருக்கும்" என்று பட்டரருளிச் செய்ய, சிலர் அத்தைக் கேட்டு "அவாப்த ஸமஸ்த காமனாய் நிரதிசய ஆனந்த யுக்தனாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கு ஒரிழவுண்டோ திருவுள்ளத்தில்?" என்ன, "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்" என்கிறது குணப்ரகரணமோ, தோஷப்ரகரணமோ? என்றருளிச் செய்தார் (ப.90)

8. மாறனேரியிலே "ராமாநுஜ தாசன்" என்பாரொருத்தர் "அவன் வருகிறபடியைக் கண்டும் கடக்கப் போவென்பதே! நாலடி விலங்கிப் போதல் இல்லையாகில் ஒரு முழுக்கிட்டுக் கொள்ளுதல் செய்யவன்றோ வடுப்பது" என்ன; சண்டாளனே யாகிலும் அவன் ஆர்த்தனான ஸமயத்தில் அல்லாதார் விலங்கிப் போவார்: த்விஜனாகில் அவன் விலங்குவான்" என்று விதி விசேஷித்த அம்சம்

அழிந்ததே" என்று அவர்கள் சொல்ல "கெடுவிகாள் விதிபூர்வகமாயோ க்ருபையிருப்பது?" என்று அருளிச் செய்தார் (ப.90)

9. "திருநாமம் சொல்லுகைக்கு அதிகாரி ஸம்பத்தி வேண்டாவோ?" என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்டருள, "யோக்யனாகில் இருந்தபடி சொல்லுகிறான்: அயோக்யனாகில் யோக்யதை ஸம்பாதிக்க வேண்டா" என்று அருளிச் செய்தார். எங்ஙனே யென்னில்: – மேலுள்ள நன்மைகளைத் தரக் கடவதாக விச்வசித்தவனுக்கு கீழுள்ள விரோதி களையும் போக்க மாட்டாதோ" என்று அருளிச் செய்தார்; (ப. 92)

10. தேவப் பிள்ளைக்கு "லோகஹிதார்த்தமாகக் காண் நீ போகிறது" என்று அருளிச் செய்த வார்த்தை. (ப. 92)

11. "த்ரவந்தி தைத்யா: ப்ரமணந்தி தேவதா:" என்கிறபடியே பகவத் ஸமாச்ரயணம் பண்ணுவார்க்கு தேவதைகள் வந்து குடநீர் வார்க்கக் கடவதிறே! அவைதான் ஸ்ரீவைஷ்ணவர்களை அநுவர்த்தியா தொழிவதென்? என்று கேளாய்" என்று ஆழ்வான். (ப. 107)

12. நாச்சியார் விழிவிழிக்க வொண்ணாதென்றாப் போலே (ப. 110)

13. "கம்ஸபயத்திற்கு அஞ்சி ஒளிக்க வந்து சேர்ந்தாரைச் சொல்லுமாபோலே சொன்னபடி பாரீர்" என்று பட்டர். (ப. 127)

14. "பணைகளிலே தாவினவாறே உடை நழுவ, தழும்பைக் கண்டு இடைச்சிகள் சிரித்தார்கள்: அத்தழும்பு தோன்றாமைக்கிறே நம்பெருமாள் கணையம் மேல்சாத்து சாத்துகிறது" என்று ஜீயர். (ப. 128)

15. பட்டர் "திருவாய்ப்பாடியிலுள்ளாரில் சிந்தயந்தியோபாதி ஸம்ச்லேஷத்தில் புதியாரில்லை" என்றருளிச் செய்வர் (ப. 146)

16. ஆட்கொண்ட வில்லி ஜீயர் எழுந்தருளா நிற்கச் செய்தே, நஞ்சீயர் தெண்டனிட்டு நிற்க, "பகவத் விஷயத்தில் ருசி நமக்கு மெய்யாகப் பிறந்ததில்லை காணும்" என்றருளிச் செய்ய, உம்மைப் போலே ஆசார்யவான்கள் உண்டோ? இங்ஙனே அருளிச் செய்வானென்? என்ன: "பகவத் விஷயத்திலே ருசியுண்டென்றிருக்கையாவது –

பாகவதர்களைக் கண்டால் உகக்குமன்று காணும்" என்றருளிச் செய்தார். (ப. 160)

17. "முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறே" என்று பட்டர். (ப.

18. ஆழ்வான் "ஹிதாம்சத்துக்கு ஒரு வைஷ்ணவனுடைய க்ருஹ யாத்திரையை அநுஸந்திக்க அமையும் என்றாற் போலே. (ப. 185)

19. பட்டர்க்குச் சிலர், "தொண்டனூர் நம்பி திருவடி சார்ந்தார்" என்று விண்ணப்பம் செய்ய, அவர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமை செய்து போந்தபடிக்கு, "திருநாட்டுக்கு நடந்தார்" என்று சொல்ல வேண்டாவோ?" என்றருளிச் செய்தார். நம்பியேறுதிருவுடையார் தாஸரிடையாட்டமாகவும் நஞ்சீயர் இப்படி அருளிச் செய்தார். (ப. 187)

20. "தாமஸ ப்ரக்ருதிகளை சொல்லுகிறது" என்று எம்பார். தம: ப்ரசுரர் உணர்ந்தார்கள் என்று சொல்லியோ எழுப்புவது என்று அவன் நினைத்திருக்கும் என்று, ஸத்வ நிஷ்டரான ஸந்யாசிகளைச் சொல்லுகிறது என்று திருமலை நம்பி. (ப. 254)

21. நஞ்சீயர், பிள்ளைக்கு "ரஸவாதம் கைப்படவனிருந்தவிடமெல்லாம் பொன்னாமாபோலே, ப்ரமேயல் கைப்பட்டவனுக்குச் சொல்லிற்றெல்லாம் வார்த்தையாம்" என்றார். (ப. 281)

22. பட்டர் நஞ்சீயரை, "பெரிய பெருமாள் தஞ்சமென்றிருக்குமவரைத் தஞ்சமென்றிரும்" என்றருளிச் செய்தார். (ப. 282)

23. "வேதாந்தங்களிலே – ப்ரஹ்மாதிகளும் கூட, ஏழு ஜந்மம் ஜநித்து அரிய ஸாதநாநுஷ்டாநங்களைப் பண்ணி பின்பு பகவத் ப்ராப்திரூப புருஷார்த்தம் பெற்றார்களாகச் சொல்லா நின்றது: இவ்வருகு எத்தனையேனும் கீழாயிருப்பார் சிலர் சரீராவஸாந காலத்திலே மோக்ஷம் கிடைக்குமென்று பொதிசோறு கட்டிக் கொண்டிரா நின்றார்கள்: இவையிரண்டும் சேர விழுந்தபடி எங்ஙனே?" என்று பட்டரைக் கேட்க, "ஒரு குறையில்லை" என்றருளிச் செய்தார். (ப. 384)

24. "ஸிம்ஹம் ஆனையோடே பொரா நின்றாலும் குட்டிக்கு முலை கொடுக்குமா போலே" என்று பட்டர். (ப. 387)

25. ஆச்சான் "அகதிம் சரணாகதிம்" என்று விண்ணப்பம் செய்ய, "நம்மிராநுசனை உடையையாயிருந்து வைத்து நம் முன்னே இப்படிச் சொல்லப் பெறாய்" என்று அழகர். (ப. 398)

26. "அவளுக்கு முலைசுரவா நின்றதாகில் இவன் அழுது முலையுண்ணா நின்றானாகில், உமக்குச் சேதமென்?" என்று பட்டர். (ப. 434)

27. வெளித் திருமுற்றத்திலே ப்ரஸாதம் அவ்வளவிலே வர, "யாம் பெறு சம்மானம் வந்தது" என்றார் பட்டர். (ப.

28. கன்றிழந்த தலைநாகு, தோல் கன்றை மடுக்க அதுக்கிரங்குமா போலே, ஸ்நேஹிகள் சொன்ன இப்பாசுரங் கொண்டு புகவே, அதில்லாத நமக்குப் பலிக்கும்" என்று பட்டர். (ப. 535)

## அமலனாதிபிரான்

1. பிள்ளை திருநறையூரரையரைச் சிலர், "பெரிய பெருமாளை அநுபவிக்க விழிந்தவர் திருவேங்கடமுடையான் பாடே போவானென்னென்ன: ஆற்றிலே அமிழ்ந்துகிறவன் ஒரு காலைத் தரையிலே ஊன்றினால் பிழைக்கலாமோ வென்று கால் தாழ்க்குமாபோலே, இவரும் பெரிய பெருமாளழகிலே அழுந்துகிறவராகையாலே திருமலையிலே கால் தாழ்ந்தார்; அது மடுவாகிறதறிகிலர்: வேறே சிலர், "பெரிய பெருமாளைப் பாடா நிற்கத் திருமலையிலே போவானென்" என்று அவரைக் கேட்க, "ஒருவனைக் கவி பாடும்போது அவனுடைய வரத்துச் சொல்லியிறே கவிபாடுவது; பரமபதத்திலே நின்றும் ஸ்ரீமதுரையிலே தங்கி திருவாய்ப்பாடிக்கு வந்தாப் போலே ஸ்ரீவைகுண்டத்தினின்றும் திருமலையிலே தங்கி காண வந்தது" என்றருளிச் செய்தார். (ப. 24)

2. பிள்ளையழகிய மணவாளரையர், பெருமாள் திருவடிகளிலே புக்கு "நாயன்றே: அடியேன் திருவேங்கடமுடையானைத் திருவடித் தொழுது வரவேணுமென்று நினையா நின்றேன்" என்று விண்ணப்பஞ் செய்ய, "வாரீர். அமலனாதிபிரானை ஒருகால் இசை சொல்லிக் காணீர்" என்று திருவுள்ளமாக, பிள்ளையும் ஒருகால் இசையை விண்ணப்பம் செய்யக் கேட்டருளி, இனிப் போகிலும் போம், இருக்கிலுமிருமென்று திருவுள்ளமாயினார். (ப. 50)

3. பட்டர் திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருக்கிற காலத்திலே ஒரு விசேஷ திவசத்தினன்று கோளரியாழ்வானைப் பார்த்து தெற்காழ்வார் சொன்ன வார்த்தையை ஸ்மரிப்பது. திருக்கோட்டியூரிலே எழுந்தருளியிருந்த அனந்தாழ்வான், பட்டரை, "ஸ்ரீவைகுண்டநாதன் த்விபுஜனோ, சதுர்ப்புஜனோ?" என்று கேட்க, "இருபடியாயிருக்கவுமடுக்கும்" என்ன; "இரண்டிலும் அழகிது ஏது" என்ன, த்விபுஜனாகில் பெரியபெருமாளைப் போலேயிருக்கிறது. சதுர்ப்புஜனாகில் பெருமாளை போலேயிருக்கிறதென்றார். (ப. 83)

## கண்ணிநுண்சிறுத்தாம்பு

1. இங்கே ஜீயர் வார்த்தையை அநுஸந்திப்பது. (ஜீயர் வார்த்தை என்பது நஞ்சீயர் விஷயமான வார்த்தை. அதாவது நஞ்சீயர் ஆச்ரமஸ்வீகாரம் பண்ணினவநந்தரம் அநந்தாழ்வான் கண்டு "வேர்த்தபோது குளித்து பசித்தபோது உண்டு பட்டர் திருவடிகளே சரணமென்று எங்கேயிருந்தாலும் ப்ராப்திக்குக் கண்ணழிவுண்டோ? ஆயிருக்க, கைங்கர்யத்துக்கு விரோதியாயிருப்பதொரு வேஷத்தைக் கொண்டு என் செய்தீரானீர்?" என்றருளிச் செய்தாராம்.) (ப. 93)

2. பொலிந்து நின்ற பிரான் பக்கலிலும் ஒருகால் போய் வாரீர் என்று உபதேசித்தாரென்று பிள்ளையருளிச் செய்வர்
(ப. 127)

# பின்னிணைப்பு - 5

## நாயனார் நூல்களில் இடம்பெற்றுள்ள உவமைகள்

**திருப்பாவை** **பக்கம்**

1. ஒரு மேகத்திலே இரண்டு தாமரை பூத்தாற் போலே 45
2. இராத்திருநாள் சேவித்தார் கண் போலே 45
3. இந்தளத்தில் தாமரை போலே 69
4. உண்ணப்புக்கு வாயை மறந்தாரைப் போலே 71
5. குடில் கட்டிப் பயிர் நோக்கும் க்ருஷிகனைப் போலே 71
6. பர்த்தாவின் அஸந்நிதியிலே குளிக்கு இறாய்க்கும் பார்யையைப் போலே 72
7. பனிப்பட்டுச் சாய்ந்த மூங்கில் ஆதித்யகிரணம் பட்டவாறே வளருமாபோலே 90
8. ஊறெண்ணெய் விட்டாற் போலே 93
9. முத்துக்கு முழுகுவார் கடலுக்கு அஞ்சாதாப்போலே 93
10. கர்ப்பிணிகள் சுரமேறுமாப்போலே 110
11. கருவடைந்த பயிர் போலே 110
12. நோவு மிக்கதனையும் நாலைந்து குடிநீரெழக் குடிக்குமாபோலே 125
13. அந்தகாரத்தில் தீபம் போலே 128
14. நாழிகை வட்டில் நீர் நிரம்பினவாறே கீழே விழுமாபோலே 144
15. க்ருஷிகர் விரையை நீரிலே சேர்க்குமாபோலே 147
16. கர்ப்பிணிகள் பிள்ளைக்கு நோவு வராதபடி மெள்ள எழுந்திருக்குமா போலே 147
17. ப்ரஹ்லாதாழ்வான் தான் மலையில் நின்றும் விழாநிற்கச் செய்தேயும் ''பார்த்தருள், பார்த்தருள்'' என்று ஸர்வேச்வரனைப் பிடித்துக் கொண்டாற் போலே 147
18. ஒரு நீர் பாய்ச்சினாற் போலே 147
19. மறுநீர் பாய்ந்தாற் போலே 147
20. மரக்கலமேறுமவன் மீண்டு வருமளவும் ஜீவனமேற்றிக் கொண்டு போமா போலே 160

58. நம்பெருமாள் கோயிலாழ்வாரில் நின்றும் புறப்பட்டருளி பெரிய திருமண்டபத்திலே சேர பாண்டியனிலே நாய்ச்சிமாரோடே கூட இருந்து நினைப்பிட்டது என்றால் தப்பாதாப் போலே — 403

59. புலி கிடந்த தூற்றிலே சென்று தட்டி எழுப்பிக் கொல்லுவாரைப்போலே — 417

60. இடியேறுண்டிடச் சுற்றும் வேமா போலே — 417

61. அரணுக்கு அரணிடுவாரைப் போலே — 417

62. நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்காதாற் போலே — 433

63. ஸிம்ஹத்தோடே நரி எதிரிடுமா போலே — 436

64. பிச்சன் கையில் மாணிக்கம் போலே — 486

65. நிதாநஜ்ஞனான பிஷக்கின் முன்பு வ்யாதிக்ரஸ்தன் தான் பண்ணின அபத்யங்களைச் சொல்லி அந்த வியாதியைத் தீர்த்துக் கொள்ளுமாபோலே — 486

66. பெருமாள் கடலைத் தூர்த்து வாரை சேனையை நடத்தினாற் போலே — 494

67. மாணிக்கத்தையிட்டுத் தவிடு கொள்வாரைப்போலே — 512

68. பாற்கடலைக் கடைந்து பிராட்டியைப் பெற்றாற் போலே — 536

69. மாதாவின் முன்பு ப்ரஜைகள் செய்த குற்றம் பிதாவுக்குத் தோற்றாதாப்போலே — 536

70. பெண்களோட்டைக் கலவிக்கு விரோதியான கேசியைக் கொன்றாற் போலே — 537

71. யவர்க்குஞ் சிந்தைக்கும் கோசரமில்லாத வஸ்து பெற்றம் மேய்த்துண்ணும் இடைச் சேரியிலே வந்து பிறந்து எளியனானாற் போலே — 540

72. உத்தம வர்ணத்திலே பிறப்புடைய ஆண்டாள் ஆயர் சிறுமியர் திரளிலே ஒருத்தியாய் அந்வயித்தாற் போலே — 540

73. ஜலக்ஷயத்தில் பத்மம் போலே — 541

## அமலனாதிபிரான்

38. பாலும் பழமும் கண்ட சர்க்கரையுமான ரஸவஸ்துக்களைச் சேர்த்து புஜிப்பாரைப் போலே 107
39. கலமிருக்க வெண்ணெய் குடிபோனாப் போலே 112

## கண்ணிநுண் சிறுத்தாம்பு

1. பெரிய திருநாளிலும் ஸந்த்யாவந்தனம் முட்டாமல் நடத்துவாரைப் போலே 89
2. நீர் வெள்ளத்திலே நெய்தல் பாரித்தாப் போலே 106
3. ஆனைக்கு உதவ வந்தாற் போலே 108
4. ஒரு பார்வை விசேஷம் பார்ப்பாரைப் போலே 119
5. பரமபதத்திலே தேஜஸ் போலே 145
6. கடலுக்குள்ளே மாணிக்கங்களடைய மறைந்து கிடக்குமா போலே 227

## ஆசார்யஹ்ருதயம் சூர்ணிகை

1. கிட்டமும் வேட்டு வேளானும் போலே 11
2. வத்சலையான மாதா பிள்ளை பேகணியாமல் மண் தின்னவிட்டு ப்ரத்யௌஷதமிடுமா போலே 14
3. தெப்பக்கையரைப் போலே 19
4. ஜாத்யாச்ரம தீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போலே 31
5. அத்யயனஜ்ஞானானுஷ்டங்களாலே ப்ராஹ்மண்யமாகிறாப் போலே 37
6. ஸகல வித்யாதிக வேதம் போலே 44
7. ஸ்ம்ருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தானென்றது போலே 46
8. உறக்கம் தலைக் கொண்ட பின்னை மறை நான்கும் உணர்ந்த தங்களப்பனோடே ஓதின சந்தச் சதுமுகன் சலங்கலந்த வெண்புரி நூல் மானுரி திரிதந்துண்ணும் காமனுடல் இருக்கிலங்கு ஜ்யேஷ்டபுத்ராதிகளுக்கு மறை பயந்தாப் போலே 49
9. இயற்பா மூன்றும் வேதத்ரயம் போலே 50

## அருளிச்செயல்ரஹஸ்யம் பக்கம்

# பின்னிணைப்பு - 6

## நாயனார் உரைகளில் இடம்பெற்றுள்ள

## மரபுவழக்குகளும் செறிவுத் தொடர்களும்

| | |
|---|---|
| 1. அஞ்சினான் புகலிடம் | திருப். ப. 319 |
| 2. அம்மான் பொடி | திருப் ப. 188 |
| 3. அருள் பாடிடல் | அமல. ப. 17 |
| 4. அறவிலை செய்து தருதல் | கண்ணி. ப. 54 |
| 5. அறவைத்தன படாதபடி | அமல. ப. 114 |
| 6. இட்டளத்தில் வெள்ளமாக்குதல் | திருப். ப. 401 |
| 7. இடுசிவப்பு | திருப். ப. 401 |
| 8. இரண்டடியாக இடுதல் | திருப். ப. 449 |
| 9. உண்டறுத்தல் | அமல. ப. 25 |
| 10. உருவச் செல்லும் | திருப். ப. 369 |
| 11. உழறு பால் | திருப். ப. 111 |
| 12. ஊற்று மாறாமை | திருப். ப. 94 |
| 13. எட்டுமிரண்டுமறியாதார் | திருப். ப. 286 |
| 14. எடுத்துக் கழிக்கை | திருப். ப. 416 |
| 15. எடுத்து விடுகை | திருப். ப. 398 |
| 16. ஒருக்காற் சொன்னாற் போலேஒன்பதிற்காற் சொல்லல் | திருப். ப. 398 |
| 18. ஒரு நீர்க் கோப்பாக | திருப். ப. 398 |
| 19. ஒழிஞ்சானமுட்டாய் இருப்பது | கண்ணி. ப. 49 |
| 20. கட்டணமாய்க் கிடத்தல் | திருப். ப. 140 |
| 21. கடைவெட்டிவிட்டு | திருப். ப. 321 |
| 22. கண்ணற்று முடிக்கை | திருப். ப. 356 |
| 23. கண்ணைப் பட்டினி கொள்ளுதல் | திருப். ப. 201 |
| 24. கதிர் பொறுக்குதல் | திருப். ப. 417 |
| 25. கமர் பிளந்த நெஞ்சு | திருப். ப. 470 |

| | |
|---|---|
| 26. கரைமரம் சேர்தல் | கண்ணி. ப. 27 |
| 27. கலந்த கட்டியாக | கண்ணி. ப. 24 |
| 28. கருந்தரையிலே உபதேசித்தல் | கண்ணி. ப. 29 |
| 29. குடநீரோடே போதல் | திருப். ப. 342 |
| 30. குமிழி நீருண்ணுதல் | திருப். ப. 243 |
| 31. குளப்படியாய் இருத்தல் | திருப். ப. 449 |
| 32. குறுவிழி கொள்ளுகை | திருப். ப. 400 |
| 33. குன்னாங்குச்சியாக | திருப். ப. 398 |
| 34. கைகைழியப் போனவர்கள் | திருப். ப. 398 |
| 35. கையெடா நிற்றல் | கண்ணி. ப. 122 |
| 36. கையோலை செய்து கொடுத்தல் | திருப். ப.398 |
| 37. கை வழி மண் | கண்ணி. ப. 122 |
| 38. கோல் தேனாக அநுபவித்தல் | அமல. ப. 8 |
| 39. சிலுகிடாதே கொள்ளுதல் | திருப். ப. 266 |
| 40. சிறு முறி மறிக்கும்படி | திருப். ப. 107 |
| 41. சீறு பாறு என்னுதல் | திருப். ப. 111 |
| 42. செம்பால் பாய்ந்து என்னுதல் | அமல. ப. 101 |
| 43. தண்ணீர் தண்ணீர் என்னும்படி | திருப். ப. 200 |
| 44. தண்ணீர்த் துரும்பு | கண்ணி. ப. 195 |
| 45. தரம் கெடுத்து | திருப். ப. 229 |
| 46. தெகுடாடுதல் | கண்ணி. ப. 209 |
| 47. தொங்கும்படி | கண்ணி. ப. 198 |
| 48. தொடைகுத்தி உறங்குதல் | திருப். ப. 162 |
| 49. தோள் தீண்டியான | திருப். ப. 285 |
| 50. நடைச்சக்ரவர்த்துப் பிடித்தல் | திருப்.ப. 402 |
| 51. நரிப் பூணூலிடல் | திருப். ப. 91 |
| 52. நுடங்கிப் பாடுதல் | திருப். ப. 265 |
| 53. நூறு குளிக்கு நிற்கும் | திருப். ப. 202 |
| 54. பசுகு பசுகென்று இருத்தல் | திருப்.ப. 265 |
| 55. பட்டங் கட்டுகை | திருப். ப. 128 |
| 56. பட்டோலை எழுதச் சொல்லல் | கண்ணி. ப. 127 |
| 57. படிவிடல் | கண்ணி. ப. 107 |

| | |
|---|---|
| 58. படுக்கையறையில் வார்த்தை | திருப். ப. 123 |
| 59. படுக்கைப் பற்று | திருப். ப. 340 |
| 60. படுகுலையடித்தல் | திருப். ப. 229 |
| 61. பத்தும்பத்தாக | கண்ணி. ப. 151 |
| 62. பத்தெட்டுத் திருமுகம் மறுக்கப் பெறுதல் | திருப். ப. 287 |
| 63. பத்தொன்பதாம் பாஷை | திருப். ப. 200 |
| 64. பதர் கழித்துக் கார்யம் தலைக்கட்டுதல் | திருப். ப. 354 |
| 65. பல் பன்னிரண்டுங் காட்டுதல் | திருப். ப. 188 |
| 66. பருப்பருத்தன | திருப். ப. 469 |
| 67. பாடாற்றினபடி | திருப். ப. 449 |
| 68. பாலிலேயுண்டு பனியிலே கிடத்தல் | திருப். ப. 285 |
| 69. பாலும் சோறுமிட்டு வளர்த்தல் | திருப். ப. 492 |
| 70. பாறு பாறாம்படி | கண்ணி. ப. 170 |
| 71. பாற வடித்தல் | கண்ணி. ப. 195 |
| 72. புதைத்து விடுதல் | திருப். ப. 109 |
| 73. பெரும்பானை கண்டபின்பு | திருப்.ப. 267 |
| 74. மடிகோலுதல் | திருப். ப. 92 |
| 75. மடிச்சரக்கு | கண்ணி. ப. 142 |
| 76. மல் கட்டாகக் கட்டல் | திருப். ப. 337 |
| 77. மஹாபாரதம் நடவா நிற்றல் | திருப். ப. 341 |
| 78. மின்மினி பறவா நிற்றல் | அமல. ப. 86 |
| 79. முழங்கைத் தண்ணீர் | கண்ணி. ப. 146 |
| 80. முற்பாடு கொடாதே | திருப். ப. 337 |
| 81. மூலையடியே நடத்தல் | திருப். ப. 303 |
| 82. மெய்க்காட்டுக் கொள்ளுதல் | திருப். ப .242 |
| 83. மேலெழுத்திடல் | திருப். ப. 242 |
| 84. வரவிட்ட படுக்கை | திருப். ப. 340 |
| 85. வரவுக்கு நோவுபடுகிறவன் | திருப். ப.514 |
| 86. வாய் வாய் எனல் | திருப். ப. 342 |
| 87. வாரிப்பிடியாகப் பிடித்தல் | திருப். ப. 489 |
| 88. விளைநீரடைத்துக் கொண்டு | திருப். ப. 166 |
| 89. விரகிட்டுப் பாடுதல் | திருப். ப. 198 |

# பின்னிணைப்பு - 7

## நம்மாழ்வார் மங்களாசாஸனம் செய்துள்ள திவ்ய தேசங்களுக்கு ஆசார்ய ஹ்ருதயத்தில் காட்டப்படும்

### திருக்கல்யாணகுணங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவரங்கம் | ஸௌஹார்த்தம் | 159 |
| 2. | திருவேங்கடம் | வாத்ஸல்யம் | 160 |
| 3. | திருக்குருகூர் | பரத்வம் | 161 |
| 4. | திருக்குறுங்குடி | லாவண்யம் | 162 |
| 5. | சிரீவரமங்கை | ஔதார்யம் | 163 |
| 6. | குடமூக்கு | மாதுர்யம் | 164 |
| 7. | திருவல்லவாழ் | கிருபை(அருள்) | 165 |
| 8. | திருவண்வண்டூர் | ஸ்தைர்யம் (உறுதி) | 166 |
| 9. | திருவிண்ணகர் | சேராதனவற்றைச்சேர்த்தல் | 167 |
| 10. | திருத்தொலைவில்லிமங்கலம் | பொருந்தா உறவு | 168 |
| 11. | திருக்கோளூர் | ஆபத்துக்கு உதவுதல் | 169 |
| 12. | தென் திருப்பேரெயில் | ஸௌந்தர்யம்(அழகு) | 170 |
| 13. | திருவாறன்விளை | ஆனந்தவளர்ச்சி | 171 |
| 14. | திருக்குளந்தை | செயல்களின் ஆச்சரியம் | 172 |
| 15. | திருவண்பரிசாரம் | ஸௌகுமார்யம்(மென்மை) | 173 |
| 16. | திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு | சூரத்தன்மை | 174 |
| 17. | திருக்கடித்தானம் | செய்ந்நன்றியறிதல் | 175 |

# பின்னிணைப்பு - 8

## நம்மாழ்வார் இனி இனியென்று இருபதின்கால் கூப்பிட்டது

| | | |
|---|---|---|
| 1. | இனியாமுறாமை | திருவிருத்தம் 1 |
| 2. | இனி வளை காப்பவரார் | திருவிருத்தம் 13 |
| 3. | இனியுன் திருவருளாலன்றி | திருவிருத்தம் 12 |
| 4. | இனியவர்கண் தங்காது | திருவாய்மொழி 1–4–4 |
| 5. | இனியுனது வாயலகில் | திருவாய்மொழி 1–4–8 |
| 6. | இனியெம்மைச் சேரேலே | திருவாய்மொழி 2–1–10 |
| 7. | எந்நாள் யானுன்னை இனிவந்து | திருவாய்மொழி 3–2–1 |
| 8. | எங்கு இனித் தலைப் பெய்வனே | திருவாய்மொழி 3–2–9 |
| 9. | இனியென்னாரமுதே கூவியருளாயே | திருவாய்மொழி 4–9–6 |
| 10. | ஆவிகாப்பார் இனியார் | திருவாய்மொழி 5–4–2 |
| 11. | நெஞ்சிடர் தீர்ப்பார் இனியார் | திருவாய்மொழி 5–4–9 |
| 12. | இனியுன்னை விட்டொன்றும் ஆற்ற கிற்கின்றிலேன் | திருவாய்மொழி 5–7–1 |
| 13. | தரியேன் இனியுன் சரணம் தந்து | திருவாய்மொழி 5–8–7 |
| 14. | இனியாரைக் கொண்டு என் உசாகோ | திருவாய்மொழி 7–3–4 |
| 15. | அத்தனையாம் இனி என்னுயிர் | திருவாய்மொழி 9–5–2 |
| 16. | நாரைக் குழாங்கள்காள் பயின்று என் இனி | திருவாய்மொழி 9–5–10 |
| 17. | இனி இருந்து என் உயிர்காக்குமாறென் | திருவாய்மொழி 9–9–2 |
| 18. | இனி நான் போகலொட்டேன் | திருவாய்மொழி 10–10–1 |
| 19. | உண்டிட்டாய் இனி உண்டொழியாய் | திருவாய்மொழி 10–10–6 |
| 20. | உன்னைப் பெற்று இனிப் போக்குவனோ | திருவாய்மொழி 10–10–7 |

# துணைநூற் பட்டியல்

## 1. மணிப் பிரவாள நூல்கள்


### அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, பி.ப.,

"ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலா", ஸ்ரீராமாநுஜ பத்ரிகை வெளியீடு, காஞ்சிபுரம் 1953.

"திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரை" (பத்துத் தொகுதிகளில்), கிரந்த மாலா வெளியீடு, காஞ்சிபுரம், 1949–57.

(ப.ஆ)"பகவத் விஷயம்" (மூன்று வியாக்கியானங்களுடன்), காஞ்சிபுரம் 1976.

"ஆசார்யஹ்ருதய ஸாரம்" ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபா மதராஸ் (தமிழ்ப் பிரசுரம் நெ.4) 1948.

"ஆசார்ய ஹ்ருதயப் பதவுரை" மதராஸ் ரத்னம் பிரஸ் 1957 (ஸ்ரீ ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி நினைவு மாலையின் எட்டாவது மலராக வெளியிடப்பட்டது)

"ஆசார்ய ஹ்ருதய பாட பரிஷ்காரம்", கிரந்தமாலா வெளியீடு, காஞ்சீபுரம், 1957

### அண்ணாவப்பங்கார் ஸ்வாமி

"பழநடை விளக்கம்", ஸ்டார் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை.1891.

### அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்

"அமலனாதிபிரான் வியாக்கியானம்", ஸ்ரீவைஷ்ணவ கிரந்த முத்ராபக ஸபை வெளியீடு, காஞ்சீபுரம் 1915

"ஆசார்ய ஹ்ருதயம்" (மணவாளமாமுனிகள் வியாக்கியானத்துடன்) (ப.ஆ), அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, காஞ்சீபுரம், 1970.

"ஆசார்யஹ்ருதயம்"(மணவாளமாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கத்துடன்) (மொ.பெ.ஆ) புருஷோத்தம நாயுடு பு.ரா. சென்னைப் பல்கலைக்கழகம், 1965.

"அருளிச் செயல் ரஹஸ்யம்" ஸ்ரீநிவாஸம் பிரஸ், திருச்சி, 1972

"கண்ணிநுண்சிறுத்தாம்பு வியாக்கியானம்" (ப.ஆ.) எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் திருச்சி 1956

"திருப்பாவை ஆறாயிரப்படி வியாக்யானம்" அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, பி.ப. (ப.ஆ.) காஞ்சீபுரம் 1970

### கிருஷ்ணமாசாரியர் சே.

(ப.ஆ) "பகவத் விஷயம்"(ஐந்து வியாக்கியானங்களுடன்) பத்துத் தொகுதிகள் நோபிள் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி, 1925–1930.

### கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் எஸ்.

"ஆழ்வார் ஆசார்யர் வைபவம்", பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ஸபா பொன்விழா மலர், மூன்று பகுதிகள் ஸ்ரீநிவாசம் பிரஸ், திருச்சி, 1978.

(ப.ஆ) "கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானங்கள்" (ஐந்து வியாக்கியானங்களுடன்) திருச்சி, 1956.

(ப.ஆ.) "திருப்பாவை வியாக்கியானங்கள்", திருச்சி, 1991

(ப.ஆ) "நாலாயிர திவ்யப்ரபந்தம்" திருச்சி, 1987.

(ப.ஆ.) "பெரியதிருமடல் வியாக்கியானங்கள்" ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு திருச்சி 1995.

### கோயில் கந்தாடை நாயன்

"பெரிய திருமுடி அடைவு", (ப.ஆ.) கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார். எஸ், திருச்சி, 1968.

### நம்பிள்ளை

"திருவிருத்த வியாக்கியானம்" ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ வெளியீடு, சென்னை 1996.

### பிள்ளைலோகசார்யர்

"அஷ்டாதச ரஹஸ்யம்", (ப.ஆ.) கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் எஸ், திருச்சி,1987.

"தத்வத்ரயம்"(மணவாள மாமுனிகள் வியாக்கியானத்துடன்), ஸ்ரீவானமாமலை மடம் வெளியீடு, ஸ்ரீரங்கம், 1950.

"முமுக்ஷுப்படி"(மணவாளமாமுனிகள் வியாக்கியானத்துடன்), (ப.ஆ) எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் எஸ், (ப.ஆ) திருச்சி, 1970.

"ஸ்ரீவசனபூஷணம்" (மணவாள மாமுனிகள் வியாக்கியானத்துடன்), (ப.ஆ) அண்ணங்கராசார்யர் ஸ்வாமி பி.ப. காஞ்சீபுரம், 1970.

"ஸ்ரீவசனபூஷணம்" (மணவாளமாமுனிகள் வியாக்கியானத் தமிழாக்கத்துடன்) (மொ.பெ.ஆ) புருஷோத்தம நாயுடு பு.ரா. கடலூர், 1970.

## பிள்ளைலோகம் சீயர்

"யதீந்த்ரப்ரவணப்ரபாவம்" ஆனந்தா பிரஸ், சென்னை, 1907.

## பின்பழகிய பெருமாள் சீயர்

"ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம்" (ப.ஆ.) எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், திருச்சி 1968.

"வார்த்தாமாலை" (ப.ஆ.) எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், திருச்சி 1983.

## பெரியவாச்சான்பிள்ளை

"அமலனாதிபிரான் வியாக்கியானங்கள்" ஸ்ரீ வை.கி.மு. ஸபை வெளியீடு, காஞ்சீபுரம், 1915.

"திருக்குறுந்தாண்டகம் திருநெடுந்தாண்டக வியாக்கியானங்கள்" (ப.ஆ.) கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், எஸ், திருச்சி 1993.

"திருச்சந்தவிருத்த வியாக்கியானம்" ஸ்ரீ வை.கி.மு. ஸபை வெளியீடு, காஞ்சீபுரம், 1915

"திருப்பல்லாண்டு வியாக்கியானம்" ஸ்ரீ வை.கி.மு. ஸபை வெளியீடு, காஞ்சீபுரம் 1909.

"திருப்பல்லாண்டு வியாக்கியானம்" (ப.ஆ) ஸ்ரீநிவாஸ ஐயங்கார், திருச்சி.

"பெருமாள் திருமொழி வியாக்கியானம்" (ப.ஆ) எஸ்.கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், திருச்சி 1993.

"திருப்பள்ளியெழுச்சி வியாக்கியானம்" ஸ்ரீ வை.கி.மு.வெளியீடு. காஞ்சீபுரம், 1915.

"திருமாலை வியாக்கியானம்" (ப.ஆ) ஸ்ரீநிவாஸ ஐயங்கார் கே. திருச்சி 1952.

"திருவாசிரியம் பெரிய திருவந்தாதி வியாக்கியானங்கள்" (ப.ஆ) ஸ்ரீநிவாஸ ஐயங்கார் கே., திருச்சி 1952.

"திருவிருத்த வியாக்கியானம்" ஸ்ரீ வை.கி.மு ஸபை வெளியீடு, சென்ன 1904.

"திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் வியாக்கியானங்கள்" ஸ்ரீ.வை.கி.மு. வெளியீடு, 1916.

"நாச்சியார் திருமொழி வியாக்கியானம்", (ப.ஆ) எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், திருச்சி 1954.

"பெரிய திருமொழி வியாக்கியானம்" (அப்பு அரும்பதத்துடன்) மூன்று தொகுதிகள் ஸ்ரீ வை.கி.மு. ஸபை வெளியீடு, காஞ்சீபுரம், 1908–1911.

"முதல் நான்கு திருவந்தாதி வியாக்கியானங்கள்", ஸ்ரீ. வை.கி.மு ஸபை வெளியீடு, 1901.

### மணவாளமாமுனிகள்

"ஆர்த்திப்ரபந்தம்" (பிள்ளைலோகஞ்சீயரின் வியாக்கியானத்துடன்) ஸ்ரீ.வை.கி.மு ஸபை வெளியீடு, சென்னை 1918.

"இராமாநுச நூற்றந்தாதி வியாக்கியானம்" ஸ்ரீவைஷ்ணவ கிரந்த முத்ராபக ஸபை வெளியீடு, சென்னை, 1906.

"உபதேசரத்தினமாலை" (பிள்ளைலோகஞ்சீயரின் வியாக்கியானத்துடன்) ஸ்ரீ வை கி.மு ஸபை வெளியீடு. சென்னை 1916.

"பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம்" (திருவாய்மொழிப் பிள்ளை ஸ்வாபதேசம், பெரியவாச்சான்பிள்ளையின் இறுதி 41 பாசுர வியாக்கியானம் இவற்றுடன்) இரண்டு தொகுதிகள் ஸ்ரீ.வை.கி.மு ஸபை வெளியீடு காஞ்சீபுரம், 1912–1914.

"திருவாய்மொழி நூற்றந்தாதி"(பிள்ளைலோகஞ்சீயரின் வியாக்கியானத்துடன்) ஸ்ரீ.வை.கி.மு ஸபை வெளியீடு. காஞ்சீபுரம்,1916.

### வேதாந்த தேசிகர்

"ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம்" (இரண்டு பாகங்கள்) (ப.ஆ) நவநீதம் ஸ்ரீராம தேசிகாசாரியர், கும்பகோணம், 1960–61.

## 2. தமிழ் நூல்கள்

### அரங்கராஜன், இரா.

"திருவாய்மொழிப் பேருரையாளர் நம்பிள்ளை உரைத்திறன்" கோனார் பிரிண்டர்ஸ், மதுரை, 1986.

### அரங்கநாத முதலியார் .ஆ

(தொ.ஆ) "பகவத் விஷயம்" சுவர்ண விலாஸ், திருவல்லிக்கேணி, 1939.

**அரவிந்தன் மு.வை.**

"உரையாசிரியர்கள்" மணிவாசகர் நூலகம் சிதம்பரம் 1968–1977.

**அருணாசலம், மு.**

"தமிழ் இலக்கிய வரலாறு" பதினான்காம் நூற்றாண்டு, காந்தி வித்யாலயம் மாயூரம் 1969.

**ஞானசுந்தரம் தெ.**

"வைணவ உரைவளம்" மாருதி அச்சகம், சென்னை 1989.

**சஞ்சீவி, ந.**

(பொ.ப.ஆ) "தெய்வத்தமிழ்" சென்னைப் பல்கலைகழகம் 1975.

**தாமோதரன், கு.**

"ஆழ்வார் திருவுள்ளம்", பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1978

**நரசிம்மாசாரி, எம்.**

(ப.ஆ) "அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஆற்றிய வைணவப்பணி", வைணவத் துறை, சென்னைப் பல்கலைக்கழகம், 1992.

**புருஷோத்தம நாயுடு, பு.ரா.**

(மொ.பெ.ஆ) "பகவத் விஷயம் – திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம்" பத்துத் தொகுதிகள், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை 1961–1973.

**பூமா வேங்கடகிருஷ்ணன், ம.அ.**

"நஞ்சீயர் ஆற்றிய வைணவசமயப்பணி" கீதாசார்யன் பதிப்பகம், திருவல்லிக்கேணி 1996.

**வரதராஜன் மா.**

"பன்னீராயிரப்படி ஓர் ஆய்வு" ஸ்ரீ கோமதி அச்சகம், சென்னை 1989.

## 3. ஆங்கில நூல்கள்

**Damodharan G.**

"Acarya Hrdayam -A Critical Study", Thirumala Tirupathi Devasthanams, Thirupathi 1976.

**Gopinath Rao T.**

"A History of Srivaishnavas" Madras 1923. Jagadeesan, "History of Srivaishnavism in the Tamil Country Post Ramanuja" Koodal Publishers, Madurai 1977.

**Narasimhachary M.**

"Contribution of Yamuna to Visistadvaita", Prof. M.Rangacharya Memorial Trust, Madras 1971.

**Ramanujam B.V.**

"History of Sri Vaishnavism in south India upto Ramanuja" Annamalai University.1973.

**Srinivasachari P.N.**

"The Philosophy of Visishtadvaita" The Adyar Library Series, 1978.

**Subbu Reddiar N.**

"Religion and Philosophy of Nalayiram with special reference to Nammalwar", Sri Venkateswara University Thirupathi 1977.

**Vasudha Narayanan**

"The Tamil Veda - Pillan's interáetations of Thiruvoimozhi" John Corman and Vasudha Narayan, The University of Chikago Press, U.S.A 1989.

"The Vernacular Veda - Revelation, Recitation and Rituals" The University of South, Carolina Press, U.S.A 1994.

**Venkatachari K.K.A.**

"Srivaishnava Manipravala" Ananthacharya Research Institute Series, Bombay 1978.

**Venkatakrishnan M.A.**

"Jijnasadhikarana of Sri Bhashya - A Study" Geethacharyan Publications, Madras, 1991.

"The Tattvasara of Vatsya Varadaguru" Geethacharyan Publications, Madras 1995.

# நூலாசிரியரைப் பற்றி



திருமணி அப்பன் ஸ்வாமிகளின் திருவடி ஸம்பந்தம் பெற்ற டாக்டர் ராஜலக்ஷ்மி அவர்கள் திருவஹீந்த்ரபுரம் தேவநாத ஐயங்கார் ஸ்வாமிக்கும், திருமதி செங்கமலம் அவர்களுக்கும் மூத்த மகளாகப் பிறந்து, ஸ்ரீ உ.வே. ராமானுஜம் அவர்களைக் கணவராக அடையும் பேறு பெற்றவராவார். B.Com. பட்டம் பெற்ற இவர் வைணவத்தில் M.A. பட்டமும் பெற்று முதல் நிலையில் (First Rank) தேறினார். பிறகு Ph.D. பட்டத்திற்கு "அழகியமணவாளப்பெருமாள் நாயனாரின் அருளிச் செயல்கள்" என்ற தலைப்பில் ஆய்வு செய்து சென்னைப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றார்.

நாலாயிர திவ்வியப்பிரபந்தம், ஸ்தோத்ரங்கள், ரகசிய கிரந்தங்கள் முதலியவற்றைத் தம் தகப்பனாரிடமே கற்ற டாக்டர் ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி அவர்கள் ஹிந்தியில் ப்ரவீண் வரை படித்துள்ளார். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய விஷயங்களை ஸ்ரீ உ.வே. டாக்டர் எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன் ஸ்வாமியிடம் பயின்ற இவர், கைவினைப் பொருள்கள் செய்வதிலும் மிகமிக வல்லவர்.